# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

## Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்

# அச்சுப்பதிப்பு

கருமேகம் கலைந்த பொழுதுகள்
ஆசிரியர் - ஆனந்த் ஶ்ரீனிவாசன்
உரிமை  - ஆனந்த் ஶ்ரீனிவாசன்
முதல் பதிப்பு - ஜனவரி 2024
பக்கங்கள் - 164
தாள் - 80 ஜிஎஸ்எம்
எழுத்துரு - ATM 052 | ATM 280 | 12pt
விலை - ₹ 165 /-
வடிவமைப்பு மற்றும் அச்சகம் - சன் கிரியேசன்ஸ், காரைக்குடி +91-9578078500
பதிப்பாளர் - பாண்டியன் – வைகை பதிப்பகம்,
பிளாட் எண். 102, செல்லப்பா நகர்,
கழனிவாசல், காரைக்குடி - 630 002
அலைபேசி : 9942847919 / 9688303124

# சமர்ப்பணம்



ஆர். அனந்தச்சாரியார் - ஸ்ரீரெங்கநாயகி

எனக்கு உயிர் கொடுத்து, என்னை நல்வழிப்படுத்தி, நல்ல கல்வி கொடுத்த என் தாய் ஸ்ரீ ரெங்கநாயகி என் தந்தையார் ஆர். அனந்தச்சாரியார் அவர்களுக்கு இந்த சிறுகதை நூல் சமர்ப்பணம்..

# வாழ்த்துரை

மனித வாழ்க்கையோடு நெருங்கி இருப்பது சிறுகதை இலக்கியம். வாழ்வியலின் அனுபவங்களும், எண்ணங்களும், சிந்தனைகளும் சிறுகதைகள் ஆகிறபோது, படைப்பிலக்கியம் பதிவு செய்யப்படுகிறது. இது சமகால, எதிர்கால படிப்பாளிகளுக்கு சமூகம் குறித்தும், மனித மனங்கள் குறித்தும் புரிதலை உருவாக்கி விடுகிறது.

சிறுகதைகள் படைப்பது சாதாரண விஷயம் அல்ல, சிறுகதைகளுக்கு தேர்ந்த மொழிநடை வேண்டும், கதை சொல்லும் உத்தி, சமூக சிந்தனை , சமூக மாற்றத்திற்கான செய்தி என்று பல்வேறு பரிமாணங்களைப் பெற்றது சிறுகதைகள்.

சிறுகதைகள் வார்த்தைகளால் எழுதப்படுவது அல்ல, வாழ்வியலோடு எழுதப்படுவது என்பதற்கு அடையாளம் தான் ஆனந்த் சீனிவாசன் அவர்கள் எழுதிய "கருமேகம் கலைந்த பொழுதுகள்" எனும் சிறுகதைத் தொகுப்பு நூல்.

எதிர்ப்படும் மனிதர்களையும், கடந்து செல்லும் நிகழ்வுகளையும் தனது நடையில், தனது மொழியில் மிக அழகாக படம் பிடித்து வைத்திருக்கும் இந்த சிறுகதைத் தொகுப்பு நூலை வாசிக்கிறபோது வசந்தங்கள் மனதில் கூடு கட்டிக் கொள்கிறது.

அக்கிரகாரத்துச் சொல்லாடல் தேனில் ஊறிய பலாச்சுளை போல, மனதை மயக்கி விடுகிறது, வசீகரித்து விடுகிறது.

இவரது "இறுக முடிய கதவுகள்" எனும் சிறுகதையில் மனித மனங்களின் சூதும், வாதும், குணமும், கோபமும், உணர்வும், மகிழ்வும் உருக்கி ஊற்றப்பட்டிருக்கிறது. அக்கிரகாரத்தில் நுழைந்த ஸ்ரீராம் அனைவர் இதயங்களிலும் நுழைய ஏதோ ஒரு ஈர்ப்பு அவனுக்குள் புதைந்திருப்பதை வெளிப்படுத்தும் அற்புதமான கதை.

இந்த சிறுகதையை வாசிக்கிறபோது நிறைய ஆச்சரியங்கள் விரிகிறது. ஒரு மனிதன் மீது விழும் நம்பிக்கையும், அன்பும், பரிவும், பாசமும், விலகாத நேசமும் இறுதியில் அது சொந்தமாகிறபோது வாசிப்பவர்கள் மனது இளைப்பாறி விடுகிறது, சிலாகித்துவிடுகிறது.

"அடிப்பிரதட்சணம்" எனும் சிறுகதையும் அக்கிரகாரத்தில் நடக்கும் சிறுகதை தான். இதயத்தில் ஈரம் சொட்டச் சொட்ட எழுதப்பட்ட கதை இது. ஒரு கைம்பெண்ணின் இயல்பு வாழ்வும், அவள் அடைந்த வலிகளும், மகளை கரை சேர்த்து மணம் முடித்து வைக்க படும் துன்பங்களும், துயரங்களும், மிக அழகாக கோடிட்டு காட்டப் பட்டுள்ளது.

அடிப்பிரதட்சணம் செய்வது ஆரோக்கியமானது என்பதை மிக அழகாக சொல்லப்பட்ட ஒரு அற்புதமான கதை.

கருமேகம் கலைந்த பொழுதுகள் சிறுகதை இந்த புத்தகத்தின் ஆணி வேராக இருக்கிறது.இதையே தலைப்பாக வைத்திருப்பது மற்றுமொரு சிறப்பு.

இந்த சிறுகதை சமூக மாற்றத்திற்கான விதை என்றே சொல்லலாம். அத்தனை வீரியம் இந்த விதைக்குள் புதைந்திருக்கிறது.

விளிம்பு நிலை மக்களை, ஒடுக்கப்பட்ட மக்களை அரசாங்கம் வேலை கொடுத்து சமூக மாற்றத்தை உருவாக்கினாலும், உயர் சாதி மனிதர்கள் அதை ஏற்றுக்கொள்ள மறுப்பதும், சாதிய வேறுபாடுகளால் தபால்காரரால் தபால்களை கொடுக்க முடியாத சூழல் உருவாகிற போது, மேல்தட்டு மார்க்கத்திலிருந்து ராகவன் என்னும் கதாபாத்திரம் புயலாய் புறப்பட்டு வந்து அழுக்ககேறிய மனிதர்களின் அழுக்குகளை அகற்றி, எல்லோரும் சமம் என்று உரக்கச் சொன்ன கதை இது. சமூக மாற்றத்தின் அடையாளம் இந்த சிறுகதை. இதைப் போன்ற கதைகளை எழுத யாரும் துணியாத போது ஆனந்த் சீனிவாசன் துணிச்சலாய் எழுதியமைக்கு ஆயிரம் பூச்செண்டுகள் பரிசளிக்கலாம்.

இந்த புத்தகத்தில் இடம் பிடித்த இன்னொரு கதை ஒரே தீர்வு. குழந்தையின் பாசத்திற்காக ஏங்கும் ஒரு பாட்டியின் கதை. தன் உணர்வுகளை, வலிகளை குழந்தையின் முகம் பார்த்து மறந்து போகும் சூழலில் குழந்தையின் பிரிவு பெரும் பாதிப்பை ஏற்படுத்தி எதிர்காலத்தை சூனியம் ஆக்கிவிடும் சூழலில் குழந்தையுடன் தொடர்பு ஏற்படுத்தி பார்ட்டியின் எஞ்சிய நாட்களை சுகமான நாட்களாக மாற்றிய பெருமை ஆகாஷ் என்ற கதாபாத்திரத்திற்கு தந்து உணர்வுபூர்வமான கதை ஆக்கி இருக்கிறார் நூலாசிரியர் ஆனந்த் சீனிவாசன்.

இப்படி சொல்லிக் கொண்டே போகலாம் இவரது அத்தனை சிறுகதைகளையும். கருமேகம் கலைந்த பொழுதுகள் எனும் இந்த நூல் பல்வேறு தரப்பட்ட மக்களின் வாழ்வியலை வசமாக்கிய சிறுகதை தொப்பு நூல் என்று உறுதியாக சொல்ல முடியும். இவர் மேலும் பல படைப்புகள் கண்டு மகிழ வாழ்த்துகிறேன்.

அன்புடன்<br>ஐரேனிபுரம் பால்ராசய்யா<br>தமிழக அரசின் கலை நன்மணி விருதாளர்

# என்னுரை

1972ம் ஆண்டுத் தபால் துறையில் அஞ்சல் உதவியாளராக நுழைந்து கண்காணிப்பாளர் gazetted ஆஃபீஸராக உயர்ந்து 31 oct 2010 அன்று ஓய்வு பெற்றேன். சிறு வயதில் இருந்தே படிக்கும் ஆர்வத்தை ஏற்படுத்தியவர் என் தந்தை. 1990ல் தினமணி ஆராய்ச்சி மணியில் முதல் சமூகப் பிரச்சனை கடிதம். எழுத தொடங்கி, துக்ளக், பாக்யா,குங்குமம் குமுதம், முத்தாரம், கல்கி, ஜூனியர் விகடன், ஜூனியர் போஸ்ட், தராசு, நெற்றிக்கண் போன்ற இதழ்களில் துணுக்குகள் வாசகர் கடிதமெனப் பலவற்றை எழுதியிருக்கிறேன்.

அதன்பின் பாஞ்சஜன்யம், குங்குமம், கல்கி, தினமலர், வாரமலர் தினமணி கதிர் தேன்சிட்டு ஆரண்ய நிவாஸ், முதலெழுத்து போன்ற இதழ்களில் சிறுகதைகள் என வலம் வருகிறேன். வாரமலரின் TVR நினைவு சிறுகதை போட்டியில், மூன்று முறை ஆறுதல் பரிசு பெற்றுள்ளேன்.

இதுவரை 75 கதைகள் எழுதி உள்ளேன். இன்னும் நிறையச் சமூகம் சார்ந்த கதைகள் எழுத விருப்பம்.

“வானம் தொட்டுவிடும் தூரம்தான்” என் முதல் கதை தொகுப்பு. கடந்த 2022 ஜனவரியின் போது வெளியிடப்பட்டது.

விடியலுக்கு இல்லை தூரம் என்கிற எனது இரண்டாவது கதைத் தொகுப்பு த மு எ க ச கோட்டூர் கிளையின் ஆண்டு விழா போது 2023 மார்ச் அன்று வெளியிடப்பட்டது.

இதோ மூன்றாவது தொகுப்பு கருமேகம் கலைந்த பொழுதுகள் .

பொதுவாகசிறு வயது முதற்கொண்டே தீண்டாமைக்கு எதிராக என் குரல் இருந்து வரும். அதற்கு ஒரு சம்பவம் தான் காரணம்.அன்று நான்காம் வகுப்பு படிக்கும் போது காலைஇடைவேளை நேரத்தில் பள்ளிக்கூடம் அருகில் உள்ள குழாயில் ஒரு தலித் பெண்மணிக்காக தண்ணீர் அடித்துக் கொடுத்ததற்காகக் கற்பித்த ஆசிரியர் என் மாமாவிடம் கோள்சொல்லி அடி வாங்க வைத்த சம்பவம் என்னுள் தீண்டாமைக்கு எதிராகக் குரல் கொடுக்க முடிந்தது. இதில் சிறப்பு என்னவென்றால் அன்று அவர் பாரதியார் பாடம் நடத்தி “சாதிகள் இல்லையடி பாப்பா”என்பது தான். அந்தக் கதை தான் கீச்சு மூச்சு சார் கதை..

பிற்பாடு நான் வேலை பார்க்கும் போது கண்டுற்ற சம்பவம் தான் கருமேகம் கலைந்த பொழுதுகள். இந்த நூறாண்டிலுமா ஜாதி பிரச்சனை உள்ளது? என்கிற கேள்வி கேட்போர் மத்தியில் நான் சொல்வது ஆம் இன்றைக்கும் எவ்வளவு மாற்றம் வந்தாலும் என் ஜாதி என் ஆள் என்று பறை சாற்றுவதுடன் மட்டுமல்லாமல் வீதிக்கொரு ஜாதி அதற்கொரு சங்கம் இல்லாமல் இல்லை நான் பணி புரிந்த காலத்தில் அஞ்சல் அலுவலகத்தில் ஒரு கடை நிலை ஊழியனுக்கு ஏற்பட்ட கண்ணீர் துளிகளைத் துடைத்து ஒரு மாற்றத்தை கொண்டு வந்த கதை தான். கருமேகம் கலைந்த பொழுதுகள். அதுவே இந்தச் சிறுகதை தொகுப்புக்குத் தலைப்பு.

என் கதையில் சமூக அக்கறையும் மனிதமும் எப்போதும் இருக்கும். சமூகத்தில் நடக்கும் அவல நிலையைக் கண்ணுற்று அதைச் சிறுகதை வடிவமாக வடித்துள்ளேன்

அந்த வகையில் இப்படியும் சில் உள்ளங்கள். மனிதமும் மாரி முத்தும் போன்ற கதைகள்.

ஒரு விளையாட்டு எப்படி வினை ஆனது அதன் மூலம் அவன் வாழ்க்கை எப்படித் தடம் புரண்டது பற்றிச் சொல்லும் கதை தான் விபரீத விளையாட்டு.

பாசம் என்பது விலைக்கு வாங்குவதில்லை. அது உள் உணர்வில் தானாகவே பிறக்கும். அப்படியொரு பாசபினைப்பில் கட்டுண்ட பாட்டிக்கும் பெயர்த் திக்கும் ஏற்பட்ட

மனபோராட்டம் ஒரே ஒரு சாதனத்தினால் முடிவுக்கு வந்து, அதற்குத் தீர்வும் சொல்லப்பட்ட கதை தான் ஒரே தீர்வு கதை.

இப்படிப் பல்சுவை கொண்ட இந்தப் பதினைந்து கதைகளும் ஒவ்வொன்றும் வித்தியாசமான ஒன்று. என்று நீங்கள் நம்பலாம்.

இந்தக் கதைத் தொகுப்புக்கு வாழ்த்துரை வழங்கிய ஐரினிபுரம் பால்ராசையா அவர்களுக்கு நன்றி. இந்த நூலை மிக அழகாக வெளியிடு செய்த பாண்டியன் வைகை பதிப்பகத்தார் அவர்களுக்கும் மிக அழகாக அச்சிட்டு வழங்கிய திரு லெனின் அவர்களுக்கும் நன்றி.

இந்த 15 கதைகளைப் பிரசுரித்த தேன்சிட்டு ஆசிரியர், மங்கையர் மலர் ஆசிரியர், தினமணி கதிர் ஆசிரியர், ஆரண்ய நிவாஸ் ஆசிரியர், முதலெழுத்து ஆசிரியர் மற்றும் பாஞ்சஜன்யம் ஆசிரியர் அவர்கள் எல்லோருக்கும் என் நன்றிகள்.

அன்புடன்

ஆனந்த் ஸ்ரீனிவாசன்
சென்னை - 89
Mobile : 9444958521

# 1. கருமேகம் கலைந்த பொழுதுகள்

காவேரி ஆறின் கிளை ஆறுகளில் ஒன்றான, முள்ளியாறு கரையின் ஒரம் அமைந்திருந்தது அந்த ஊர். மெயின் ரோடு பேருந்து நிறுத்தத்தில் இருந்து, 200 மீட்டர் தூரத்தில் தான் தெருக்கள்தொடக்கம்..

எங்கும் பசுமை,. நீண்ட தென்னை மரங்கள், வாழை தோப்பு, என இயற்கை வளங்கள். குயில்களின் சப்தம் மனதுக்கு, கண்ணுக்கு ரம்மியத்தை

தந்தன. இயற்கையை ரசிப்பது அது ஒரு அலாதியானசுகம்.

அந்த அலுவலகம் அக்ராஹாரம் தெருவில், நுழையும் முன்னே, முதலில் இருந்தது. அது ஒரு தனிக் கட்டிடமாக இருந்தது.

போஸ்ட் ஆபீஸ்க்காக, அக்ரஹாரத்தில் ஒருவருடைய இடத்தில், நிரந்தரமாக வாடகையின்றி, தங்கள், சவுகரியத்துக்காக, அக்ரஹாராத்தை விட்டு, எங்கும் போகக் கூடாது என்று கருதி, இப்படி ஒரு பயன்பாட்டில் கிட்ட தட்ட 20 வருடங்களாக, செயலாற்றி வந்துள்ளது என்று.. தெரிய வந்தது. ராகவனுக்கு.

பிராஞ்ச்போஸ்ட்மாஸ்டர்வெளிஊரிலிருந்துவருவதால், அப்படியேபயன்பாட்டில்

இருந்து வந்துள்ளது..

வேலை நேரம் காலை 10மணி முதல் 2மணி வரை. கொஞ்சம் வேலைப்பளு அதிகம் உள்ள ஆபிஸ் தான். படித்தவர்கள் அதிகம் உள்ள ஊர்.

அன்று அந்தப் பிராஞ்ச் ஆபிஸ் ஆய்வுக்காக, ராகவன் உள்ளே நுழையும் போதே வாசலில் இருந்த நபர் பிராஞ்ச் போஸ்ட்மாஸ்டர் பேரை கூப்பிட்டு, ”என்ன பாலு? இன்னும்

உத்திராபதி வரலே? மணி 1030 ஆச்சு. !எப்போதும் டான்னு 10 மணிக்கு வரும் அவனுக்கு, என்ன ஆச்சு? ”என்று வெத்திலை புகையிலை குதப்பிக்கொண்டே கேட்டுக் கொண்டிருந்தார்.

பேசியவர் வயது 45 இருக்கும். படித்தவர் போல் தெரிந்தார். ஒரு அரசாங்க ஊழியனை, அவன் இவன் என்று பேசும் அளவிற்குஅவர் யார்? அடிப்படை நாகரீகம் கூடத் தெரியவில்லையே? என்கிற கேள்வி அவனுக்குள் எழுந்தது.

யார் இவர்? இவருக்கு என்ன வேண்டுமாம்?என்று அவன் போஸ்ட்மாஸ்டரி டம் கேட்ட போது, அவர் முந்திக்கொண்டு, தன் பெயர், தொழில் பற்றி ஆங்கிலத்தில் தன்னைப் பற்றி அறிமுகம் செய்து கொண்டார்.

ஒரு ஆபிசர் வந்தால், தன்னுடையமேதாவி தனம், வேற்று மொழிபுலமை போன்றவற்றை அவரிடம் காண்பிப்பது. இது எங்கும் பார்க்கக்கூடிய து தான்.

அக்ரஹாரா மக்களின் இயல்பு என்பது அவனுக்கு ஏற்கனவே தெரிந்தது தான்.

தஞ்சை மாவட்டம் மட்டுமல்ல, தமிழ்நாட்டில், எந்த ஊர் அக்ரஹாரா மக்களின் போக்கு இப்படித்தான்.

பின்பு அவரே, தான் ஒரு முக்கியக் கடிதம் எதிர்பார்ப்பதாகக் கூறவும், அவர் இருந்த இடத்தில் அமர சொன்னான் ராகவன்.. பதிலுக்கு அவர் ஒரு மெல்லிய புன்னகையைச் சிந்தியவாறே உக்கார்ந்து கொண்டார்…

ராகவன் வயது 35 இருக்கும். அந்தகோட்டதுக்கு, துணைகண்காணிப்பாளராகமாற்றலாகி, ஒரு மாதம் தான் ஆகியிருக்கும்.

உரத்த சிந்தனையும், சமூகப் பிரச்சினை எங்குக் கண்டாலும் அதைப் பத்திரிக்கையில் எழுதி, ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தும் போராளி; மனித நேயம் கொண்ட மனிதன்.

ஒவ்வொரு ஊரிலும், அந்த அலுவலக வேலை முடிந்த பிறகு, ஊரில் உள்ள சமூகப் பிரச்சனைகள் பற்றித் தெரிந்து கொண்டு, தினசரி செய்தித்தாளில் எழுதுவான்.

அப்படி எழுதி பிரசுரம் ஆனதில் சில சீர்திருத்தங்கள், பிரச்சனைகள் தீர்வு காணப்பட்டுள்ளன.

தன்னால் சமூகத்துக்கு ஏதாவது நல்லது செய்யவேண்டும் என்ற குறிக்கோள் உடையவன்..

உள்ளே இருந்து ஆய்வுக்கு உண்டான வேலைகளை, செய்து கொண்டிருக்கும் போது தான், கவனித்தான் ராகவன்.

அந்தப் புற நிலை ஊழியர், வயது 50. இருக்கும் சைக்கிளை ஆபிசின் எதிர்ப்புறம் 20அடி தள்ளி, உள்ள வேப்ப மரத்தின் நிழலில் வைத்து பூட்டிவிட்டு, செருப்பையும் அங்கே வைத்து விட்டு, வெறும் காலுடன் வேக வேகமாக உள்ளே வந்தார்.

கொஞ்சம் தளர்ச்சியாக இருந்தார். ஏழ்மை உணர்வு நன்கு தெரிந்து. மனதில் ஏதோ ஒரு கவலை உணர்வுடன் இருந்ததாகத் தெரிந்தது.

வந்தவர் வேட்டி ய இறக்கி விட்டு, வெளியில் உள்ள அவருக்கும், ராகவனுக்கும் வணக்கம் சொன்னார். அதில் ஒரு பணிவு இருந்ததைக் கவனித்தான் ராகவன்…

பை வெட்டப்பட்டு, தபால்கள் பிரிக்கப்பட்டு, முத்திரை குத்திய பின்பு, அக்ரஹாரா மக்களுக்கு உண்டான சாதா தபால்கள், ரெஜிஸ்டர் தபால்கள், மணிஆர்டர்கள், அதற்குண்டான பணம் தனியாக எடுத்து வைத்த பின், மற்றதெருக்களுக்குண்டான, மற்ற தபால்கள் மணி ஆர்டர்கள் தனித் தனியாகப் பிராஞ்ச் ஆபிஸ் ஜேர்னலில் பதிவிடபட்டு, பின் அவைகள் எல்லாம் போஸ்ட்மேன் புக்கில் பதிந்து முடித்த சமயம், வாசலில் காத்து இருந்த அந்த நபர் வசம் கொடுத்தார் பிராஞ்ச் போஸ்ட்மாஸ்டர்.

“வாட் நான் சென்ஸ்?என்ன இது. ?உத்திராபதியிடம் கொடுக்காமல், அவரிடம் மணி ஆர்டருக்கு உண்டான பணத்தையும் கொடுக்காமல், பணம் பெற்றுக் கொண்டதற்குக்

கையழுத்து மட்டும் வாங்கிக்கொண்டுபணத்தையும் மற்ற தபால்கள் மணி ஆர்டர், அந்த நபரிடம் கொடுக்க உங்களுக்கு யார் அதிகாரம் கொடுத்தாங்க? அதுவும் நான் இருக்கும் போதே!”

என்று ராகவன் கோபத்தில், கேள்வி கேள்வி மேல் கேக்க,

கையைப் பிசைந்துக்கொண்டு, ”இருபது வருஷமா இந்தக் காரியஸ்தர் தான் அக்ரஹாரம் மக்களுக்குச் சாதா தபால்கள், மணி ஆர்டர் ரெஜிஸ்டர் தபால் ஒவ்வொன்றையும் டெலிவரி செய்து விட்டு வருவது வழக்கம். சார் என்றார்

போஸ்ட்மாஸ்டர்.

“ஏன்? இப்படி ஒரு பழக்கம்?”

தயங்கிய படியே, சார் வந்து வந்து உத்திராபதி ஒரு தலித் சார். அவர் அக்ரஹாரம் பக்கம் போக அனுமதிக்கமாட்டார்கள். மற்றதெருக்களில்

செருப்புபோட்டுக்கொண்டு கூடநடக்கக் கூடாது. இது இந்த ஊரில் பஞ்சாயத் தலைவர் மூலம் எழுத படாத சட்டம் என்றார்.

அதற்குள் சுந்தரம், ” சார் இங்கு அப்படித்தான் பழக்கம். ஊர் கட்டுப்பாடு அப்படிசார். நான் ஒண்ணும் பணத்தைத் திருடிக்கொண்டு போகிறவன் அல்ல”. என்று சொல்லிவிட்டுத் தபால்களைத் தன்னிடம் கொடுக்க நிர்பந்தம் செய்தார்.

இது என்ன அஞ்சலகச் சட்டத்துக்குப் புறம்பாக அல்லவா இருக்கு?

”சாரி சார் இதை நான் அனுமதிக்க முடியாது.

“நீங்க போகலாம்.” என்று சொன்ன ராகவன் உத்திராபதியை பார்த்து,

”உத்திராபதி தபால்களை எடுத்துப் பையில் வையுங்க! செருப்பைப் போடுங்க

என உத்திரவு போட்டதும் அதைக் காதில் வாங்கிக்கொண்டு மள மள வென்று தயார் ஆனார் உத்திராபதி.

இந்த அக்ரஹாரத்தில் இது வரை இருந்து வந்த பாரம்பரியம் பழக்கம் அதை முறியடித்து எங்களை அவமரியாதை செஞ்சுட்டீ ங்க. ?” அவரே தொடர்ந்து

“இத பாருங்க சார். உங்க மேலதிகாரிகள் சென்னையிலும் சரி, டெல்லியிலும் சரி எங்கள் சமூகஆட்கள் தான். இப்பவே அவங்களுக்கு, போன் செய்து ஒங்களுக்கு ஆப்பு வைக்கிறோம்.. ஒங்களை இங்கே இருந்து டிரான்ஸ்ஃபர் பண்றோம்”

.

இந்தியன் படத்தில் கமலுக்கு எதிர் பதிலாகக் கிரேசி மோகன் சொன்ன மாதிரி இருந்தது. அவருடைய சவுடால் பேச்சு.

ராகவனுக்கு அவர் பேச்சுச் சிரிப்பை வரவழைத்தது. ”இத பாருங்க மிஸ்டர்ஓங்களால என்ன செய்ய முடியுமோ? அதைச் செய்யுங்க. எனக்கும் நீதி நேர்மை நியாயம் என்ன வென்று தெரியும். எங்க அலுவலகச் சட்டம் என்ன சொல்கிறதோ அதைத் தான் நான் செய்ய முடியும். தொடர்ந்து

இத பாருங்க நான் ஒங்க பூச்சாண்டி மிரட்டலுக்குப் பயபடுபவன் நான்இல்ல.

நான் மத்திய அரசு ஊழியன். என் கீழ் வேலை பார்க்கும்ஊழியரை வேலை செய்ய விடாமல், தடுத்த குற்றத்தைச் சொல்லி போலீசுக்கு தகவல் சொன்னால், ஒங்களை அரெஸ்ட் செய்யும் அளவுக்குப் போகும். ஒங்க மரியாதையைக் காப்பாத்திகிட்டு நீங்க போங்க. ”பதிலுக்குச் சொன்னான் ராகவன்.

ஆனாலும் அவர் போகாமல், அங்கேயே நிற்க, “ஏன் இங்கு மறுபடியும் நின்னுகிட்டு இருக்கிங்கே?”

“நீங்க போகலாம். யாருக்கு என்ன தபால் வந்துரு க்கோ, அதை உத்திரா பதி வீட்டு வாசலில் வந்து கூப்பிடுவார். வந்து வாங்கிட்டுப் போகச் சொல்லுங்க”.

இனி உங்களை அக்ரஹாரா மக்களுக்கு, ஏஜென்ட் ஆக வந்து நின்னா நான் புகார் செய்ய வேண்டிய சூழ்நிலை ஏற்படும். நீங்க போகலாம்”.

இப்படிச் சொன்னதும் அவர் அவமானம் தாங்காமல் வெளியேறினார்.

ஒரு நிமிடம் அங்குக் கூடிய கூட்டம் அதிர்ச்சியில் இருந்து மீளவில்லை.

இதுவரை இருந்து வந்த பழக்கத்தை, அதுவும் ஒரு சின்ன வயது ஆபிசர், துணிச்சலுடன் நடைமுறை படுத் தியதை கண்டதும், கொஞ்சம் ஆச்ச ரியமானர்கள்.

உத்திராபதிஅக்ரஹாரா மக்களுக்கு டெலிவரிக்கு கிளம்பும் போது, ராகவனும் சேர்ந்து கூடவே போனதால், அவரவர்களின் தபால்களைப் பெயர் சொல்லி கூப்பிட்டு டெலிவரி செய்தார் உ திராபதி.

அக்ரஹாரா மக்களுக்கு டெலிவரி முடிந்தவுடன், மற்ற தெருக்களுக்குச் செருப்பு காலுடன் டெலிவரிக்குப் போகச் சொல்லிவிட்டு மீண்டும் அலுவலகம் வந்து அமர்ந்ததும், முக்கியமாக அவருடைய மெயில் ஓவர் சீர்க்கு போன் செய்தார் ராகவன்.

”என்ன கோபால்? நான் இந்தக் கோட்டதுக்கு வந்து ஒரு மாதம் ஆகுது. மாதம் தோறும் விசிட் செய்யும் நீங்கள் இப்படிபட்ட ஆபிஸ் உள்ளது என்று ஏன் கவனத்துக்குக் கொண்டுவர வில்லை. என்று சொல்லிவிட்டு உங்கள் விளக்கம் எனக்கு இன்று மாலைக்குள் வரவேண்டும் என்று உத்திரவு இட்டார்.

ஆபிசில் மற்ற ஆய்வுகள் மேற்கொண்டு இருக்கும் போதே, போஸ்ட்மாஸ்டர் பாலுஇன்னொரு சம்பவத்தையும் குறிப்பிட்டார்.

உத்திராபதி வசிக்கும் தலித் தெருவில் உள்ள ஒரு வாலிபன், அவரது சொந்தக்காரன்

முடி திருத்த சலூன் சென்ற போது, அந்த முடிதிரு துபவர் அந்தத் தலித் பையனுக்கு மறுத்து விட்டதாகவும், விளக்கம் கேட்கும் போது அது பஞ்சாயத்து தலைவர் உத்திரவு என்றும், அவரை எதிர்த்துக் கொண்டு தன்னால் அந்த ஊரில் வாழ முடியாது என்று சொன்னதால் தான் அந்த வாலிபனுக்கு முடி வெட்டிவில்லை என்று சொன்ன விளக்கம் திருப்தியாக இல்லை என்பதால்,

மேற்கொண்டு மாவட்ட ஆட்சியரிடம், ஒரு சமூக ஆர்வலர் மூலம் புகார் செய்து, போலீஸ் அவரை அரெஸ்ட் செய்து இருக்கிறது என்கிற விபரத்தையும் சொல்லி முடித்தார்.

“இது என்ன கொடுமையா உள்ளது?. மானுட வேற்றுமை எதில் பார்ப்பது என்கிற விவஸ்தை கிடையாதா?இதுவே இவர் நகரத்தில் கடை வைத்து இருந்தால் வருபவர் பட்டியலிட்ட மக்கள் என்பதை எவ்வாறு உணருவார்?” ராகவனின் ஆத்திரம் அடங்க வெகு நேரம் ஆனது.

”அவரை மட்டும் போலீஸ் கைது செய்திருக்கக் கூடாது.

பஞ்சாயத்து தலைவரையும் சேர்த்து கைது செய்யப்பட்டிருக்க வேண்டும். ”

“அந்த முடி திருத்துபவருக்கு அவர்வாய் மொழி உத்திரவு. அதனால் தப்பித்து விட்டார்.”

வேலை முடிந்து, கொண்டு வந்திருந்த மதிய உணவை, சாப்பிட்டு விட்டு கிளம்பும் போது, குறிப்பிட்ட காரியஸ்தர் மற்றும் பஞ்சாயத்து தலைவர் எதிரே தென்பட்டனர்.

“வணக்கம் சார்”!என்று பஞ்சாயத்து தலைவர் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தார்.

“சுந்தரம் நீ சொன்ன ஆபிசர் இவர் தானா?”

ஆமாம் என்று அவர் தலையசக்க,

“இத பாருங்க சார் கிட்ட தட்ட 20 வருஷம் இந்த அக்ரஹாரத் துக்கு, எல்லாமே சுந்தரம் தான். எந்த பிரச்சினையும் இல்லாம சுமுகமாக இந்த ஆபிஸ் போயிட்டிருக்கு ?”

“இதுக்கு முன்னாடி வந்த ஆபிசர்களும் கண்டிக்கல. கண்டுக்கல?”

“நீங்க மட்டும் ஏன் இப்படிப் பிடிவாதம் காமிக்கறீங்க? பேசாம நாளையிலிருந்து சுந்தரம் எடுத்துப் போய்ப் பட்டுவாடா செய்யட்டும் என்ன சொல்றீங்க?”

சுந்தரம் செயல் பொது நோக்குஅதில் அவருக்கு எந்த லாபமும் கிடையாது.

வசதியானவர். ஊர்பெரியவங்க பார்த்து முடிவு எடுத்து, இப்படி ஒரு ஏற்பாடு செஞ்சு, அதைச் சுந்தரம் பொறுப்பா கவனித்து வருகிறார்”.

“பார்த்தா சின்ன வயசாஇருக்கீங்க! கொஞ்சம்அனுசரித்துப் போங்க!””

சார் !இப்ப நான் பேசலாமா ?”

”முதலில் ஒங்க ஊர் கட்டுப்பாடு, எங்க இலாகாவுக்கு ஒத்து வராது. அதை புரிஞ்சுக்க முயற்சி பண்ணுங்க.

உத்திராபதி லீவு போட்டால் இவர் போஸ்ட்மேன் உத்தியோகம் பாக்கட்டும் யாரும்அப்ஜெக்சன் செய்யமாட்டோம்.

அது என்ன சார்

உத் திராபதி வேலைக்குப் பராக்ஸி கொடுத்து அதுவும் அக்ரஹாரா மக்களுக்கு மட்டும்?

மேலும் சுந்தரம் சார் செய்வது பொதுநலமில்ல. சுயநலம். நூறாண்டுகள் பல கடந்தும் இன்னும் தொடர்கிறது தீண்டாமை. ”

சாதி பெயர் சொல்லி, சொல்லி, அதுவே ஒரு நாள் உத்திராபதி பொறுத்து உயிர்க்கொல்லியாக மாறும்.. ”

”சுந்தரம் சார் நடவடிக்கைக்கு இப்படியொரு விளக்கம் கொடுக்க நினைக்கிறேன்.

சாதி மதப் போதை தலைக்கேறி, தருதலையா திரியும் அவரும், நீங்களும், இந்த ஊரும், ஒருநாள் மிருகத்தின் எச்சம் என்பதை என்றும் மறவாதீர்கள்”.

“வளர்க்க வேண்டியவை (மரங்கள்) அழிக்கப் படுகின்றன. அழிக்க வேண்டியவை வளர்க்கப் படுகின்றன (சாதிகளும் மதங்களும். )”

“வேதங்களில் கூறப்பட்டுள்ளது போலச் சாதி முறையின் அமைப்பு அவ்வளவு புனிதமானவை அல்ல”.

“துவக்கத்தில் 5 பிரிவுகளாக இருந்த சாதிகள் புற்று நோய் பரவுவது போல 5000 உப சாதிகளாக விரிந்துள்ளன..”

”பழக்கவழக்கங்கள், கலாச்சாரங்கள் மனிதனை பண்படுத்துவதற்கே உருவாகபட்டவை, மற்ற மனிதனை இழிவாக நடத்தவோ,

நீ உயரந்தவன், நீ தாழந்தவன் என்று பிரித்துக் கூற போட பட்டவை அல்ல. ”

“உண்மையான மனிதன் இதை அறிவான், உங்களுக்குள் இருக்கும் மனிதனை முதலில் வெளியே கொண்டு வாருங்கள்.”

”சாதி சாதி என்றுசாதி தலைவர்கள் சொல்லத்தான் செய்வார்கள். அவர்கள் கெட்டவர்கள் அல்ல. அவர்களுக்குச் சாதி தான் பொழைப்பே, அதான். சாதிகளை வைத்துக் கொண்டு ஒருவருக்குக் கும்பிடும், மற்றவரை உதைத்தும் யார் பெரியவர்? என்று சண்டையிட்டு கொள்ளவதும், வழக்கமாகக் கொண்டுள்ளார்கள்.

”மனிதத்தன்மை அற்ற ஒரு செயல். அவர்களுக்கும் புரிய வையுங்கள்.

யாரும் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல, அனைவரும் சமம் என்பதை. மனிதனை மனிதனாகப் பாருங்கள்“. மனிதரின் தோல் நிறம் இயற்கையின் ஓர் அம்சம். எப்படி அது

மனிதர்களைப் பிரித்துப் பாகுபடுத்த முடியும்?'இந்த கேள்வியில் உருவான தலைவர்களே ஆபிரகாம் லிங்கன், மண்டேலா போன்றோர்."

'மனிதர்களுக்குள் பிரிவுகள் இருப்பதில் சில நியாயங்கள் இருக்கலாம்.

ஆனால், அதில் உயர்வு தாழ்வு இருக்கக் கூடாது என்று காந்தி சொன்னார். "

"மகாகவி பாரதியார், மழலைப் பருவத்திலேயை மனதில் பதியும் வண்ணம்,"சாதிகள் இல்லையடி பாப்பா! குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்' "என்றார்.

ஒருவேளை பாரதியார் சொன்ன கருத்துக்கள் குழந்தைகளுக்கு தான் நமக்கு இல்லை என்கிற எண்ணத்தில் தான் இப்படிச் செய்கிறீர்களோ?

"நம் நாட்டு இதிகாசங்கள், இலக்கியங்கள், காப்பியங்கள், நீதி நூல்கள் எல்லாமே சாதி வேற்றுமைகளைக்களைந்தன."

"அந்தணராயினும், வேறு எந்தக் குலத்தவராயினும், திருக்கோயில்களில் இருக்கும், அறுபத்து மூவரை வணங்கத் தவறுவது இல்லை. அந்த 63 நாயன்மார்களும் ஒரே சாதியா? அவர்களுக்கு ஆராதனை நடக்காமல் இருப்பதுஇல்லை. நீங்களும் கும்பிடாமல் வருவது இல்லை."

"தன் பக்தன் திருப்பாணாழ்வார் தாழ்ந்த குலமாக இருந்தாலும் அவரைலோகசாரங்கர் முனிவர் தன் தோளில் ஏற்றிவர திருவரங்கனே

ஆணையிட்டாராம்". !

"இந்தச் சுந்தரம் சார் வழிபடும்வைணவத்தில் கூட 12ஆழ்வார்களும் வெவேறு சாதி. அவர்களை நாம் போற்றிக் கொண்டடவில்லையா?"

"வைஷ்ணவ ஆச்சார்யர் ஆளவந்தார். சீடர்களில் பெரிய நம்பி உயர்ந்த சாதி. ஆனால் மாறனேரி நம்பி என்பவர் தாழ்ந்த சாதி. சீடர. மாறனேரி நம்பிக்கு, ராஜபிளவுநோய்ஏற்பட்டபோது, பெரியநம்பிகுளிப்பாட்டி, துணிதுவைத்து, சாப்பாடுஊட்டிவிட்டதோடுமட்டுமல்லாமல், மாறனேரி நம்பிக்கு அந்திம கிரியை செய்தவர், உயர் குலத்தில் பிறந்த பெரிய நம்பி"

இந்தக் காட்சிகள் எல்லாம் "சாதி இரண்டொழிய வேறில்லை' என்பதை உணர்த்துகிறது".

"ஆயிரம் ஆண்டுகள் முன்பு அவர்கள் சாதியை பார்க்கவில்லை.

ஆனால் அறிவியல் வளர்ச்சியில் முன்னேறி இருக்கும் நாம் இன்னும் சாதி கொடுமை தீண்டாமை பற்றிப் பேசிக்கொண்டும் அவர்களை இழிவு படுத்தி ஒரு போலியான சுகத்தை அனுபவிக்கிறோம். "

"இன்னும் ஒரு சில ஊர்களில் தேநீர் கடைகளில், இரட்டை குவளை முறை உள்ளது என்பதை மறுக்க முடியுமா?"

“திரையங்குகளில், உணவு விடுதிகளில், பேருந்துகளில், தொடர் வண்டிகளில் எப்படி ஓங்களால், சாதி இனம் காண முடியாத நிலை இருக்கிறதோ, அதே நிலை எல்லா இடங்களிலும் பரவ வேண்டும்.”

“உயர் சாதி மக்கள் தலித் மக்களை மானுட வேற்றுமையாகப் பார்த்த போது, அப்பாவி தலித் மக்கள், பொறுத்து போயீ பிரச்சனை ஏதும் வேண்டாம் என்று ஒதுங்கி போன காலம் போயீடுச்சு. !”

“நடந்த விஷயங்கள் பற்றி விளக்கமாக மாநில மனித உரிமை கழகம், தேசீய மனித உரிமை எஸ். சி எஸ். டி, மாவட்ட ஆட்சியர், மற்றும் சில ஊடகங்கள்க்கு மின்னஞ்சல் அனுப்பி விட்டு ரெஜிஸ்டர் தபாலும் அனுப்பும் காலமாக மாறி வந்துள்ளது.”

“இவர்களுக்குக் குரல் கொடுக்க நிறையச் சமூக ஆர்வலர்கள் கிளம்பி உள்ளனர்... அதுக்கு ஒங்க ஊர் முடிதிரு துபவர் வழக்கே ஒரு உதாரணம்.”

“இந்த ஊர் மட்டுமல்ல, தமிழ்நாடு மட்டுமல்ல, மொத்த இந்தியாவும் தீண்டாமையை அதிகம் பார்க்கிறது”.

“உத்திர பிரதேசத்தில், ஒரு கிராமத்தில், ஒரு தலித் பெண்ணைக் கற்பழித்து, தற்கொலை என்று சொல்லி, ஒரு மரத்தில் தூக்கில் இட்டுள்ளார்கள். என்கிற செய்தி படிக்கும் போது, யாரடா மனிதன் இங்கே கூட்டி வா அவனை இங்கே என்று கண்ணதாசன் சொன்னது தான் ஞாபகத்துக்கு வந்து போனது.”

சமீபத் தில் புதுக்கோட்டை மாவட்டம் கிராமம் ஒன்றில் தலித் வாழ் மக்களின் குடிநீர் தொட்டியில் மனித மலத்தைச் சேர்த்து அந்த இன மக்களின் குழந்தைகள் இறப்புக்கு காரணமாகி உள்ளனர்.

சாதி தலைவர்கள் தேரதல் சமயத்தில் மட்டுமே வாய் திறப்பார்கள்

. எல்லோருமே பாரதி சொன்னபடி வாய் சொல்லில் வீரர் தான்.

இவ்வளவு கொடுமை நடந்தும்இன்னமும் சாதிக் கொரு சங்கம் வீதிக் கொரு சாதி இருக்கு.

பாரதி, பெரியார், அம்பேத்கர் கொள்கைகள் சொல்வதற்கு முன்பே மதத்தில் புரட்சி செய்த மகான் ஸ்ரீ ராமானுஜர் செய்த சீர்திருத்தங்கள் எவ்வளவு தெரியுமா?

பெரிய நம்பி, மாற நேரி நம்பி சம்பவங்கள்சின்னஎடுத்துக்காட்டு. இது போல் நிறைய அவர் வழிகாட்டிய சம்பவங்கள்.

”ஏன் சார்? இவ்வளவு உணர்ச்சி கரமாகவும் நாத்திகம் பேசுபவரகவும் இருக்கக் காரணம், நீங்களும் பட்டியல் இனத் தை சேர்ந்தவரா? என்று பஞ்சாயத்து தலைவர் திடீரென கே ட்ட கேள்வி அங்குக் கூடியிருந்த எல்லோருக்கும் அதிர்ச்சியைக் கொடுத்தது.

ஆனால் ராகவன் அவர் பேசிய வார்த்தையின் உஷ்ணத்தை உணர்ந்தாலும், சிரித்துக் கொண்டே அதற்குப் பதில் இவ்வாறு. சொன்னான்

“இவ்வாறு பேசினா, எதிராளி இப்படியா? என்ற ஒரு கருத்து நீங்க மட்டுமல்ல, நிறையப் பேர் அப்படியொரு குற்றச்சாட்டு என் மேல் வைக்கிறார்கள்.”

“புரட்சி கருத்து மாற்று சிந்தனை, சமூகச் சிந்தனை, பற்றிப் பேச இந்தச் சாதி தான் இருக்க வேண்டும் அவர்கள் தான் பேசவேண்டும் என்று இல்லை”.

“ஆனாலும் ஒங்க சந்தேகத்தை. நிவர்த்திச் செய்யச் சொல்றேன் நானும் சுந்தரம் சார் சமூகத்தைச் சேர்ந்தவன் தான்”. அவன் பூணூலை வெளியே எடுத்துக் காண்பித்தான்..

“நீங்க சொல்ற பாரதி ஒரு அந்தணர்.”

” அவர்சொல்லாத புரட்சி கருத்துக்கள் கிடையாது. ”

” அவர் தீண்டாமை பற்றிச் சொன்ன கருத்துக்களை காற்றில் பறக்க விட்டு ஒவ்வொரு ஆண்டும் பிறந்த நாள் மட்டும் கொண்டாடி என்ன பயன்?”

இறுதியாக ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன்

”மண்ணிலே மக்கிப் போகும் மனிதனே சொல்லடா!

மெய்யில் ஓடும் குருதியில் கண்டாயோ உன் சாதியை, உன் மதத்தை,

உன் இனத்தை?”

என்று எங்கயோ படித்த இந்த எழுச்சி ஊட்டும் வார்த்தைகள் வீரியம், என் மனதை விட்டுஎன்றும் அகலாது.

வந்திருந்த அனைவர் மனதிலும், ராகவன் சொன்னஇந்த வார்த்தைகள், சாட்டை அடியாகத் தோன்றியது.

எழுந்து நின்ற பஞ்சாயத்து தலைவர், சுந்தரம் சார், எல்லோரும் ராகவ் கையைப் பிடித்துக் கொண்டு, “இந்த சின்ன வயதில், எங்கள் அறியாமையை, இருட்டில் இருந்த எங்களை, ஒரு அகல் விளக்கை பிடித்து, பெரிய வெளிச்சத்தைக் காண்பித்து விட்டீர்கள்.”

“இவ்வளவு நாள் தீண்டாமை இருளில் இருந்த நானும் இந்த ஊரும் சட்டென்று மாறிட முடியுமா?என்று கேக்க தோணும். சில விசயங்கள் அப்படித்தான். உடனே தீர்வாக மனதில் தோன்றும்”

“இனி இந்தக் கிராமம் வேறு கோணத்தில் ஆக்க பூர்வமாகச் செயல்படும்.”

“அடுத்த முறை வரும் போது நீங்கள் உணர்வீர்கள்”என்று நெகிழ்ச்சியுடன் சொல்லிவிட்டு, தங்கள் செயலுக்கு வருத்தம் தெரிவித்தார்கள் பஞ்சாயத்து தலைவரும், சுந்தரம் சாரும்.

ராகவன் உத்திராபதியை பார்த்தார்.

அவனுக்கு, அந்த நேரத் திலுருந்து இனி கருமேகம் விலகிய பொழுதுகளாகத் தெரிந்தது.

இனி அவன் ஆசை, ஆசையாக, வாங்கிய சைக்கிளில், காலில் செருப்புடன், போகலாம் என்கிற சந்தோசஉணர்வு ஏற்பட்டது.

நன்றி பெருக்கோடு ராகவனின், காலில் விழுந்தார் உத்திராபதி..

- முதலெழுத்து ஜூலை 2023

## 2. இப்படியும் சில உள்ளங்கள்

”லீவிலிருந்த எனக்கு, அலுவலகத்தில் மேலதிகாரிகளுடன் முக்கியமான மீட்டிங், என்ற தகவல் வரவே மன்னார்குடிக்கு, ஸ்கூட்டியில் பயணித்தேன்.

கோட்டூர் தோட்டம், மாதாக்கோயில் நெருங்கும் போது, வண்டி தீடீரென நிற்கவே.

ஜூஸ்கடையிலிருந்து, வந்த அன்வர்பாயிடம்

வண்டி திடீரென நின்னுடுச்சு. !” 10 மணிக்கு ஆபீஸில் இருக்கணும். முக்கியமான மீட்டிங் இருக்கு”.

என்றதும்

அடுத்த நொடியே, சிறிது கூடத் தயங்காமல்,

“கவலைய விடுங்க ஜூஸ் குடிச்சுட்டு, என் ஹீரோ ஸ்ப்ளெண்டர் எடுத்துக்கிட்டு போங்க” ! ஒங்க வண்டிசாவியைக் கொடுங்க.

தொழில்சுத்தமும், நேர்மையும், வேலைக்கேற்ற கூலி யும் கேட்கும், நம்ம மெக்கானிக்ஜோசப் கிட்டே வண்டியைகொடுத்து, ரிப்பேர் பாத்து வைக்கிறேன்” கிளம்புங்க

” ஒரு வருடமாக இந்த வழியே வரும் போது ஏற்பட்ட பழக்கம்.

மனிதனின் ஈகை குணமும், அன்பு கலந்த பேச்சும் தான், முக்கியம். அன்வர்பாய் அப்படிப்பட்டவர் தான்.

வாசிப்பை நேசிக்கும் மனிதர்.

அப்பாவின் தொழிலான பெயர் பெற்ற கொழுந்து வெற்றிலை வியாபாரம்; வாடிக்கையாளர்களுக்கு வேளாங்கண்ணி வரை அகத்திக்கீரை வெற்றிலை போட்டு விட்டு, மாலை திரும்பி வருவாராம்.

இப்போது உடம்பு முடியாமல் போகவே மாற்று தொழிலாக ஜூஸ் கடை வீட்டிலேயே. !!!

”மெயின் ரோடில் போறவங்களே மட்டும் நம்பி வியாபாரம் பண்ண முடியாது சார் ! சுத்து வட்டார கிராம மக்கள், விவசாயிகள்

கடைத்தெரு. வரும்போது, இயற்கை சார்ந்த உணவும்“உடலுக்கு ஊட்டமும், தெம்பும் கொடுக்கும் கம்பை, கேப்பை, கூழ், சுண்டல், குழி பணியாரம், ஜீனி சேக்காத கருப்பட்டி காபி டீ, கரும்பு ஜூஸ் பழச் சாறுகள் விற்பனை செய்கிறேன்.”

குறைவான காசில், நிறைவான

திருப்திக் கிடைக்குது அவங்களுக்கு.

ஒரு நாள், ஜூஸ் குடித்து கொண்டுருக்கும் போது,

60 வயது பெரியவர் உடம்பு முடியாமல், தன் சைக்கிளை தள்ளிக்கொண்டு மிகச் சோர்வுடன் வந்தவரிடம்,

”ஏன் சாமி ?இந்த வேகாத வெயிலில், பூஜைக்கு வரிங்க?

“இந்தாங்க 100 ரூபாய் மெடிக்கல் ஸ்டோர்ஸ் போய், அம்மாவுக்குமருந்தை வாங்கிக் கொடுத்துட்டு, அப்புறம் கோயில் பூஜைக்குக் கிளம்புங்க.”

கண்டிப்பு பேச்சு, அதோடு இழையும் அன்பு.

நெகிழ்ச்சியுடன், ” என் கஷ்ட சூழ்நிலையைப் புரிந்து செய்யற ஒங்க உதவி விலைமதிப்பற்றது அன்வர்பாய்.. ”

”விடுங்க குருக்கள்ய்யா!

பெயரளவிலான வருமானம் உள்ள ஒருவரால் இவ்வளவு உயர்ந்த எண்ணங்களும், உதவிசெய்யும்மனபான்மைஇருக்கமுடியும்என்றால்.. ?.

புண்ணியம் தேடி புனிதம் அடைய நினைப்பவர்களளை விட, இந்தப் பூமியில், மனிதனை நாடி, கருணைஉள்ளத்துடன் நடந்து கொண்டாலே போதும். புண்ணியம் கோடி கோடியா கிடைக்கும். இந்தகூற்றுக்கு நூறு சதவீதம்அன்வர்பாய்

தகுதியானவர்.

“ஒங்க செயலை பார்த்தா பெருமையா இருக்கு பாய்” என்றபோது.

“யாதும் ஊரே, யாவரும் கேளிர்” கனியன் பூங்குன்றனாரின் எல்லைகள் தாண்டிய மனித நேயம்.

“வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினார்” அவர் பயிர்களுக்கு மட்டுமல்லாமல் எல்லா உயிர்களுக்கும் பொருந்தும்படி சொல்லியுள்ள வள்ளலார்.

சமநிலை சமுதாயத்தை வலியுறுத்திய பாரதியார்,

”இந்த உலகில், நம் கண் முன்னால் காணும் ஒவ்வொருவரையும், நேசிக்க இயலவில்லை என்றால், கண்களுக்குத் தென்படாத கடவுளிடம், எவ்வாறு அன்பு செலுத்த முடியும் என்று சொன்ன அன்னை தெரசா. !!!

அவர்கள் செய்த தியாகத்துக்கு முன்பு, நான் சாதாரணமானவன் சார்.

”சந்திர மண்டலத்தில் முதன் முதலில் கால் வைத்தவுடன் என்ன நினைத்தீர்கள்?

ஆம்ஸ்டிராங்கிடம் ஒரு நிருபர் கேள்வி கேட்டபோது,

”பூமியில் இருந்து லட்சக்கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ள, சந்திர மண்டலத்தில் இடம் பிடித்த மனிதனால், பக்கத்து நாட்டில், ஏன் பக்கத்து வீட்டில் உள்ள மனிதர்கள் மனதில்

இடம் பிடிக்க முடியவில்லையே?. மனித நேயம் குறைந்து கொண்டே வருகிறதே? என்று பதில் அளித்தாரம்

“ஆமாம் பாய் நானும் படிச்சிருக்கேன்”.

“சாசுவதமற்ற வழக்கையில்! இருக்கிற வரைக்கும் பிறருக்கு ஏதாவது உதவி செய்யணும்.”அல்லா என்னை அப்படித் தான் செய்யச் சொல்லி இருக்காரு”!

திரும்பி வரும் போது கண்ணாடி போட்டிருந்த ஜோஸப்பிடம் வண்டி பற்றிகேட்ட போது, பாய் பணம் கொடுத்து விட்டு வண்டியை எடுத்துகிட்டு போனதாக சொன்னான்.

சுத்தமா சர்வீஸ் பண்ணி, ஆயில் மாத்தி, புது வண்டி மாதிரி இருக்கவும், ஆச்சரிய பட்டேன். சர்வீஸ் சார்ஜ் பார்ட்ஸ் மாத்தியது, எல்லாம் ரூபாய் 600. என்று பில் இருந்தது. இதுவே டவுனாக, இருந்தால், ரூபாய் 1500 தீட்டி இருப்பாங்க.

காலையில் பாய்ச் சொன்னது கரெக்ட் தான். அப்படியொரு தொழில் சுத்தம்.

அவர் வண்டியில் பெட்ரோல் டேங்க் நிரப்பி இருந்ததை, அவரிடம் சொல்லாமல், என் வண்டியை எடுத்து கொண்டு, பாய்க்கு

மீண்டும் ஒரு முறை நன்றி சொல்லி விட்டு, திருத்துறைப்பூண்டி வீடு வந்துசேர்ந்தேன்

திடீரென பட்டுக்கோட்டை பிராஞ்சுக்கு மாற்றல். கடந்த ஒரு வருடமாக அவரை சந்திக்கும் சந்தர்ப்பமும்இல்லாமல் போனது.

மன்னார்குடியில் உள்ள, நண்பர், வீட்டுக் கிரகப்ரவேசம்..

ஸ்கூட்டியில்போகும் போது, பாய் அவர்களைப் பார்த்து விசாரித்து விட்டு, ஜூஸ் சாப்பிடலாம் என்ற போன போது, கடையில் பாய் இல்லை ;முகூர்த்த நேரம், முடிந்து விடும்; திரும்பிவரும் போது பாத்துக் கொள்ளலாம்,.

திரும்பும் போதுமணி 1 கடையில், இப்போதும் யாரும் இல்லை.

பக்கத்து மாதா கோவிலிருந்து, கருப்பு கண்ணாடியுடன் ஜோசப் கடையை நோக்கி வந்து கொண்டுருந்தான்...

சைராபானு ‘அம்மா எங்கே?’ என்று வீட்டுக்குள் போனான்.

என்னஇவன் ? இவ்வளவு உரிமை எடுத்துக் கொண்டு உள்ளே போய் பேசுகிறான்?

அடுத்த நிமிஷம் தலையில், முக்காடு போட்டுகொண்டு, கை. ஈரத்தை துடைத்துக் கொண்டு, அவசர அவசரமாக கொல்லை புரத்திலுருந்த வந்த அந்தப் பெண்மணி,

“வாங்க சார்” ”“மாதுளை ஜூஸ் இந்த வெய்யிலுக்கு நல்லது. போடட்டுமா?”

பாயின் கனிவான பேச்சு, கவனிப்பு அப்படியே அவர் சம்சாரத்திடம் பார்த்த போது பாயை ஞாபகப்படுத்தியது.

ஜூஸ்சாப்பிட்டுவிட்டு, பணத்தைக் கொடுத்து விட்டு, கிளாஸ் வைக்கும் போது.

பிள்ளையார் படம்,. மெக்கா படம், ஏசு படத்துடன் பெரிய சைசில். போட்டோ..

படத்தில் அன்வர் பாட்சா தோற்றம்01. 05 1969 மறைவு01. 05. 2021. என்று இருந்தது.

அதிர்ச்சியாகி, “என்னம்மா! என்ன ஆச்சு?. ”’

விம்மலும் அழுகையுடன் “நல்லாத்தான் இருந்தாரு;ஒரு நாள் ஜூரம்ன்னு படுத்தவரு; ஆஸ்பத்திரியில் சேர்த்து, மூணு நாள் ட்ரீட்மெண்ட் போய்க்கிட்டுருந்த சமயம், ஆக்ஸிஜன் இல்லாமா, மூச்சு திணறல் ஏற்பட்டுகோரோனோவில் இறந்து போயீட்டாரு சார்.”

”எப்படிப்பட்ட நல்ல மனுஷனை, கொடிய கோரோனோ பழி வாங்கி விட்டதே?. ;

பக்கத்திலே இருந்த அவர் சமாதியில் ஊது பத்தி கொளுத்தி விட்டு அழுதேன்.

திரும்பி கடைக்கு வந்த போது ஜோசப், அவர் படம் முன்பு அழுது கொண்டு இருந்தான்.

. ”இப்படித்தான், சார் யாராவது அவங்களைப் பத்தி சொன்னா போதும், அவங்க படத்துக்கு முன்னாடி, விம்மி விம்மி அழ ஆரம்பிக்குது.

”ஆமாம்! ஜோசப் எப்படி இங்கே ?’

“எங்க பிள்ளை சார்”!

“என்ன சொல்றிங்க!!”

எனக்குக் குழப்பம் மேலிடவேஅதற்குப் பதில் சொல்லும் விதமாக விசும்பலுடன, ஜோசப் பேச ஆரம்பித்தான்.

“பொறந்தது வேளாங்கண்ணி. சார். 2004 டிசம்பர் 26 அன்னிக்கு வந்த சுனாமி என் குடும்பத்தைப் பலி வாங்கிடுச்சு.”

’பாய் அன்னிக்கு கடைக்கு, வெற்றிலை போட வந்தவர், தனியாஅழுது கிட்டுருந்த என்னை, தோள் மேல போட்டு, அழாதேன்னு சொல்லி, தான் வைச்சுருந்த ரொட்டியை கொடுத்து இங்கேகூட்டிகிட்டு வந்தாரு”

”பிள்ளையே இல்லாத எங்களுக்கு, நீ தான்டா இனிமே பிள்ளை;. முஸ்லிமாக மாறவேண்டாம்ன்னுசொன்னாரு.

அஞ்சாறு வருடம் கழிச்சு தங்கச்சி பொறந்துச்சு.

”கோட்டூர் ஸ்கூல்ல 10 வது வரைக்கும் படிக்க வைச்சாரு. ; கையில தொழில்வேணும்ன்னுசொல்லி, கோட்டூர் மைதீன் மெக்கானிக்கிட்ட, எ, சேர்ந்து கொஞ்சம் கொஞ்சமாவேலைய கத்துக்க வைச்சாரு...

”நல்லா போய்க்கிட்டஇருநத வாழ்க்கையில் மறுபடியும் ஒரு சுனாமி. வந்துச்சு. ’

“ஒரு நாள்சர்வீஸ் செஞ்ச டூவீலரை ஓட்டிப் பார்க்க எடுத்துக்கிட்டுப் போனப்ப, திடீர்ன்னு முன் டயர் வெடிச்சி, கன்ட்ரோல் பண்ண முடியாம நடுரோட்டுலயே,. தலையில பயங்கர அடி. உயிர் பிழைச்சிட்டேன். ஆனா, கண்ணுக்கும் மூளைக்கும் போற நரம்பு, ரத்த ஓட்டம் கட் ஆகிப்போச்சு, ”’

”. இருந்த வயலை வித்து, வைத்தியம் பார்த்து மம்ம்ம்ம்......”

கண்ணு தெரியறது கஷ்டம்னு சொல்லிட்டாங்க!”

“இரண்டு வருஷம் வீட்டுக்குள்ளேயே முடங்கிக் கிடந்தேன். வீட்டிலயும் ரொம்பக் கஷ்டம்”..

“உன்னை நீயே வீண் என நினைத்தால், விடியலே கிடையாது;. நீயே உலகிற்குத் தூண் என நினைத்தால், உன் வாழ்வில் இருளே கிடையாதுன்னு ’ சொன்னாரு.”

“கடன் வாங்கி சின்னதா ஒரு மெக்கானிக் ஷெட் வெச்சுக் கொடுத்தாங்க”. ‘

வண்டியைப் பிரிச்சி வேலை பார்க்க, ஆரம்பத்தில ரொம்பத் தடுமாற்றம் இருந்துச்சு. முயற்சியை கைவிடலை

உதவிக்கு அனாதை மணியை அவர் வேலைக்குச் சேத்துவிட்டாரு. ” !. ”அப்பா தான் எனக்கும் என் தம்பிக்கும் சோறு போட்டவர். ’

வேலை சுத்தமா இருக்கும்னு சொல்லி, நிறைய பேர்கள் வந்து, வண்டிய சர்வீஸுக்குக் கொடுத்தாங்க!”

“திடீர்னு அப்பா போயிட்டார்ன்னு சொன்னவுடன் எனக்கு உலகமே இருண்டு போச்சு.”

“அந்தப் புண்ணிய ஆத்மாவுக்கு, பக்க பலமா இருக்கனும், அம்மாவை பாத்துக்கணும் தங்கச்சி பாப்பாவை, நல்லா படிக்க வைக்ககணும்;. என்னோட இருக்கிற தம்பியை பெரிய மெக்கானிக் ஆக்கணும்” நினைச்சு இங்கேயே ஷெட் போட்டேன் சார். ”

நன்றி கடனுக்காக, கண் பார்வை, இல்லாமல் இருந்தாலும், சாகிற வரைக்கும் கடுமையா உழைத்து இந்தக் குடும்பத்தைக் காபாத்துவேன்னு செயலில் ஈடுபட்டு இருக்கும் ஜோசப்?” மேல் என் மரியாதை கூடியது.

வங்கி மேலாளரான, நான் இவர்களுக்கு, கட்டாயம் எந்த வழியலாவது உதவி செய்ய வேண்டும். !மனதில் உறுதி கொண்டேன்.

கனத்த மனதுடன் கிளம்பி ஒரு 10 அடி தூரம் தான் போயிருப்பேன்.

சார் ! சார் !கொஞ்சம் நில்லுங்க ”அன்வர் சம்சாரம் ஓடி வந்து,

“அன்னிக்கு, 100 ரூபாய்கொடுத்து, ஜூஸ் குடிச்சுட்டு, மீதி சில்லரை வாங்காம போயிட்டிங்களாம்”!!””!.

“அந்த ரூபாய் மீதி 70 ம், 2 லிட்டர் பெட்ரோல் எங்க வண்டிக்கு, நீங்க போட்டதுக்கு, ருபாய் 160 ஆக மொத்தம் ரூபாய் 230 அந்தச் சாருக்குச் சேரவேண்டியதுன்னு சொல்லி.”

அந்தக் காசை ஒரு சுருக்குப் பையில் போட்டு வண்டி நம்பர்குறிச்சுவச்சுருந்தாரு”.

“ஒவ்வொரு நாளும் ஒங்க நம்பர் வண்டி வரும்ன்னு காதுக்கிட்டுருப்பேன்”.

“இன்னிக்கி நீங்க வண்டிய, கிளப்பும் போது பார்த்தேன், அவர் குறிச்சு வச்சிருந்த நம்பரும், ஒங்க வண்டி நம்பரும் ஓத்துப் போச்சு”. அதான் சார் ஓடியாந்தேன்.

”இந்தாங்க ஒங்க பணம்’.

**- தேன்சிட்டு தீபாவளி மலர் 2023**

# 3. கீச்சு மூச்சு சார்...

மாவட்ட கல்வி அதிகாரியாக இன்று பொறுப்பு ஏற்க போகிறேன்.

ரிலீவ் ஆகப்போகும் ஆபீசர் எனக்காக காத்து இருந்தார்..

நான் தான் வாசுதேவன், புதிதாக ஜாயின் பண்ண வந்து இருக்கும் டி இ ஓ என்றதும் கொஞ்சம் ஆச்சர்யத்துடன் பார்த்தார்கள். , ஆபிஸில் உள்ளவர்கள்.

பின்னே இருக்காதா? ஒரு டி இ ஓ என்பவர் ஒரு அனுபவம் பெற்றவர் என நினைத்தவர்களுக்கு நான் டி என் பி எஸ் சி எக்ஸாம் எழுதி டைர க்ட். ரெ க்ருஇட்மெண்ட்ல் வந்தவன், வயதும் 32 தான் என்றால் ஆச்சரியம் தானே!!

ஒவ்வொரு ஊழியர்களும் என் சேம்பருக்கு வந்து தங்களை அறிமுக படு த்தி கொண்ட பிறகு சின்ன தேநீர் விருந்தோடு முடிந்தது பைல்களை பார்த்தபோதுபெண்டிஙஇன்ஸ்பெக்ஷன்,

ஆசிரியர்மாற்றம், ஸ்கூலுக்குமாற்று கட்டிடம் போன்றவைகளில் எந்த நடவடிக்கை களும் எடுக்க படாமல் இருந்தது.

இனி ஒவ்வொன்றாக மாற்ற வேண்டும்.

வேலைக்கு சேர்ந்த 20 நாளும் பெண்டிங் ஒர்க் கிளியர் செய்தது அதோடு அவ்வப்போது சி. இ. ஓ மீட்டிங் என்று வேலை டைட்டாக இருந்தது.

“அம்மா நான் ஒரு ஸ்கூலுக்கு விசிட் போக வேண்டி இருக்கு. லஞ்சுக்கு வரமாட்டேன். போற இடத்திலே பாத்துக்கிறேன். வரட்டுமா!”

லேப்டாப் எடுத்துவைத்துக்கொண்டு நான் போகும் ஊரின் பெயரை டிரைவர் சண்முகத்திடம் சொன்னேன்.

சண்முகம் வயது 50. நான் போக போகிற ஊர் அவருக்கு சொந்த ஊர் என்பதும், அவர் பையன் ஓவியர் என்கிற விஷயத்தையும்சொல்லிக்கொண்டே வந்தார்.

எனக்கும் தெரிந்த ஊர் என்று அவரிடம் சொல்ல ஏனோ மனம் ஒப்பவில்லை.

“சண்முகம் சார்”ராத்திரி 2 மணி வரை பைலை பார்த்தது கண் அசதியா இருக்கு. நாம் போய் சேர எப்படியும் ஒரு மணி நேரம் ஆகும். கொஞ்சம் கண் அசந்துக் கிறேன். மன்னார்குடி வந்தவுடன் எழுப்புங்க. டி ப ன் சாப்பிட்டு அந்த ஊருக்கு போவோம்”. என்றேன்.

எல்லோரும் இதுவரை அவரை ஒருமையில்தான் அழைத்து தான் பழக்கமாம். தன்னையும் மதித்து சார் என்று நான் கூப்பிட்டதும் கொஞ்சம் கண் கலங்கினார்.

“மனிதர்கள் எல்லோரையும் மதிக்க வேண்டும். மேலும் . என்னை விட நீங்கமூத்தவர்

வயசுக்கு மரியாதை தரணும்..”

கண் அயர்ந்தும் அயராதமாதிரி பாதி தூக்க நிலையில் இருந்த எனக்கு கீச்சு மூச்சு சார் பற்றிய நினைவலைகள் வந்த து.. அப்பாவின் முதலாளி திடீரென இறந்து போனதால், பார்த்திருந்த கணக்கு பிள்ளை வேலை போயிற்று. அடுத்த வேளை சாப்பாட்டுக்கு என்ன பண்ணுவது? என்று யோசித்து , என் படிப்பு கெடக் கூடாது என்று என்னை இந்த கிராமத்தில்உள்ள பெரியம்மாவின் பெண் அதாவது அக்கா வீட்டில் விட்டு விட்டு, அதற்கு மேல் அந்த கிராமத்தில் இருக்க பிடிக்காமல் அவர்கள் குலமாணிக்கம் என்கிற ஊரில் வேலை தேடி போனது தனி கதை.

மாமா என்னை அந்த ஊர் ஆரம்ப பள்ளிக்கூடத்தில் நாலாம் வகுப்பில் சேர்த்து விட்டிருந்தார்.

நான் கொஞ்சம் நீட் டா க ட்ரெஸ் பண்ணுவதும், வீட்டு பாடங்கள் எழுதுவதும்

உள்ளூர் மாணவர்கள், என்னை விலக்கி வைக்க காரணமாக இருந்தது.

நாலாம் வகுப்பில் மொத்தம்20 ஸ்டூடெண்ட்.. அதில்5 பேர் பெண்கள்..

நாலாம் வகுப்பு சார் பெண் பாரதியும், என் தெரு. என்னுடன் தான் படித்தாள்.

பாரதி என்னைபற்றி நல்ல விதமாக சொல்லவே மற்ற நண்பர்கள்பழனி,

முருகையன் குமார், செல்வி என்னுடன் மெல்ல பழக ஆரம்பித்தார்கள் ஐவர் கூட்டணி என்று பெயர் விளங்கி போனது.

நாலாம் வகுப்பு சார் குரல் அஞ்சாம்வகுப்பு சார் குரல் மாதிரி கணீர் என்று இல்லாமல் க்ராமபோன் தட்டில் கேக்கும் க்ரீச் க்ரீச் சப்தம் போன்று இருந்தததால் இவரை கீச்சு மூச்சு சார் என பட்ட பெயர் நான் சூட்டி விட, ஒரு சில பசங்கள் வகுப்பில் சொல்லி கொண்டு இருந்தார்கள்.

ஒரு நாள் ஸ்கூல் முழுவதும் அந்த பட்ட பெயர் பரவி, அவர் வரும் போதும் சரி, ஸ்கூல் விட்டு போகும் போதும் சரி, அவர் பின்னாடி போய் கீச்சு மூச்சு சார் என்று உரக்க சொல்லி விட்டு அவர் கோபத்தை உரசி விட்டு ஓட்டமாகஓ டினார்கள் மாணவர்கள்.

இவ்வளவு நாள் வேலை பார்த்த எனக்கு பட்ட பெயர் வைக்க உள்ளூர் பசங்களுக்கு அந்த தைரியம் கிடையாது;

தன் சொந்த பேர் போய், கீச்சு மூச்சு சார் என்கிற பட்ட பெயர் பரவ காரணம். இவன் தான்.. இவனை சும்மா விட கூடாது என்று என் மீது கங்கணம் கட்டி கொண்டார்.

ஒரு பாடம் நடத்தினால் யாரையும் கேள்வி கேக்கமாட்டார். வேண்டுமென்றே. நான் பாடத்தை கவனித்து பதில் சொல்கிறேனா என்று என்னை மட்டும் எப்போதும் கேட்பார்.

“வயசுக்கு மீறிய அறிவுடா” உனக்கு என்று அஞ்சாம்வகுப்பு சார் என்னை ஒரு முறை பாராட்டியிருந்தார்

அந்த ஆசிர்வாதமோ என்னவோ கீச்சு மூச்சு சார் கேட்ட கேள்விக்கு எல்லாம் டான் டான் என்று பதில் சொல்லி பிரம்பு அடியில் இருந்து தப்பித்து விடுவேன்..

ஆனால் அவரிடம் மற்ற மாணவர்கள் அடி வாங்குவார்கள்

22 வருடத்துக்கு முன்பு நடந்தகதை. இது. ஆசிரியர்கள் மாணவர்களை அடிக்கும் பழக்கம் உண்டு. என். மகனை ஏன் அடித்தீர்கள்? என்று ஆசிரியரிடம் வந்து பெற்றோர்கள் முறையிட மாட்டார்கள். ஆசிரியர் களிடம் மரியாதை இருந்த காலம் அது.

அன்று ஒரு நாள் வகுப்பில் என் பக்கத்தில் இருக்கும் பழனியை" ஏன் வீட்டு பாடம் செய்ய வில்லை? "எ ன்று பிரம்பு குச்சியால் அடிக்க, அவன் கோபம் கொண்டு, மறு நாள் கருவேல முள் அஞ்சாறு எடுத்துஅவர் உக்காரும் நாற்காலியில் வைத்த விஷயம் யாருக்கும் தெரியாது. அவர் வந்து உக்கார்ந்ததும் முட்கள் குத்தியவுடன்"ஐயோ அம்மா" என்று கத்தி கூச்சல் போட, மத்த வகுப்பு டீச்சர்கள் வந்து விசாரிக்க அவருக்கு அவமானமா போனது. "ஆனாலும் எல்லோருக்கும் பிரம்பு அடி கிடைச்சுது.

அன்னிக்கும், நான் தான் இது மாதிரி ஐடியாவெல்லாம் சொல்லிக் கொடுத்து பசங்களை கெடுத்து வைச்சுருக்க்கான் ஒங்க வளர்ப்பு செல்ல பிள்ளை வாசுஎன்று மாமாவிடம் போட்டு குடுக்க, என்ன ஏது என்று விசாரிக்காமல் பக்கத்து பூவரசு மர குச்சி மூலம் மாமா என் கையில அடித்த பின்பு தான் கீச்சு மூச்சு சார் சமாதானம் ஆனார்.

ஒரு நாள் நாங்க அஞ்சு பேரும் வகுப்பில் பேசி கொண்டு இருந்த போது பாரதி, " வாசு எனக்கு ஒன்னும் வேணும் கொடுப்பியா" என்றதும் "சொல்லு பாரதி சொல்லு".

என்றேன். முருகையன் வீடு ஓரம் உள்ள பனை மரத்தில் உள்ள பனம்பழம் வேணும் சாப்பிடணும் போல இருக்கு.

"அய்யோ முருகையன் அப்பா பாத்தா, என் முதுகு தோலை உரிச்சுடுவார்.. நான் மாட்டேன் ன்னு" பழனி குமார் முருகையன் ஜகா வாங்கவும் .

நான் மட்டும் தைரியமா "கவலை படாதே பாரதி எப்படியாச்சும் ஒனக்கு ஸ்கூல் விட்டு போகும் போது பழம் கிடைக்கும்".

"டேய் பாரதிக்கு நான் எதுவானாலும் எப்படியும் எப்பாடு பட்டாவது செய்வேன் பாக்கத்தானே போறீங்க பாருங்க."முருகையன் வீட்டு பனைமரதை அடைந்தோம்.

25 அடி உயரத்துக்கு இருந்த பனை மரத்தை பார்த்த அஞ்சு பேரும், "எப்படிடா வாசு ஏறி பறிக்க போறே?"

புத்தக மூட்டையை கீழே போட்டுவிட்டு கிடு கிடு வென்று ஏறி 12பழங்களை பறித்து மேலே இருந்து போட்டதும், "டேய் வாசு நம்ம கீச்சு மூச்சு வாத்தியார் கிட்டத்தில வராருடா! சீக்கிரம் எறங்குடா". என்று கத்தவும்,

"அய்யயோ கீச்சு மூச்சு சார் பாத்தா என்மாமாகிட்டகோள்மூட்டிஅடிவாங்கவெச்சருவாரு."

பதட்டத்தில் இறங்கும் போது கைகள் கால்கள் சிராய்ப்பு ஏற்பட போய் எல்லா பழத்தையும் அவரவர்கள் பையில் அடைத்து வேக வேகமாக ஸ்கூல் வந்து பாரதிக்கு பழத்தை உரிச்சு கொடுத்த தும் அதை குமார் கிடு கிடுவென ஒரு பேப்பரில் வரைந்தும் கொடுத்தான்

.

“டேய் வாசு தேங்க்ஸ் டா”” என்னால் தானே உனக்கு சிராய்ப்பு. வீட்டுக்கு போய் தேங்காய் எண்ணெய் ஒங்க அக்காவை விட்டு போட சொல்லு. “பாரதி இப்படி சொன்னதும்”விடு பாரதி. !” எல்லாம்உனக்காக தான்ஆனால் தனக்கு கீச்சு மூச்சு சார் மூலம் மாமாகிட்டே பூஜை இருக்கும்ன்னு தெரியும் ;ஆனா பாரதிக்கு ம் இருக்கும்ன்னு தெரியுமா போச்சு !

நீ திருந்தவே மாட்டியா? பெரிய பனையேறின்னு நினைப்பு.. எனக்கு கிடைத்தது அடி. அக்கா தான் பாவம் தடுத்து உள்ளே கூட்டிப்போய் மருந்து போட்டார்.

”ஏண்டி கழுதை ஸ்கூல் போனோமோ வந்தமான்னு இல்லாம, காவாளி பசங்க கிட்ட உனக்கு என்னடி கூட்டு சகவாசம்.. பொம்பளை பிள்ளை அடக்கமா இல்லாம என்னடி கூத்து ? கண்டித்துடன் இல்லாமல் பூவரசு குச்சி மூலம்பாரதியும் அடி வாங்கிய காட்சி. அப்பப்பா கொடூரம்.

ஆச்சு !எப்படியோ அந்த வருடம் 20 பேரும் பாஸ். கீச்சு மூச்சு சார் தொந்திரவு இனி இருக்காது. அஞ்சாம் வகுப்பு சார் ரொம்பநல்லவர். நமக்கெல்லாம் விடிவு காலம் தான் என்று நினைத்து சந்தோசப்பட்டோம்.

முதல் நாள் ஸ்கூல் திறந்து அஞ்சாம்வகுப்பில் அதே 20 பேரும் சிரிச்சு பேசிக்கிட்டு இருந்த எங்கள் சந்தோசம் அதிக நேரம் நீடிக்க வில்லை. பெரிய இடி.

கையில் பிரம்பு குச்சி சகிதம் வகுப்பில் நுழைந்தார் கீச்சுமூச்சு சார்.

“என்ன பசங்களா என்னை எதிர்பார்க்கல இல்லியா?”

நீங்க எதிர்பாத்தகிட்டு இருக்கிற 5ம் வகுப்பு ராமச்சந்திரன் சார் ட்ரான்ஸ்ப்ர் வாங்கிட்டு சொந்த ஊருக்கு போயிட்டார். நான் தான் இனி ஒங்க வகுப்பு டீச்சர் அதோட ஹெட் மாஸ்டர் வேறே. ”

“ஒழுங்கா இல்லைன்னா ஒங்க வாலை ஓட்ட நறுகிடுவேன்”

நம்ம ஆசையில மண் விழுந்து டுச்சு. நாங்க அஞ்சு பேரும் புலம்பினோம்.

நாலாம் வகுப்பில் காமிச்சு வன்மம் இன்னும் இந்த அஞ்சாம் வகுப்பு வந்த பிறகும் தொடர்ந்துள்ளது என்பதை அன்று பார்க்க நேர்ந்தது.

அதனால் நான், வகுப்பை விட்டும், ஏன் அந்த ஊரை விட்டும் கிளம்பும் சந்தர்ப்பமாக அந்த சம்பவம் அமையும் என்று எதிர் பார்க்க வில்லை.

அன்று காலை தமிழ் வகுப்பு. கீச்சு மூச்சு சார் பாரதியார் பற்றி. பாடம் நடத்தினார்.

“சாதிகள் இல்லையடி பாப்பா; – குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்; நீதி, உயர்ந்தமதி, கல்வி – அன்பு நிறைய உடையவர்கள் மேலோர்.”

என்று சொல்லிவிட்டு விளக்கமும் கொடுத்த நேரம் இண்டெர்வெல் பெல் அடிக்கவும் நாங்கள் சிட்டாய் கிளம்பி, விளயாடபோனபோது, ஸ்கூல் எதிரில் இருக்கும் அடி பம்பில் தண்ணீர் பிடிக்க ஒரு வயதான பாட்டி வந்து, , “பசங்களா யாராவது பம்ப் அடிச்சு குடத்தில தண்ணீர் பிடிச்சு தரீங்களா. கையில் கட்டு போட்டு இருக்கேன்.”

“பாட்டி நான் அடிச்சு தரேன்” என்று குடம் முழுவதும் நிரம்பிய பிறகு தூக்கி அந்த பாட்டியிடம் கொடுத்தேன் .

“நீ நல்லா வருவேடா பேராண்டி ன்னு” சொல்லிக் கொண்டுருந்த போது, ” டேய் கீச்சு மூச்சு சார் ஒன்னையே பாத்துகிட்டு இருக்கருடா ஒடுடா வாசு”

என்று குமார் சொன்னதும், ஓட்டமாக ஓடி வந்து வகுப்பில் உக்கார்ந்தேன்.

ஸ்கூல் விட்டு வீட்டுக்கு போனதும் பெரிய அணுகுண்டு வெடித்தது.

“என் மானம் கப்பலேறி போச்சு. இனி நான் எப்படி தெருவிலே நடப்பேன்?” ”மாமா கத்தி கொண்டுருந்தார்.

ஒரு விபரமும் புரியுமா” ஏன் மாமா என்ன மானம் போச்சு?எங்கே கப்பல் நம்ம ஊரு க்கு வந்திச்சு ”. என்று கேட்டதும், இன்னும் கோபமா ஆனார். கையில் பூவரசு குச்சி வேறு.

“ஏண்டா செஞ்சதயும் செஞ்சுட்டு எதிர் கேள்வியா கேக்கிறே ?”

“ஒங்க சார் தான்டா சொன்னாரு நீ இண்டெர்வெல் டயத்தில ஒரு கீழ் சாதி பொம்பளைக்கு பம்பில தண்ணீர் அடிச்ச கொடுத்தயாம்.”

அது உண்மையா ?”

“ஆமாம் மாமா! வயசான பாட்டி முடியல ன்னு சொன்னாங்க !அதான் ஹெல்ப் பண்ணினேன்.”

இது கீச்சு மூச்சு சாரின் வன்மம் என்று உணர ஒரு நொடிகூடஆகவில்லை எனக்கு.

மாமா இனிமே இப்படி செய்வீயா? செய்வீயா?என்று குச்சியால் கையினால் முதுகு உடம்பு முழுவதும் அடித்தார்.

எனக்கு இப்போது கோபம்கீச்சு மூச்சு சாரின் மீது அதிகம் ஆனது

வேடிக்கை பார்த்து கொண்டுருந்த அவரிடம், “ஏன் சார் சிவன் கோயிலில் சிவனை மட்டுமா நமஸ்காரம் பண்ணிட்டு வரிங்கே? அங்கே இருக்கிற 63 நாயன்மார்களையும் கும்பிட்டு வரிங்கே”? அவங்க எல்லாரும் ஒரே ஜாதியா?

“காலையில் பாரதியார் பாடம் நடத்தும் போது சொன்னது காத்தோடு போச்சா? உபதேசம் சும்மா பொழுது போக்குக்கு தானா?”

“மாமா நீங்க வைஷ்ணவத்தை கொண்டாடு பவர். ஆழ்வார்கள் 12 பேரும் ஒரே ஜாதியா?. என்னை அடிச்சுட்டா எல்லாம் சரியாயிடுமா?”

”எங்க அப்பா சொல்லியிருக்கார் மாறநேரி நம்பின்னு ஒரு தாழ்ந்த குலத்தை சேர்ந்த அடியார் நோயில் இருந்த போது குளிப்பாட்டி உடை மாத்தி சாதம் ஊட்டின து ஒரு பிராமண குலத்தில் பிறந்த பெரிய நம்பி என்னும் அடியார். அதோடு அவர் செத்த பிறகு காரியம் பண்ணியவர் என்று..

அந்த பாட்டி என்ன ஜாதின்னு பாக்கிற வய சா?. ஏதோ உதவி கேட்டாங்கா. செஞ்சேன் நீங்க சொல்ற ஜாதி எல்லாம் எனக்கு தெரியாது..

“இனி ஒரு நிமிஷம் இருக்க மாட்டேன்”.

“அக்கா என்னை மன்னிச்சுடு. நான் போறேன்.”

அன்று கிளம்பி போனவன் 22 வருடம் கழித்து கால் வைக்க போகிறேன்.

“சார்! பஸ் ஸ்டாண்ட் வந்துடுச்சி சார்”.

ஹோட்டலில் என் எதிரில் ”உக்கார தயங்கிய அவரிடம் .

”இத பாருங்க சண்முகம் சார்!

. இது பொது இடம் மரியாதை எல்லாம் ஆபீஸ்ல தான். கூச்சப்படமா வேண்டியதை சாப்பிடுங்க. ”

“அப்புறம் மதியம் சாப்பாட்டுக்கு ஒரு வெஜ் பிரியாணி ஒரு தயிர் சாதம் இரண்டு வாட்டர் பாட்டில் ஓங்களக்கும் எனக்கும் வாங்கிட்டு பில்லை என்கிட்ட கொடுங்க சரியா!”

“ஏன் சார்? ஸ்கூல்ல சாப்பாடு ஏற்பாடு பண்ணு வாங்க சார். அதுவும் அந்த ஸ்கூல் வாத்தியார்கள் எல்லாரும் அமர்க்களம் படுத்துவாங்கா சார்”.

“சண்முகம் சார் நாமே இந்த ஊருக்கு வரதுக்கு டி ஏ அரசாங்கம் கொடுக்குது. அதுல சாப்பாடு வாங்கி சாப்பிட வேண்டியது தானே?”. இது எனக்கு பிடிக்காத பழக்கம். ”

“சாரி சார்.”

அதற்கு பிறகு சண்முகம் ஒன்றும் பேசவில்லை.

“சார் ஸ்கூல் வந்துடிச்சு”

“வண்டியை அந்த மரத்து நிழலில் நிறுத்துங்க”.

“சார்! சார்! டி இ ஓ வண்டி வந்துருக்கு”. பியூன் பொன்னுசாமி சொன்னதும் அரக்க பரக்க எல்லா டீச்சர்களும், வகுப்பை அமைதியாக்கினார்கள்.

முதல் மாடியில் 8 ம் வகுப்புக்கு பாடம் நடத்தி கொண்டுருந்த ஹெட்மாஸ்டர் வேக வேகமாக மாடியிலிருந்து இறங்கி வந்தார்.

அவர் உடம்பு தளர்ந்து முகம் வாடிஇருந்தது. புன்னகையை கட்டாயமாக வரவழைத்து கொண்டு “வாங்க சார்”!. என்றார்.

என்னை அவருக்கு அடையாளம் தெரிய வில்லை. 22 வருடத்துக்கு முன்பு இருந்த கம்பீரம். கண்டிப்பு காணாமல் போயிருந்தது. கீச்சு மூச்சு சாரிடம். !

அவர் பதட்டத்துடன் இருந்ததை கவனித்த நான்

“ரிலாக்ஸ்சா இருங்க சார்..”

ஸ்கூல் இப்போதுஹையர் எலெமென்டரி ஸ்கூல் ஆக மாற்றம்.

தரைத்தளத்தில் 1 முதல் 5 ம் வகுப்பு வரையும் முதல் தளத்தில் 6ம் வகுப்பு முதல் 8 ம் வகுப்பு வரை இருந்தது.

தரைதளத் தை ஒட்டி பக்கத்தில் சத்துணவு கூடம்.

கொஞ்சம் 200 மீட்டர் தள்ளி. பசங்களுக்கும் மாணவிகளுக்கும், தனி தனியாக கழிப்பறையும், வாத்தியார்களுக்கு ஒரு கழிப்பறையும் இருந்தது. ஆனால் எதுவும் சுத்தமில்லாமல் இருந்தது.

திரும்பி வந்து தரை தளத்தில் உள்ள ஒன்றாம் வகுப்பு முதல் 5 ம் வகுப்பு வரை விசிட் செய்தேன். ஒவ்வொரு வகுப்பு சுவர்கள் பெயிண்ட் போய் செதில் செதிலாக பிரிந்து இருந்தது. முதல் தளமும் அப்படித்தான் இருந்தது.

“ஏதாவது பசங்க கிட்ட கேள்வி கேக்கிறீங்களா சார்” என்று 7 ம் வகுப்பு வாத்தியார் கேட்டார்.

பசங்களை கேள்வி கேட்டு, ஒருவேளை அவர்கள், பதில் தெரியாமல் போக நீங்கள் ஜாடையாக, சொல்லு சொல்லு என்று, சைகை காட்டி, உங்களை தர்ம சங்கடத்தில் பார்ப்பதில் எனக்கு இஷ்டமில்ல என்றேன்.

எல்லா வகுப்பும் விசிட் முடிந்து ஹெட் மாஸ்டர் ரூமுக்கு நானும் சண்முகம் மட்டும் போனோம்.

கீச்சு மூச்சு சார் அவர் சீடடை விட்டு எழுந்து தன் துண்டால் சேரை நன்கு துடைத்து அதில் உக்கார சொன்னார்.

“சார் அது எப்போதும் ஒங்க சீட்.”

அவரை கட்டாயப்படுத்தி உக்கார வைத்தேன்

“நான் இந்த சேரில் உக்காருகிறேன்”.

“சண்முகம் சார் வரும் போது ஒங்க பையன் ஓவியர்ன்னு சொல்லிட்டு வந்தீங்க! இங்கே கொஞ்சம் வர சொல்ல முடியுமா?”

அடுத்த 10 வது நிமிடம் முக சவரம் செய்யாமல் கண் உள்ளே போய் மிகவும் சோர்வா வந்தவர் என்னை பார்த்து “வணக்கம்” சொன்னார்.

பார்த்தவுடன் அது குமார் என்று புரிந்து விட்ட எனக்கு

இருக்கிற சூழ்நிலையை மறந்து, ”குமார் எப்படிடா இருக்கே? என்று அவனை கட்டி அணைத்தபோது சண்முகமும் கீச்சு மூச்சு சாரும் ஆச்சர்ய பட்டார்கள்.

பதிலுக்கு குமார்“, சார் நீங்க எங்கே எப்படி?”

”டேய்இந்தபள்ளிக்கூடத்துசுவருக்குபாடம்சம்பந்தமானஓவியம்வரையவேண்டும்ன்னு, நினைச்சு கூப்பிட சொன்னேன்..

“சத்தியமா நீ வருவேன்னு தெரியாதுடா !”

“ஒன்னை பார்த்து எவ்வளவு வருஷம் ஆச்சு ?”

பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ என்பது போல் இருந்தது இருவருக்கும்..

”சார் நான் ஒங்க வாசு சார் புது டி இ ஓ சார். ஜாயின் பண்ணி 20 நாள் ஆச்சு !

ஹெட் மாஸ்டரிடம் பேச ஆரமபித்தேன்.

“சார்! நீங்க சாப்பிட்டு ரெடியா இருங்க. ஒங்க கிட்ட ஆபீஸ் சம்பந்தமாகவும், பர்சனல் விஷயமாகவும் பேச வேண்டி இருக்கு”.

“சண்முகம் சார். நீங்களும், வீட்டுக்கு போய் சாப்பிட்டு அரை மணியில் வந்துடுங்க.”

“நானும் குமாரும் வாங்கிட்டு வந்த சாப்பாட்டை. சாப்பிடுகிறோம் நிறைய பேசணும்.”

” வாடா குமார் வண்டியில் உக்காந்து பேசலாம். ”

”கீச்சு மூச்சு சார் கிட்ட நீ க்ளாஸ் கவனிக்காம அவரை படம் வரைந்து அவர் கிட்ட பிரம்படி வாங்கினது :..

”சில்லு, பளிங்கி, பம்பரம் விளையாடிய போது பழனி பம்பரத்தை நான் உடைத்த போது சண்டை போட்டு என் சட்டையை நீ கிழுச்சது :

“சாட் - பூட் – த்திரி” போட்டு.. கண்ணாமூச்சிவிளையாட்டு போதுபாரதிஜடையஇழுத்துவிளையாடியது !

” எப்படிடா பள்ளி பருவத்தை மறக்க முடியும் ?”

“என்னையும் பாரதியையும் சேர்த்து வரஞ்ச பென்சில் ஸ்கெட்ச் இன்னும் பொக்கிஷ மா வெச்சிருக்கேன்டா குமாரு.”.

பழனிபில்டிங்காண்ட்ராக்ட்ர்ஒருவரிடம்வேலையில்பட்டுக்கோட்டையில்இருப்பதாகவும், முருகையன் வயலில் வேலை செஞ்சுக்கிட்டு இருக்கும் போது ஹார்ட் அட்டாக் வந்து செத்து

ஒரு மாசம் ஆனது என்றும்,. செல்வியை கட்டிகொடுத்து அது திருச்சியில் இருப்பதாகவும் சொன்னான்.

“பாரதி இங்கே தான் இருக்கு”

மேற்கொண்டு பேசுவதற்கு முன் சி. இ ஓ மொபைல் லில் கூப்பிடவும்,. அந்த பேச்சை மறந்து ஹெட் மாஸ்டர் ரூமுக்கு வந்தோம்.

“குமார் இத பாரு ஒவ்வொரு வகுப்பிலும் அந்தந்த வகுப்புக்கு பாட சம்பந்தமா என்ன ஓவியம் தேவை படும்என்பதையும்”வெளி சுவர் பூரா தேச தலைவர்கள் படம் குறிப்பு வரையனும். ஒரு கொடேசன் கொடு.

”நான் ஆபீஸ் போனதும் சாங்சன் பன்றேன். சரியா.

இதே மாதிரி என் கண்ட்ரோல் இருக்கிற எல்லா ஸ்கூலுக்கு ம் நீ தான் வரைந்து கொடுக்க போறே! உன்னோட ஓவியம் எவ்வளவு அழகு சிறப்பு. வாய்ந்த துன்னு எனக்கு தெரியும்”.

“குமாரு !அப்படியே பழனி அட்ரஸ் போன் நம்பர் வாங்கிகிட்டு. நீயும் அவனும் என்னை வந்து பாருங்க. !”

அவனுக்கும் வேலை இருக்கு.

சண்முகம் சந்தோஷத்தின் உச்சிக்கே போனார்.

“என் பையனுக்கு ஒரு வாழ்க்கை கொடுத்து இருக்கீங்க சார். இந்த உதவியை நானும் குமாரும் மறக்க மாட்டோம்”.

“ரொம்ப தாங்ஸ் வாசு”. கிளம்பிசென்றான் குமார்.

“ஹெட்மாஸ்டர் சார் ஒங்க நிர்வாகத்தில் சில குளறுபடிகள். சத்துணவு பற்றி புகார் வந்து இருக்கு. இதோ அந்த புகார். ஒங்க விளக்கம்என்னவென்றுசொல்லுங்க”.

தான் கொஞ்ச நாளா மன வருத்தத்தில் இருப்பதை பயன் படுத்தி உதவி ஹெட்மாஸ்டர் செய்த ஊழல் தன் மீது ஜோடிக்க பட்டது என்பதை எப்படி சொல்வேன்?”

வாசுவை எவ்வளவு முறை பூவரசு குச்சியால் அடி வாங்க வைத்திருப்பேன்.

ஒரு வேளை என்னை பழி வாங்க இந்த சந்தர்ப்பத்தை பயன் படுத்தி என்னை தல குனிய வைப்பாரோ ? என் ஆசிரியர் பணிக்கு முற்று புள்ளி வைக்க வநதவரா இருப்பாரோ?

. ஆயிரம் கேள்விகள் குடைய செய்தது அவர் மனதில்.

நடந்ததை எழுதி கொடுத்தார்..

வேலை முடிந்து எல்லா ரிபோர்ட்களையும் லேப் டாப் இல் அடித்து சி இ ஓ வுக்கு மெயில் அனுப்பி, மணியை பார்த்த போது 5 ஆகியிருந்தது

கிளம்ப தயார் ஆனேன்ம

மற்ற ஆசிரியர்கள் விடை பெற்று கிளம்ப, நான் சண்முகம், கீச்சு மூச்சு சார் மட்டுமே இருந்தோம்.

“சார் ஒரு நிமிஷம் ஒங்க கிட்ட பேசணும்” கீச்சு மூச்சு சார் சொல்ல

சண்முகம் புரிந்து கொண்டு வெளியில் சென்றார்

” வாசு வாசு, என்னை மன்னித்து விடு. நான் உன் மீது வன்மம் காட்டி, இந்த ஸ்கூல், ஏன் இந்த ஊரை விட்டு போன்துக்கு காரண மாயிட்டேன்”

ஒன் மேல தப்பு இல்லன்னு பாரதியும், நண்பர்களும் சொன்னப்பிறகு தான்உண்மையை உணர்ந்தேன்.

ஒரு ஆசிரியர் அதுவும் பாரதியார் பாடம் நடத்தி முடிச்ச மறு நிமிஷம், உன்னை பத்தி ஒங்க மாமா கிட்ட சொல்லி உன்னை பழி வாங்கினேன். அது எவ்வளவு பெரிய தப்புன்னு பின்னாடி தான் புரிந்தது.

வீண் பழி சுமத்தி உன்னை ஊரை விட்டு துரத்தி யதுக்கு தண்டனையா பாரதிளங்ககுல மானத்தை வாங்கிட்டு, ஆபீஸில் வேலை பார்க்கும் போது, ஒரு தலித் பையனை கல்யாணம் பண்ணி கிட்டு ஊரே விட்டு போயிட்டா?”

“போன நாலாவது மாசமே ஆக்சிடென்டில் கணவரை. பறிகொடுத்துட்டு இங்கே இருக்கா.”

இந்த மன வேதனை பைத்தியம் மாதிரி இருக்கிற சூழ் நிலையை பயன் படுத்தி உதவி ஹெட் மாஸ்டர் செஞ்ச ஊழலுக்கு நான் காரணம் ஆயிட்டேன். என்னை மன்னிச்சுடு வாசு”

இவ்வளவு தூரம் வந்துட்டு பாரதியை பாக்காம? ......

அவர் பார்வையில் பெரிய ஏக்கம் தென்பட்டது.

நான் பதில் ஏதும் சொல்லவில்லை.

“நான் கிளம்பறேன்சார்!!”

“சண்முகம்சார். கடைத்தெருவுக்கு வண்டியை விடுங்க.”

ஆப்பிள் ஆரஞ்சு மாதுளம் பூ ஹார்லிக்ஸ் எல்லாம் வாங்கிய பிறகு,

“எங்கே சார் போகணும்?”

“ஹெட் மாஸ்டர் வீட்டுக்கு”.

“வாங்க சார்”.

” நான் எதிர்பார்க்கல சார்”

” அவரும் அவர் மனைவியும் இப்படி சொன்ன போது, சார் மோர் கூடாது. இப்ப ஆபீசர் இல்லை. ”

"வாடா வாசு ன்னு சொன்னா தான், உள்ளே வருவேன்.

கண்கள் மட்டும் பாரதியை தேடின"

"சாரி வாசு. !. சண்முகம் நீங்களும் உள்ளே வாங்க"

கொண்டு போன பொருள்களை கொடுத்து இருவரையும் நமஸ்கரித்தேன்.

ஒங்க அக்காவும் மாமாவும் சென்னையில செட்டில் ஆயிட்டாங் க. "கேள்விப்பட்டேன்".

பாரதி இன்னும் வெளியில் வரவில்லை.

அம்மாமட்டும் "பாரதி ஒன் வாசு வந்துருக்கான் வந்து பாரு". நாலஞ்சு தடவை கூப்பிட்ட பின்பு கதவை திறந்து வெளியில் வந்தாள் பாரதி. கண்ணில் ஜீவன் இழந்து துறு துறு வென இருக்கும் பாரதியா இது?என் மனது கனத்த து.

பேச்சு வர வில்லை இருவருக்கும் துக்கம் தொண்டையை அடைத்தது

துள்ளி குதித்து மான் போல் இருந்த அவள் இரண்டு கால்கள் இழந்து வீல் சேர் மூலம் அதோடு நடந்த விபத்தில் இனி கர்ப்பம் தரிக்க முடியாது என்றும் கீச்சு மூச்சு சாரின் சம்சாரம் சொல்ல என் மனது கஷ்டப்பட்டது.

"பாரதியிடம் நான் கொஞ்சம் பேசணும் பெர்மிட் பண்ணுவீங்களா சார்?"

கொல்லைகிணற்றடி பக்கம் அவளை அழைத்து மனசு விட்டு பேசினேன்.

நான் பேசிய பேச்சு அவள் முகத்தில் மலர் ச்சியை கொடுத்த்ருக்க வேண்டும். கவ்னித்தேன்.

திரும்பியவுடன் பாரதி தன் கையினால் கொடுத்த காபியின் மனம் வீடு பூரா வீசியது..

என் மனமும் அவள் மனமும் அப்படிதான் இனி மல்ர்ந் து இருக்கும் என்ற நம்பிக்கை துளிர்த்தது

"அப்ப நான் வரேன் சார்."

மூவரும்விடை கொடுக்க முடியாமல் நெஞ்சுக்குள் விம்மியது, தவித்தது எனக்கு தெரியாமல் இல்லை.

எல்லோரும் கண்ணில் நீர் தழும்ப வாசல் வரைக்கும் வந்தார்கள்

எனக்கும் அனிச்சையாக கண்ணில் நீர்த்துளிகள்.

அந்த இறுக்கமான சூழ்நிலை மேலும் தொடர க் கூடாது

என்று நினைத்து, மௌனத்தை உடைத்தேன்.

"அடுத்த வாரம் நானும் அம்மாவும் பாரதியை பெண் கேட்டு வரோம் சார். !!!!."

அதே சமயம் கிணற்றடியில் நானும் பாரதியும் பேசியதில் செக்ஸ் மட்டுமே வாழக்கையில்லை. நாம் இருவரும் ஏற்கனவே புரிந்து கொண்டவர்கள். இது ஆண்டவன் நமக்குக் கொடுத்த பரிசு. என் தோளில் நீ பூ மாலையாகச் சேர இஷ்டம் தானே? என்று கேக்கவும், பாரதி சம்மதம் சொன்னதும், எங்கள் இருவருக்கு மட்டுமே தெரிந்த உண்மை.

**- முதலெழுத்து ஜனவரி 2024 இதழ்**

# 4. மனைவி ஒரு மந்திரி

"இன்னொருவர் வேதனை

இவர்களுக்கு வேடிக்கை ;

இதயமற்ற மனிதருக்கு

இது வெல்லாம் வாடிக்கை!"

- கவிஞர் வாலி

தன்சொந்தகிராம பள்ளிக்கூடத்திற்கே, ஹெட்மாஸ்டராக, போஸ்டிங் ஆர்டரை, ஸ்வீட் கொடுத்துக் கொண்டே, வித்யாவிடம் காண்பித்த நான், கூடுதல் தகவலாக, ஊர் போனதும் ஏற்கனவே வாங்கிபோட்டுஇருந்தகொல்லையில் வாழை நடவேண்டும், என்று சொன்னதும், வித்யா மறுத்து பேசினாள்.

"நம்ம பூர்வீக வீட்டிலே செட்டிலாகப் போறதும், நீங்க படிச்ச

பள்ளிக்கூடத்திலேயே, ஹெட் மாஸ்டராக, வேலை செய்யப் போறதும், எனக்கும் சந்தோசம் தான். "

"ஆனா வாங்கியுள்ள கொல்லையில், வாழை நடணும், கத்திரி, வெண்டை நடணும் சொல்றீங்க பாருங்க, ? அதான் எனக்குச் சரியா படலை. நமக்குச் சரிப்பட்டு வராதுங்க. எதுக்கு வேண்டாத

வேலை. இந்த யோசனையைக் கை விட்டுட்டு ஊர் போனதும் கொல்லையை நல்ல விலைக்கு வித்துடுங்க. "

இயற்கையாகவே விவசாயம் மேல் ஆர்வம் இருந்த எனக்கு, வித்யா யோசனையைக் கேட்கும் மனநிலையில் இல்லை.

"என்ன வாசு சார் ! உள்ளே வரலாமா?" ஹவுஸ் ஓனர் மாணிக்க நாடார் குரல் கொடுத்தார்..

"வாங்க சார் ! உக்காருங்க."

இந்தாங்க ஸ்வீட்எடுத்துக்கோங்க"

என் டிரான்ஸ்பர் விஷயம் பற்றிச் சொல்லவும்,

"காங்கிரசுலேஷன்ஸ்! வாசு சார். ! ஒங்க, நீண்ட நாள் கனவு நடக்கப் போகுது. ரொம்பச் சந்தோசமா இருக்கு."

வாசுவும் வித்யாவும், 10வருடங்கள் முன்பு, அந்த ஊருக்கு, மாணிக்க நாடார் காலனிக்கு, குடித்தனம் வந்த போது, நாடார் குடும்பத்துக்குப் பிடித்துப் போன. காரணம், சரியாகப்

படிக்காமல் ஊர் சுற்றிக் கொண்டு இருந்த, தன் மகனை பத்தாவது வகுப்பில், மாவட்டத்தின் முதல் மாணவன், ஆக்கிய பெருமை, வாசு தான் காரணம் என்பதை நன்கு அறிந்திருந்தார்.

“எவ்வளவு டியூஷன் பீஸ்” என்று ஒரு முறை மாணிக்க நாடார் கேட்ட போது,

“இது பிரியத்துக்குச் செஞ்சது. பீஸ் கொடுத்து என்னை அந்நியன் ஆக்கி விடாதீங்க.”

இப்படிச் சொன்னதும் மாணிக்க நாடார் நெகிழ்ந்து போனார்.

ஏற்கனவே தனக்கு விவசாயம் மேல் ஆர்வம் என்று ஒரு முறை சொல்லி இருந்ததை ஞாபகம் வைத்துக் கொண்ட நாடார்,

“வாசு சார் நல்ல சந்தர்ப்பம் வந்துருக்கு. ஒங்க கொல்லை வாழை, கத்திரி, வெண்டை பயிர் செய்ய வேண்டிய உதவியை, நான் தான் செய்யப் போறேன். என் ஆள் சிங்காரம் மூலம், 600 வாழை கன்று. , இயற்கை உரம், உங்க வீட்டுச் சாமான்கள், லாரி மூலம் ஏத்தி விடப்போறேன். அவன் அங்கு வந்து எல்லா உதவியும் செய்வான். இது என் நன்றி கடனா நினைத்து மறுக்காமே ஓத்துக்கணும்.”

நாடார் இவ்வளவு சொல்லிவிட்டுப் போயிருந்தாலும், என் செயலில், ஆர்வத்தில், வித்யாவிற்கு இஷ்டம் இல்லை என்பது தெளிவாகத் தெரிந்தது.

“நம்ம கொல்லை, இரண்டு பொறாமைகாரர் களுடையில் இருக்கு. ஏற்கனவே தங்களுக்கு இந்த இடம் கிடைக்கலங் கறது நினைச்சு, இப்போ எதாவது பிரச்சனை பண்ணி, நமக்கு டார்ச்சர் கொடுப்பாங்க. ஒங்க ஊர் சமாச்சாரம் நாடார்க்கு தெரியாதங்க.”

“எதையும் அனுப்ப வேண்டாம்ன்னு அவர் கிட்ட சொல்லிடுங்க”

ஒரு விதத்தில் வித்யா சொன்ன செய்தி, உண்மை யாகப் பட்டாலும், 10 வருடம் ஆயிடுச்சு. இன்னுமா பகை உணர்ச்சியை நம்ம கிட்ட காமிப்பாங்க? இருக்காது.

. ”நடப்பது நடக்கட்டும். என் விவசாய ஆர்வத்துக்கு நீ தடையா இருக்க வேண்டாம்.

இந்தப் பேச்சை இதோட விட்டு விடு”

என் நினைவு கள் 10 வருடம் பின் நோக்கி சென்றது.

அந்தக் கிராமத்தின் அக்ராஹாரம் பெருமாள் கோயில் அருகில், தெற்கு திசை நோக்கி அந்தக் கொல்லை. மேற்கு பக்கம் கஸ்தூரி அண்ணி வீடும், கிழக்குப் பக்கம் வட்டி வரது வீடும் இருந்தது.

இரண்டு பேரும் போட்டி போட்டு, இந்தக் கொல்லையை வாங்க முயற்சி செய்த போதும், பால்ய நண்பன் மும்பை மூர்த்தி, விற்கும் போது,

“இதோ பாரு வாசு. அண்ணியும், வரதும் நல்ல விலை கொடுத்து, வாங்க ரெடியா இருந்தாங்க. நான் கொடுக்க விரும்பல. நம் நீண்ட நட்புக்கு அடையாளம். , இந்தக் கொல்லை.

பொன் விளையும் பூமி. நீ நிச்சயம் விவசாயம் செய்வாய் என்ற நம்பிக்கையில் உனக்குத் தான் இந்த இடம்”

ரெஜிஸ்டர் பண்ணி விட்டு ஊர் கிளம்பி போய் இருந்தான். மூர்த்தி.

தன் கொல்லையுடன் சேர்த்து, வாழை நட ஏதுவாக இருக்கும், என்ற எண்ணத்தில், முயற்சி செய்தவர்களுக்கு, நடக்காமால் போகவே, வன்மம், பொறாமை. காண்பித்து, அடிக்கடி வீண் சண்டை போட்டுக் கொண்டு இருந்தார்கள்.. வரதுவும் கஸ்துரி அண்ணியும்.

அதோடு வெளியூரில் தனக்கு வந்த ஆசிரியர் வேலை காரணமாக, கடந்த 10வருடமாக அந்தக் கொல்லையைப் பயன் படுத்திக் கொள்ள முடியாமல் போனது அவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது.

தங்களுக்குப் பயன்படாமல் போனது பற்றிக் கூட கவலையில்லை. நான் இனி ஒன்னும் செய்யமுடியாது என்கிற அல்ப சந்தோசம் அவர்களிடம் காணப்பட்டது.

மேற்கண்ட விஷயத்தை எண்ணிதான், வித்யாசொன்னாலும் இடம் வாங்கி 10வருடம் ஆச்சு. காலச் சுழற்சியில் மாற்றங்கள் ஏற்பட்டு இருக்கும் போது, பழைய விஷயம் சுத்தமா, மறந்து போய் இருப்பார்கள், என்று உள் மனசு சொல்லி கொண்டது.

பாதி மனதுடன் வித்யா கிராமத்தில் இறங்கினாள் என்பது தெரியாமல்இல்லை

எனக்கு..

அடுத்தஒரு

மணிநேரத்தில் வீட்டு

சாமான்களையும், வாழைகன்று. இயற்கை உரம் இவைகளை, சிங்காரம் இறக்கி விட்டுருந்தான்.

சாப்பாடு முடிஞ்சு பயணக் களைப்பு தீர, குட்டி தூக்கம் போட்ட பின்பு, தாய் மாமாவிடம் பேசும் போது,

“என்ன மாமா? பத்து வருடத்தில் ஊர் ரொம்ப மாறிப் போயிருக்கு. ஊர்ல எதாவது விசேஷம் உண்டா?”

”கடந்த 10வருஷத்தில் எல்லாருடைய வீட்டுக்கும், குடிநீர் குழாய் இணைப்பு கொடுத்துருக்காங்க.. பள்ளிக்கூடம் புதுக் கட்டிடம். கஸ்தூரி அண்ணிக்கும், வரதுவிற்கும் இலை மறை உறவு, வெட்ட வெளிச்சமாகி, அவமானம் தாங்காம அவள் கணவர் தூக்கில் தொங்கி இறந்துட்டாரு. வரது தான், இப்போது கஸ்துரிக்குச் சப்போர்ட்.

கந்து வட்டி வாங்கி எல்லோருடைய சாபத் தையும் வாங்கிக்கறான். ஆனா, அதைப் பத்தி அவன் கவலை படறது கிடையாது. ”

பெரிய கதை ஒன்று சொல்லி முடித்த மாதிரி, பெருமூச்சு விட்டார் மாமா.

அன்று மாலையே, நானும் சிங்காரமும் கொல்லையை, பார்வையிட்டுக் கொண்டிருந்த வேளை அண்ணி,

எதிரில் வந்தார்.

“என்ன வாசு !நம்ம ஊர் பள்ளிக்கூடதுக்கு, ஹெட் மாஸ்டராகப் போஸ்டிங் போட்டு இருக்காமே?; அவனவன் சொந்த ஊரை விட்டு, பாரின் போயிட்டு இருக்கிற காலத்தில, நீ சொந்த ஊருக்கு வந்தது சந்தோசமா இருக்கு.”

பாசத்துடன் கஸ்தூரி அண்ணி விசாரிக்க, நான் நெகிழ்ந்து போனேன்..

”எப்ப உன் கொல்லையைச் சீர் படுத்த போறே?

ஒரே புதர் மண்டியிருக்கு? ”

“600 வாழை பகன்றுநடபோறனே். ஊடு பயிர் வெண்டை, கத்திரி நட போறேன்.” அண்ணி.

“நல்ல செய்தி. ! எனக்குஇரண்டு சீப்பு வாழைக்கா தருவீ யா?”

அண்ணியின் பேசசு வேண்டுகோளா?, இல்லை கட்டாய எதிர்பார்ப்பா? எனக்கு அப்போது புரியாமல் போனது.

“ரொம்பத் தேங்க்ஸ் அண்ணி. ஒங்க ஆசீர்வாதம் எனக்கு வேணும்.”

“சார் கொல்லையைக் கடைசி வரைக்கும் பாத்துட்டேன். கம்ப்ளீட்டா கிளீன் பண்ணனும். இவங்க வீட்டு வேலியில் இருக்கும், மரத்தின் கிளை, நம்ம பக்கம் தொங்குது. அதைக் கழித்து விடணும். இல்லாட்டி போனா நம்ம வாழை நட்ட பிறகு, சூரிய ஒளி வர விடாம தடுக்கும். பயிர் சரியா வளராது. உடனே சொல்லி உடனே கழிச்சு விடச் சொல்லுங்க”.

“பின்னாடி காவேரி ஓடுது. நம்ம கொல்லை வாழையும், மத்த பயிர்களும் சூப்பரா விளையும் சார்”

”எங்கள் பேச்சை கவனித்து வந்த வரது

“ஆமாம் !ஆமாம் ! வாசுவின் ஆள் சொல்றது கரெக்ட் தான். கஸ்தூரி”நீ என்ன பண்றே? உன் ஆளை விட்டு கழித்து விடச் சொல்லு ”.

வரது கூட எனக்கு ஆதரவா பேசறாரு.. என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது.

இப்போ இவங்க பேசறதுக்கும், மாமாவும், ஊர்மக்களும், சொன்னதற்கும் நிறைய வித்தியாசம் இருக்கே?

ஒரு வேளை பழைய பகையை இரண்டு பேரும் மறந்துட்டாங்க போலே. என்று நினைத்தேன்..

“இத பாரு வாசு ! என் நிலைமை ஒனக்கு நல்லா தெரியும். வரது கிட்ட, கடன் வாங்கித் தான் கூலி கொடுக்கணும். நீ வசதியாதானே இருக்கே. நீயே கழிச்சு விட்டுடு.”

“என்ன வரது நான் சொல்றது கரெக்ட் தானே”.

வரது நமட்டு சிரிப்புடன்,

“ஆமாம் ஆமாம் நீ சொன்னது கரெக்ட் தான்.”

”சரி அண்ணி ஒங்க கிட்ட காசு கேக்கல! பெர்மிசன் மட்டும் தான் கேட்டேன்..

நாளைக்கே வேலையை ஆரம்பிக்கிறேன்.. ”

” என்ன வாசு இதுக்குப் போய்ப் பெர்மிஷன் கேட்டுகிட்டு” இது உன் கொல்லை. ”

வரதுவும் அண்ணியும் நக்கலா சிரித்த சிரிப்புக்கு, அப்போது அர்த்தம் தெரியாமல் போனது எனக்கு.

வீடு திரும்பியவுடன், “கஸ்தூரியும் வரதும் ஏதாவது பிரச்சனை பண்ணினாங்களா??”

“அட போங்க மாமா, !இரண்டு பேரும் எவ்வளவு தன்மையா, அன்புடன் நடந்து கிட்டாங்க. நீங்க அவங்கள பத்தி சொன்னதற்கு மாறி நடந்து கொண்டாங்க. எனக்கு ஆச்சர்யமா இருந்துச்சு.”

மறுநாள் சிங்காரமும், சில ஆட்களும் கொல்லையை, சீர் படுத்திக் கொண்டு இருந்தார்கள்.

”வேலி ஓரமா இருக்கிற, பூவரசு மரம் கிளைகளை,

கவனமா கழிச்சிட்டு, நீ காவேரியில் குளிச்சுட்டு, டிபன் சாப்பிட வந்துடு. மணி ஆயிடுச்சு. ”10மணி வாக்கில் சொல்லிவிட்டு வீடு வந்துருந்தேன்.

நான் வீட்டுக்கு வந்து டிபன் சாப்பிட்டு, பேப்பர் படித்துக் கொண்டிருந்த போது,

“ஏங்க சிங்காரம் இன்னும் வரல. ஒரு மணி நேரம் ஆச்சு. ஒரு எட்டு பாத்துட்டு வாங்க” ”பதட்டதுடன் சொன்னாள் வித்யா.

நான் போய்ப் பார்த்த போது நடு ஆற்றில்

துண்டுடன் இருந்ததைப் பார்த்து பதறிப்போய் விசாரித்தபோது.

“சார் ! என்னுடைய டிரஸ் மரத்தடியில் வைத்து இருந்ததை, அண்ணி வீட்டு ஆள் எடுத்து கிட்டு ஓடிட்டாரு”

“மக்கள் நடமாட்டம் இல்லை. அதான் உங்களக்கு தகவல் கொடுக்க முடியல.”

இது என்ன அநாகரிகம்?. ஒருவன் குளித்துக் கொண்டு இருக்கும்போது அவன் துணி மணிகளை எடுத்துக் கொண்டு போவது?

வீட்டுக்கு வந்து மாத்து வேட்டி சட்டை கொடுத்து, சிங்காரத்தை டிபன் சாப்பிட சொல்லிவிட்டு, அண்ணி வீடு நோக்கி வேகமாக நடக்க ஆரம்பித்தேன்

கோபம் கோபமாக வந்தது. “நாலு வார்த்தை, நறுக்கென்று கேட்க வேண்டும். இப்படிக் கேவலமா செஞ்சு இருக்கீங்க. வெக்கமா இல்லை என்று.”

நான் அண்ணி வீட்டை அடைவதுக்கு முன்பு, வரதுவும், அண்ணியும், மண்ணை வாரிஇறைத்துகொண்டே ”இந்தப் படு பாவி வாசு, நல்லா இருப்பானா? நாசமா போக !

குடும்பம் விளங்குமா? பூவரசு கிளையைக் கழிச்சி விடுன்னு, சொன்னா மரத்தை, வெட்டி தள்ளி இருக்கானே? இந்த அநியாயத் தை பாருங்க !”

கூச்சல் குழப்பம் தெரு மக்கள் கூட்டம்.. பத்திரகாளி யாய் மாறி இருந்தாள் கஸ்தூரி.

வரது கூட ஒத்து ஊதி கொண்டு இருந்தான்.

“இதோ பாரு வாசு !என் இரண்டு மரமும் போயிடிச்ச்சு. ஒழுங்கா, இரண்டு மரத்துக்கும் 6000 ரூபாய் கொடுத்துட்டு போ. இல்லாட்டி போனா, பஞ்சாயத்தைக் கூப்பிட்டு உன் மானத்த வாங்குவேன்.”

நேற்று பரிவு காட்டிய மனிதர்களா இவர்கள்? முரண்பாடுகளின் மொத்த உருவம் இவர்கள் தானோ? தன் வீட்டு வேலையாள் செஞ்ச, கேவலமான செயல் பத்தி, ஒரு வார்த்தை பேசல. இவங்க கிட்ட போய் நியாயம் எப்படிக் கேட்பது?”

லாஜிக் இல்லமால் சண்டை போடுவார்கள் என்று மாமா சொன்னது சரியா இருக்கே?

“என்ன அண்ணி? சின்னச் சின்னக் கிளைகள் தானே, கழிச்சி விட்டு இருக்கு. மரமே போயிடுச்சுன்னு கூச்சல் போட்டுகிட்டு இருக்கீங்க? இதுக்குப் போயி இவ்வளவு பணமா ! நியாயமா படலை.”

தனக்காக மாமி, மாமா, பேசியும் பிரயோஜனம் இல்லை என்று தெரிந்தது எனக்கு.

அதற்குள் தகவல் தெரிந்து பஞ்சாயத்து தலைவர், இன்னும் ஓரு சில பிரமுகர்கள் கூட்டம் கூடவே, எனக்கு அவமானமாகி போனது.

”இதோ பாரு வாசு! நியாயமா பார்த்தா, இந்தத் தவறை, வெளியூர்காரன் செஞ்சுட்டுஇருந்தா,

தண்டனை வேறு விதமாக இருக்கும். நீ நம்முர் பையன். பேசாம, அவங்க கேட்ட பணத்தை, பெரிய மனசு பண்ணி, கொடுத்துடு. அவங்களும் இல்லாத பட்டவங்க. எதுக்கு வீணா பிரச்சனை பண்ணிக்கிட்டு?” என்று ஒரு தலை பட்சமாகத் தீர்ப்பு சொல்லவே, கோபமானேன்.

கூட்டத்தில் இருந்த மாமா என்னைத் தனியாகக் கூப்பிட்டு, ”வாசு நீண்ட நாளைக்குப் பிறகு, நீ இந்த ஊருக்கு, வந்து ருக்கே. நீ நினைக்கிற மாதிரி ஊரு, இப்போ இல்லை. பொறாமையும்,

காழ்ப்புணர்ச்சியும், நிறைய உள்ள ஊர். நானும் மாமியும் அவ்வளவு சொல்லியும், அந்தப் பொம்பள கேக்கமாட்டேன்னு, நிக்கறான்னா வரது கொடுக்கிற தைரியம். ”

“நீ நினைக்கலாம், நாம அரசாங்க ஊழியர். நம்மளை ஒன்னும் செய்ய முடியாதுன்னு. நீ எப்பேர்ப்பட்ட ஆளா இருந்தாலும், கிராம பஞ்சாயத்துக்குக் கட்டுப் பட்டுதான் நடக்கணும். உன் கவுரவம், உன் பெருமை, எல்லாம் இங்கே செல்லுபடி யாகாது.”

“நியாயம், அநியாயம் அலசி பார்க்கிற, மன பக்குவம் கஸ்தூரி கிட்டே கிடையாது. ஒனக்குப் பணம் முக்கியமா? தன்மானம் முக்கியமா?”

மாமா சொன்னது சரியாகத் தான் பட்டது. ஊருக்கு வந்த இரண்டாவது நாளே பிரச்சனை. நாமே இந்த ஊர்ல குப்பை கொட்டியாகணும். ?

வித்யாவை பார்த்தேன். தன் தலையில் அடித்துக் கொண்டாள். ” இதுக்குத் தான் அப்பவே சொன்னேன் கேட்டிங்களா? ”

என்னால் எதுவும் பேச முடியமால் கொஞ்ச நேரம் கழித்து. என்னைத் தனியாகக் கூப்பிட்டு, என் காதில் கிசு கிசுத்தாள்.

“கொஞ்சம் வெயிட் பண்ணுங்க இதோ 5 நிமிடம் வீடு வரைக்கும் போயிட்டு வந்துடறேன்.”

கஸ்தூரியும், வரதுவும், தாங்கள் நினச்ச காரியம், நடக்கப் போகுது என்ற இறுமாப்பில் குதுகளித் து கொண்டிருந்தார்கள்.

அடுத்த 10வது நிமிடம் வி. ஏ. ஓ தன் பணியாளர்களுடன் வந்த போது, தலைவரும் மற்றவர்களுக்கும் ஆச்சர்யம்!”

இவர் ஏன் இங்கு?.

எப்படி?

முகத்தில் பீதி தென்பட்டாலும், அதைக் காட்டி கொள்ளாமல், அனாவசியமா வாசு மூக்கு, உடை படப் போகிறான் என்று சொல்லி சிரித்துக் கொண்டு இருந்தார்கள்

கஸ்தூரியும் வரதுவும்.

வி. ஏ ஓ தலைவரிடம் பேச ஆரம்பித்தார். ”வாசு சாருக்கு, வேலி யார் பொழியில் இருக்குது? என்கிற சந்தேகம். இதன் சாதகப் பாதக முடிவுக்குக் கட்டுபட்டுப் பின் பஞ்சாயத்து உத்திரவுக்குப் பணம் செலுத்திகிறேன் என்ற சொல்லி இருக்கார்.

நிலத்தை அளப்பதற்குப் பீஸ் கட்டி இருக்கார். அதனால கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. ”

தலைவர் ஒத்து கொள்ளவே,

வி ஏ. ஓ தன் வேலையை ஆரம்பித்தார்.

வேலை முடித்த பின், பீல்ட் மெசர் மென்ட் புக், சிட்டா எல்லாவற்றையும் சரி பார்த்தபின் தலைவர் பேச ஆரம்பித்தார்.

”பத்து வருடத்துக்கு முன்பு, அதாவது வாசு வேலை கிடைத்து, வெளியூர் போன மறு நாளே, வாசு தன் பொழியில் போட்டுருந்த வேலியை, எடுத்து விட்டு, தன் கொல்லை

எல்லையிலிருந்து 5அடி தள்ளி, அதாவது வாசுவின் பொழியில் பூவரசு போத்துகளை நட்டு, கிட்ட தட்ட 1000x5=5000 சதுர அடிகள் ஆக்ரமிப்புச் செய்து இருக்கிறார் கஸ்தூரி அண்ணி. இதுக்கு வரதுவும், உடந்தையாக இருந்துள்ளார்.

.. பத்து வருடமாக, வாசு வந்து பார்க்கும் சூழ்நிலை இல்லாத காரணம். , இவர்களுக்குச் சாதகமாகப் பயன் பட்டுப் போனது.

எனவே உடனடியாக 5000 சதுர அடியில் அமைந்துள்ள போத்துகள், வேலி அகற்றி விட வேண்டும். வாசுவின் வேலையாளின் துணி மணிகளை எடுத்து ஒளித்து வைத்த கஸ்தூரியும், அவங்க ஆளும், வாசு, சிங்காரம் இருவரிடமும் மன்னிப்பு கேட்பதுடன், வாசுவுக்கு மன உளைச்சல் கொடுத்து, அவமானம் படுத்திய குற்றத்திற்கு 2000 ரூபாய் அபராதம்.

அதோடு வீண் பஞ்சாயத்து கூட்டி யதற்கு, அபராதம் 1000 ரூபாய் கட்ட வேண்டும் எனத் தீர்ப்பு வழங்கபடுகிறது.

கஸ்தூரி செய்த குற்றம் ஆதார பூர்வமாக நிரூபிக்கப் பட்டு விட்டது.

வாசு மூலம், தாங்கள் பணம் சம்பாதிக்கலாம், என்று நினைத்த வரதுவும், கஸ்தூரி யும், தங்கள் விதி யை நொந்து பணத்தைக் கொண்டு வர வீட்டுக்கு உள்ளே போனார்கள்.

தங்கள் எண்ணம் நீறு பூத்த நெருப்பா மாறி போனதை எண்ணி கூனிக் குறுகி நின்று கொண்டுருந்தார்கள்.

எத்தனை பெரிய மனிதர்களுக்கு எத்தனை சிறிய அறிவு.

தலைவருக்கும் வி ஏ. ஓ விற்கும் நன்றி சொல்லி விட்டு, வித்யாவிற்குக் கண்கள் மூலம் நன்றி சொன்னேன் வ.

பிரச்சனை போய்க் கொண்டுருந்த போது, கொல்லையைக் கடைசி வரை பார்த்து வந்த வித்யா, தன்னிடம்

“ஏங்க !நாம கொல்லையை வாங்கின போது, அண்ணி வீட்டு சுவர் ஒட்டி, வேலி இருந்த ஞாபகம். ஆனா இப்போ பார்க்கும் போது அவங்க வீட்டு சுவரலிருந்து 5அடி தள்ளி, நம்ம பொழியில் போத்து நட்டு, வேலி அமைச்சு இருக்காங்க. எனக்கு டவுட்டா இருக்கு. எதுக்கும் வி. ஏ. ஓ விட்டு அளக்க சொல்லுங்க”

என்று தான் படித்த சர்வேயர் கோர்ஸ் அறிவு தக்க சமயத்தில் பளிச்சிட

வாசுவிடம் ஆலோசனை சொன்னது மட்டும் இல்லாமல், அதை நடைமுறைப்படுத்த சொல்லி, தன் சமயோசித புத்தியினால் பணத் தையும்

தன் மானத்தையும் காப்பாற்றிய என் மனைவி ஒரு மந்திரியாகத் தான் தென்பட்டாள்..

**- முதலெழுத்து நவம்பர் 2023**

# 5. மனிதமும் மாரிமுத்தும்

ஐரோப்பிய நாடுகளில் ஒன்றான ஆஸ்திரியாவில், நல்ல வேலையில் இருந்த இனியன் , ஒரே நேரத்தில் அப்பா, அம்மா, இரண்டு பேருக்கும் ஆக்சிடென்ட் ஆனதால், இந்தியா திரும்பும்படி நிலையானது

ஊர். வந்ததும் பாண்டமிக் மீண்டும் அங்குப் போகமுடியாத சூழ்நிலை.

பாண்டமிக் முடிந்தும், இரண்டு வருடமாக, வேலை கிடைக்காத காரணத்தினால், மன உளைச்சலில் தவித்தான். , இனியன்..

எங்கே இன்டர்வியூ போனாலும் நீங்க படித்துள்ள படிப்பு, “ ஓவர்குவாலிபிகேஷன்”சார். எங்களுக்குச் செட் ஆகாது” என்றும், சில இடங்களில் சொல்லி அனுப்பறோம் என்றும்;, சில கம்பெனிகளில், ” ஷார்ட் லிஸ்டில்” வைச்சிருக்கோம்; வி வில் கால் யூ பேக்” ..... என்றும் கூறவும் தனக்கு இந்த ஊரில் வேலை கிடைக்காதா என்று மனதுக்குள் கவலைகொண்டான் இனியன்..

ஆஸ்திரியாவில், பழகிய நாட்களில், அந்த நாட்டு கலாச்சாரமும், பழக்க வழக்கங்கள், நிர்வாகத் திறமை, நன்னடத்தைச் சான்றிதழ் எதிலும் நேர்மையும், இன்வால்மெண்டையும், கொண்டிருந்த இணியன், தன்னையும்,

அவ்வாறே வளர்த்துக் கொண்டான். , உழைக்கத் தயாராக இருந்தும், வாய்ப்பே கிடைக்காத வாழ்க்கை. !

என்ன உலகமிது? நேர்மைக்கும், திறமைக்கும், மதிப்பில்லை. ;

சம்பாதித்த பணத்தில் வாங்கிய வீடு. அதையும் அடமானம் வைச்சு, அந்தப் பணத்தில், அவங்களுக்கு, மருத்துவச் செலவு,. இரண்டு வருடங்களாக

எப்படியோ சமாளிச்சாச்சு!.

ஆனால் எந்த, கவலையும் இல்லாமல். பக்கத்து தெரு நண்பர் வீட்டுக்குச் சீட் விளையாட போயிருந்தார் ராமலிங்கம் இனியனின் அப்பா.

அன்று அந்த ராம்நாத்ஐ. டி சொலுஷன்ஸ். ஹெச் ஆர். முன்பு

“ஓ. கே இனியன் உங்க புரபைல் பிடிச்சிருக்கு வீ வில் கால் யூ பேக்” என்று சொன்னதும்;

வழக்கமான வசனம் தானே இது! வெறுப்புடன்லிஃப்ட் விட்டு வெளியே வந்தவனுக்கு, உடம்பும் மனசும் சோர்வை கொடுத்தது. வீடுவந்து சேர்ந்தான்.

அவன் பைலை தூக்கி எறிந்த வேகமும், கோபமும், அவனுக்கு வேலை கிடைக்க வில்லை என்று. உணர முடிந்தது.

“அம்மா! எனக்கு ரொம்பநாளா ஒரு சந்தேகம். நம்ம நிலைமை, இப்படி ஆனதுக்குக் காரணம், ? ஏதோ தெய்வ குத்தம் இருக்கணும்மா!”

குலதெய்வத்துக்குப் படையல் போட்டு பல வருஷமாச்சு;குலதெய்வத்தைக் கும்பிட்டு, வருஷம் ஒரு முறை போய்ப் படையல் போட்டிருந்தா, விபத்தும்நடந்துருக்காதுநானும் ஆஸ்திரியாவிலிருந்து வந்துருக்கமாட்டேன்;. அதான் இவ்வளவு சோதனை; புலம்பினான் இனியன்.

நீ சொல்றதும் ஒரு காரணமாக இருக்கலாம்“. ஒன் வேதனை எனக்குப் புரியுது;. நாளைக்கே, நாம ஊருக்கு போய், குலதெய்வ சாமியை கும்பிடுவோம்.”

அவருக்கு எப்போதுமே கடவுள் நம்பிக்கை கிடையாது. அவர் வரமாட்டார்.

“பாரேன் நிச்சயம் நல்லது நடக்கும்”

அம்மாவின் ஆறுதலான வார்ததையினால், அமைதியடைந்து, அன்றிரவே புறப்படுவதற்கு, பயண ஏற்பாடுகளைச் செய்தான் இனியன்..

ஊரின் எல்லையில இறக்கிவிட்டுச் சென்றது அந்தப் பேருந்து. ; 2கீமீ உள்ள கிராமத்துக்கு நடந்து தான் போகவேண்டும்.

15 வருடங்கள் முன்பு, மண் சாலையாக இருந்தது. இப்போது தார் சாலை..

சாலையின் இரு புறமும் 10அடி இடைவெளியில், வறட்சியைத் தாங்கும் சில மரக்கன்றுகள் நடபட்டு, அது கம்பி வேலி மூலம் பாதுகாக்கபட்டுருந்தது.

இந்தக் குலதெய்வ பிரார்த்தனைக்குப் பிறகாவது, நல்ல வேலை கிடைக்கணும். வீட்டை அடமானத்திலுருந்து மீட்கணும்;என்கிற சிந்தனையுடன் நடந்து போனவனை, உரசி சர்ரென்று ஒரு கார் வந்து நின்றது.

காரிலிருந்து இறங்கிய அந்த நபர், இனியனை பார்த்து, ”எப்படிடா இருக்கே? இனியா ?என்றதும் கொஞ்சநேரம் அதிர்ச்சியானான் இனியன்.

“. நீ .... நீங்க யாரு?”

”டேய்! நான் மாரிமுத்துடா !10 ம் வகுப்பு வரைக்கும்ஒன்னோட

படிச்சவன்டா!”

இப்போது இனியனுக்குப் புரிந்தது. “மக்கு மாரிமுத்து, மரக்கன்று பிடிங்கி மாரிமுத்து” என்கிறபட்ட பெயருக்கு சொந்தக்காரன் தானே நீ. ! என்றுசொல்ல நினைத்தவன்,.

அவன் அணிந்திருந்த உடை, சென்ட் வாசம் கூலிங் கிளாஸ், தோற்றம். இவை எல்லாம் பார்த்த பிறகு அப்படிச் சொல்ல தயக்கமாக இருந்தது.

“முதலில் வண்டியில் ஏறுங்க”வீட்டில் போய்ப் பேசிக்கலாம்”.

” குலதெய்வம் கோயிலுக்குச் சாமி கும்பிட வந்தோம்”.

வீடு பெரிதாகக் காணப்பட்டது. 15, வருடத்துக்கு முன்பு சாதாரணமான ஓடு வீடு; இப்போது மாடி வீட்டில் வாசம். வாசல் இருபுறமும் பூச்செடிகள் நர்சரி, மரக்கன்றுகள்.

வீட்டின் பின்புறம் பசுமையான காடு ; வானுயர்ந்த மரங்கள். ஒரு சோலைக்குள் நுழைந்த அனுபவம் மாதிரி இருந்தது.

“தேன்மொழி! தேன் மொழி.”இவங்க மேகலாம்மா ;. இது இனியன், என் பள்ளித் தோழன்” மேலத்தெரு தான் இவங்களும்;” அறிமுகப் படுத்ததினான்.

“குலதெய்வத்துக்குப் படையல் போட சென்னையிலிருந்து வந்துருக்காங்க”

“அப்படியா !சந்தோசம் வாங்க வாங்க”நீங்க இரண்டு பேரும் குளிச்சிட்டு வாங்க,

டிபன் சாப்பிட்டு, பிறகு கோயிலுக்குப் போகலாம். ”

“சரி இனியா! பூசாரிக்கு தகவல் சொல்லிட்டயா?””

“யாரு பூசாரின்னு தெரியாது மாரி?”

”கவலைப்படாதே நம்ம பங்காளிதான் பூசாரி; அவர்கிட்ட முழு விபரமும் சொல்றேன்;

அவர் பூஜைக்கு, படையலுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வாரு. ”

கம்பீரமான

அய்யனார்க்குக் கண் குளிர அபிசேகம் படையல் போட்ட பிறகு, மாரிமுத்து வீட்டுக்கு வந்தார்கள் இனி யனும் மேகலாவும்;

தேன்மொழி பெரிய விருந்தே தயார் பண்ணியிருந்தாள்.

“என்னடாமாரிஇது?”

சும்மா இருடா, படிக்கிற காலத்திலே, நீ செஞ்சா உதவிக்கு இது ;. சாதாரணம்; இதைப் போய்ப் பெரிசா பேசிக்கிட்டு. ”

சாப்பிட்ட களைப்பு, பிரயாண களைப்பு, போக, இனியனும், மேகலாவும், சற்று ஓய்வு எடுத்தபின், மாரிமுத்துப் பேச்சை ஆரம்பித்தான்.

“ஆமாம் இனியா! நீ சாப்ட்வேர் இன்ஜினீயரிங் முடிச்சு, நல்ல சம்பளத்தில், ஆஸ்திரியாவில வேலை பார்த்து வரேன்னு, பாலு ஒன்னை ஒரு தரம் பாத்துட்டு, எங்கிட்ட தகவல் சொன்னான். எனக்குச் சந்தோசமாக இருந்துச்சு”.

“அதுஒரு பெரிய கதைடா”நடந்த விஷயத்தைச் சுருக்கமா சொன்னான் இனியன்.

“கேக்கவே கஷ்டமா இருக்குடா”!

“ஆமாம் என் கதை கிடக்கட்டும் மாரி”‘நீ எப்படி இருக்கே? ஆளே மாறி போய் இருக்கே!”எப்படிடா இவ்வளவு வளர்ச்சி?

சாத்தியமாச்சு?

“சொல்றேன்,. ஓங்களுடன் பத்தாவது முடிச்சவுடன், நீ சென்னை போயீட்டே; நான் டிப்ளமா படிக்கப் பக்கத்து டவுனுக்குப் போனேன்; படிப்பு வரலே.”அந்த வருடம் கிராமத்தில், பயங்கர

வறட்சி;. விவசாயத்துக்கு வாங்கின கடனை, அப்பாவினால் அடைக்கமுடியலை‘எனக்கும் எந்த வேலையும் கிடைக்கலை. ;.” சின்ன வயசிலேயே சின்னச் சின்னச் செடிகன்றுகளைப் பிடுங்கி, எங்க வீட்டுத் தோட்டத்தில் நடுவேன்னு உனக்குத் தெரியும்;. ” அதனாலேயே “தண்டசோறுண்ணு, அப்பா வேறே திட்டிகிட்ட இருந்தாரு.”

வயகாட்டை வித்துட்டுக் கடனை அடைச்சுட்டு, சென்னை வந்து ஹோட்டலில் நானும் அப்பாவும் சர்வர் வேலை பாக்கலாம்ன்னு யோசித்தோம்…

அந்த்சமயத்தில், ஒரு நாள், பிரபலமான அந்தத் தொலைகாட்சியில், “மரப்பயிரும் பணப்பயிரே”என்ற தலைப்பில் ஒருவர் பேசியதைக் கேட்டேன். அதான், என் வாழ்க்கையின் திருப்புமுனை. என்று அன்று எனக்குத் தெரியாது. ”

எதிர்காலச் சந்ததியினரின் நினைத்துப் பார்க்கும் போது சுற்றுச் சூழலைப் பாதுகாக்க, மனித வளத்தைக் காப்பாற்ற, மரம் நடுவது தான் ஒரே வழி என்று எனக்குத் தோணிச்சு. ”

அப்பாவின் எதிர்ப்பை மீறி” நூறு தேக்கு மரக்கன்றுகளை நட்டேன்;. அது பிற்காலத்தில் உதவும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. ”

“ஒரே வருடத்தில் தேக்கு மரக் கன்றுகள் 20அடி உயரம் வளர்ந்ததைக் கண்டு ஆச்சர்யமானேன்;. அப்பாவுக்கும் லேசா நம்பிக்கை பிறந்தது. அடுத்து நூறு மாமரக் கன்றுகள் வளர்ச்சியும் உத்வேகத்தைக் கொடுத்தது.”

“ஊரில் எல்லோரும், நாலு பயிரைப் போ ட்டோமா; நாலு காசைப் பார்தோமான்னு இல்லாம; மாரிமுத்து அவனுக்கு அழிவைத் தேடிக்கிறான்; கிறுக்கன்”என்று என் காதுபட என்னைக் கிண்டல் செய்தார்கள். ”

”கொஞ்சம் கொஞ்சமா என்னைப் புரிஞ்சுக்கிட்ட அப்பா, ஒரு நாள் திடீரென மாரடைப்பில் காலமானார். ; அடுத்த வருடமே அம்மாவும் இறந்துட்டாங்கா;.

எனக்கு இவர்கள் இல்லாதது வெறுமையைத் தந்தது. ”

“என் கல்யாணத்துக்குத் தேக்கு மரம் வெட்டி விற்று, அந்தப் பணத்தில் செலவு செய்தேன். வெட்டிய மரங்களுக்கு இரு மடங்காக மரக் கன்றுகள் நட்டேன்.”

”தேன்மொழியைக் கல்யாணம் செய்த பிறகு, அவளுடைய ஊக்கம் ஓழைப்புக் காரணமாக,. 15 வருடம் முன்பு10ஏக்கரமட்டும்

வைச்சுருந்த நான் இப்போ 30ஏக்கர் நிலத்துக்குச் சொந்த காரன் “.. இன்னிக்கு மரங்கள், கிழங்குச் செடிகள், காய்கறிகள் என்று அடர்ந்து வலமாகப் பச்சைப் பசேலென்று கண்ணுக்குக் குளிர்ச்சியாக இருக்கா இல்லையா?இனியன்”

“ஆமாண்டா!உண்மையில்பாக்கசந்தோசமாக இருக்குடா.”

“புதுமையாக என்ன செய்யலாம் என்று யோசித்தபோது இயற்கை விவசாயி நம்மாழ்வார்அறிமுகம் கிடைத்தது;”அவரை சந்தித்தபிறகு இரசாயனஉரங்களை

முற்றிலும்தவிர்த்தேன். “. ஆடு மாடுகள் கழிவுகளை, இந்தத் தோ ட்டத்தின் நடுநடுவே இருக்கும் குழிகளில் நிரப்புவேன். மாடுகளின் சானத்தை, கம்போஸ்ட் குழிகளில் நிரப்பி விடுவேன்;. வேப்பம் புண்ணாக்கு தான் மரங்களுக்கும், பயிர்களுக்கும், அடியுரம் ; தோட்டத்தில் களை எடுப்பதில்லை; உழுவதில்லை; கழிவுகளை அப்படியே விட்டு விடுவதால், அவை மக்கி நுண்ணியிர்கள்பெருகி, மண்ணும் வளம் பெற்றது.”

“இப்போதுஎன்தோட்டத்தில்200வகையைச்சேர்ந்த6000மரங்கள்அஇருக்கு”. 125ரகமூலிகைசெடிகள்;இதைதவிரபலா, வாழை, எலுமிச்சை, மாதுளம் கனி தரும் மரங்கள் இருக்கு.

“ரியலி ! சூப்பர்டா”.

“மரங்களைக் கலந்து தான் நடுவேன் ஒரு மரம் பூமியிலிருந்து எடுக்கிற சத்திற்குப் பதிலாக இன்னொரு சத்தை பூமிக்குத் தருகிறது இனியா.”

இப்படி ஒவ்வொரு மரமும் ஒன்றை எடுத்துக்கொண்டு, இன்னொன்றை தருவதால், சங்கிலித் தொடர் போல் எல்லா மரங்களுக்கும், போதிய சத்துக்கள் கிடைக்கது;.

அதனால், அவை ஆரோக்கியமா வளருது.

பெருகி வரும் மக்கள் தொகையால் வளர்க்க வேண்டியவை (மரங்கள்) அழிக்கப் படுகின்றன. அழிக்க வேண்டியவை வளர்க்கப் படுகின்றன (சாதிகளும் மதங்களும். )”

இப்போது காற்று உணவு நீர் அனைத்தும் மாசுப்பட்டுள்ளது.

என்னைப் பார்த்து எல்லோரும் மரம் நட ஆரம்பிச்சித்தினால் தான்.. இப்போ நல்ல மழை

இவ்வளவு விசயம் தெரிஞ்ச உன்னைப் பார்த்து, பெருமை படறேன். அதிகம் படிக்கலன்னுபேரு. !

ஆனால் சமுதாயசிந்தனையுடன், சுற்றுசூழல் பாதுக்காக்கபடனம்ன்னு, நீ நினைச்சு இந்தக் காரியத்தில், இறங்கியது, நிச்சயம் பாராட்டுக்குரியது மாரி.. ”

“இன்னொன்று தெரியுமா?மனிதர்களிடம் பேசும் போது கிடைக்காத நிம்மதி, மரங்களிடம் பேசும் போது அமைதியான மனநிலை கிடைக்கிறது.”

“எனக்கொரு சந்தேகம் மாரி!நீ சொல்றது எல்லாம் சரிதான்;. விவசாயத்தில் கிடைக்கிற பணத்தை விட, மரம் வளர்த்துப் பணம் எப்படிப் பார்க்கறது?லாபம் கிடைக்குமா?”

ஒனக்கு மட்டுமல்ல இனியா? நிறையப் பேருக்கு இந்தக் கவலைஇருக்கு. ; இன்னிக்கு விவசாயம் பண்ணுவதில், ஏக ப்பட்டசிரமங்கள். ; ஆனா, விவசாயத்தை விட, மரத்தில் நல்ல லாபம் வருஷா வருஷம் நான் பாத்துகிட்டு வரேன்!”

“உதாரணத்துக்குச் செஞ்சந்தன மரம், அதான்டா செம்மரத்துக்கு, ஜப்பானில் கிராக்கி அதிகம். அதுக்கு அணு உலை கதிர் வீச்சைத் தடுக்கிற சக்தி இருக்கு. ஒரு டன் மரம் விலை மூணுலிருந்து நாலு லட்சம் வரை போகுது. !இந்த மரம் எப்பேர்பட்ட வற ட்சியிலும் வளரக்கூடியது.”

நீ ஊர் வரும்போது பார்த்த மரக்கன்றுகள். பஞ்சாயத்துத் தலைவரிடம் ஒப்புதல் வாங்கி, இனமா நான் நட்டது தான். முள் வேலியும் போட்டிருக்கேன்..

அய்யா கலாம் சொன்னமாதிரி மரக்கன்றுகள் நிறைய நடணும்.

ஒன் திறமை புத்திசாலித்தனம் சின்ன வயசில் இருந்து பாத்துஇருக்கேன்.. என்னை மாதிரி நீயும் ஜெயிக்கணும்ன்னு மனப் பூர்வமாக நினைக்கிறேன்;.

”எதுக்குடா உன் உழைப்பை, அந்நிய நாட்டுக்கோ, இல்லை கார்பரேட் கம்பனிக்கோ, கொடுத்து, 24மணி நேரமும் மன அழத்ததோடு வாழக்கை நடத்தணும் ?

இந்தத் தொழிலை இன்னும் விரிவாக்கம் செய்யணும். “இந்த மரம் வளர்ப்பது பற்றியும், வித்தியாசமான மர்கன்றுகள் பற்றித் தெரிஞ்சுக்க ஏதோஆப்இருக்குண்ணு கேள்விப்பட்டேன்;. அதை நீ சொந்தமா டெவலப் பண்ணு.. அதன் மூலம் மரங்கள் பற்றிய பயன் இந்த டிஜிட்டல் உலகுக்குத் தெரிய வரட்டும்”.

ஒருவெப்சைட், உருவாக்கணும்;. ஆன் லைன் பிசினஸ் பண்ணனும்;. இந்தியா முழுவதும் மேலும் விரிவு படுத்த, ஒன்னை மாதிரி, ஆள் தேவை.

“உன் சாப்ட்வேர்டெக்னிகல் அறிவு திறமைக்குத் தகுந்த சம்பளமும், மேனஜிங் டைரக்டர் போஸ்ட்டும் தர நான் தயாரா இருக்கேன்”

“நாமே கட்டாயம் ஜெயிக்கணும்; என்னடா சொல்ற?..”..

ஒவ்வொரு பள்ளிக்கூடத்துக்குச் சென்று மரங்கள் ஏன் நடவேண்டும் என்கிற விழிப்புணர்வு ஏற்படுத் தனும். பள்ளி வளாகத்தில் இனமாக மரக்கன்றுகள் நடவேண்டும். டவுனில் ஒரு இடம் பார்த்து நர்சரி கார்டன் வைப்போம்.

“ஆமாம் மாரி. எவ்வளவு அனுபவம்?. வாழ்க்கையின் ரியாலிட்டியை மிக அருமையாக நீ புரிஞ்சு கொண்டதோடு மட்டுமல்லாமல், எனக்கும் புரிய வைச்சு, என் கண்ணைத் திறந்துட்டே”

“இவ்வளவு நாள் வேலை வேலைன்னு தேடாமா, சுய தொழில் பண்ணியிருந்தா, நல்லா இருந்திருக்கும்.”

“உனக்குத் தோள் கொடுக்க நான் தயார்;. நாளைக்கே, எங்க விவசாய நிலத்திலே மரக்கன்றுகளை ஒன் கையினால் நடு”.

குலதெய்வத்தைக் கும்பிட வந்த எனக்கு, இளகிய இதயமும், இரக்க சுபாவமும், உறுதியான செயல்பாடுகளும் கொண்டிருககும் நீ தான், மனிதம் என்கிற வார்த்தைக்கு

உண்மையான அர்த்தம். கொடுத்துருக்கே!

“நண்பேன்டா” மாரியும் இனியனும், ஆரதழுவ அந்தச் சந்தோச தருணத்தை ரசித்தார்கள் மேகலாவும், தேன்மொழியும்..

(ஆரண்ய நிவாஸ் மின் இதழ் நவம்பர் 2023.

# 6. ஒரே தீர்வு

அன்று காலை, லக்ஷ்மி எழுந்திருக்கும் போது மணி எட்டு..

உடல் வலி, அத்துடன் மன வலியும் சேர்ந்து சோர்வை கொடுத்தது. வயது ஒன்றும் அதிகமில்லை 55 தான்.

நமக்குப் பிடித்தமான விசயங்கள் நடக்காது போனால், இல்லை அது முற்றிலும் பிறரால் புறக்கணிக்கப் பட்டிருந்தால், இம்மாதிரி பிரச்சனைகள் உடலிலும் மனதிலும் வரத்தானே செய்யும்.

அப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் லக்ஷ்மியின் வாழ்க்கை இப்போது.

வேலைகாரம்மா சிவகாமி, உள்ளே பாக்கெட் பாலுடன் நுழைந்தாள்.

சிவகாமி டீ போட்டுக் கொண்டு வருவதற்குள், காலைக்கடன்களை, முடித்துக்கொண்டு சோஃபாவில் அமர்ந்த லக்ஷ்மி பிளட் பிரஸர் மாத்திரை போட்டுக்கொண்டு டீயை குடித்தார்.

காலை டிபன் தயார் செய்யும் வேலையில் சிவகாமி தன்னைத் தயார்படுத்திக் கொண்டுருந்த போது, லக்ஷ்மி ஆன்ட்டி ஹாலில் மாட்டபட்டுருந்த போட்டோக்களைப் பார்த்து விட்டுக் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

இந்த மனக்குமறலுக்கு மருந்தே கிடையாதா? தன்னுள் கேள்விக் கேட்டுக்கொண்டாள்.

காலை டிபன் முடித்தபிறகு, சிறிது நேரம் செய்திதாளில் பார்வையைச் செலுத்தினார். மனசு அதை நிராகரித்தது. மடித்து வைத்தார்.

மீண்டும் ஹாலில் மாட்டப் பட்டிருந்த போட்டோக்களைப் பார்த்து பார்த்து மனதுக்குள் அழுதார்.

காய்கறி வாங்க சிவகாமி மார்கெட் கிளம்பி போயிருந்தாள்.

நேரத்தை போக்க வேண்டுமே. எனவே லக்ஷ்மி ஆன்ட்டி தொலைக்காட்சியை, ஆன் செய்த போது, அங்கு ஒரு கலந்துரையாடல் நிகழ்ச்சி. ஓடிக்கொண்டிருந்தது.

நிகழ்ச்சி நடத்துபவர் பங்கேற்பாளர்களிடம் “நீங்கள் உங்களுடைய வாழ்வை யாருக்காக வாழ்கிறீர்கள்?” என்கிற கேள்வியைக் கேட்ட அடுத்த நொடி அந்தக் கேள்வி தன்னைப் பார்த்து கேட்ட மாதிரி இருந்தது அவருக்கு.

அந்தக் கேள்வி லக்ஷ்மி ஆன்ட்டியின் ஆழ்மனதில் ஆயிரம் கேள்விகளைக் கேட்டு துளைத்து எடுத்தது.

கணவனைப் பறிகொடுத்து வட இந்தியாவிலிருந்து புலம் பெயர்ந்த போது ரமேஷுக்கு 10 வயது. இந்த ஊருக்கு வந்து, அவனை நன்கு படிக்க வைத்து, அவன் விரும்பிய ராஷ்மியை

கல்யாணம் செய்துவைத்து, கொள்ளை அழகு பேத்தி சுஷ்மிதாவை அவர்கள் தன் கையில் கொடுத்தபோது, சொர்க்கம் இனி சுஷ்மிதா தான் என்று நினைத்தாள்.

சுஷ்மிதா ஒரு அழகு தேவதை.. அவளைத் தினம் பாத்து பாத்து ரசித்து, அவளுக்காக விளையாட்டுப் பொம்மைகள் வாங்கிக்கொடுத்து, அவளோடு விளையாடின பொழுதுகள், தான் கொடுத்து வைத்தவள் என்று எண்ணினாள்.

.

இரண்டு வயது சுஷ்மிதா வுடன் கொஞ்சம் நேரம் கிரிக்கெட் விளையாட்டு;பின்னர்

புட்பால் விளையாட்டு.

அதன் பின்னர்க் காய்கறிகள் பழங்கள் பற்றிய பாடம். மனித உறுப்புகள் பற்றிச் சொல்லிக் கொடுத்த பிறகு, ஆங்கிலத்தில் ரைம்ஸ் பற்றிய படிப்பு. , அதன் பின் ஒன் டு த் ரீ சொல்லிக்கொடுத்த பிறகு தாய்மொழி இந்தியாக இருந்த போதிலும், தன்

பேத்திக்குத் தமிழ் நன்கு கற்க வேண்டும் என்று அவளுக்கு ஆத்திசூடி, திருக்குறள் கற்றுக் கொடுத்ததும்.

பயங்கரசுட்டியானசுஷ்மிதா உடனே அதை கற்றுக்கொண்டு அறம் செய விரும்பு என்று ஆரம்பித்து ஊக்கமது கைவிடேல் என்று சொல்லும் போது, இரண்டு கைகளாலும் சைகை காண்பிப்பாள். அதை நினைத்து நினைத்து சந்தோசபட்ட லக்ஷ்மி, இப்போது அவள் இல்லாத வெறுமையைப் பார்க்கின்ற போது, மனதுக்குள் அழ ஆரம்பித்தாள்.

தன்வயது எவ்வளவு இருந்தால் என்ன? சுஷ்மிதாவுக்கு ஒவ்வொரு பாடம் சொல்லிக்கொடுக்கும் போது தானும் ஒரு குழந்தை போல் ஆகி திரும்ப அவள் தன் மழலையில் சொல்கிற போது அனுபவிக்கும் ஆனந்தம் வார்த்தையில் வர்ணிக்க இயலாது.

யானை சவாரிவிளையாட்டு அவளுக்கு மிகவும் பிடிக்கும். ;தன் உடம்பின் மீது அவளை ஏற்றிக்கொண்டு ஒரு ரவுண்ட் வந்து இரண்டாவது ரவுண்ட் கேட்கும் போது பாட்டிக்கு மூட்டு வலி “உவ்வா” என்று சொன்ன அடுத்த நொடி, அவள் அயோடாக்ஸ் எடுத்து வந்து தேய்த்து விடும் போது, அப்படியே கட்டி அணைத்து முத்த மழை பொழிந்தது எவ்வளவு சந்தோசத்தை. ஏற்படுத்தியது.

.

பக்கத்தில் உள்ள பூங்காவுக்கு அழைத்துப் போய், ஊஞ்சல் விளையாட்டு, சீசா விளையாட்டு. , சறுக்கு மரம் இவைகள் மூலம் ஆசை தீர அவளுடன் விளையாடும் போது அவள் முகத்தில் சந்தோச ரேகைகள் காணப்பட்டு, அவள் அதைக் கொண்டாடும் விதத்தில் துள்ளிக் குதிப்பது காண கண்கோடி வேண்டும்.

உடல் ரீதியாகக் களைப்பு தோன்றினாலும், குழந்தையின் கள்ளச் சிரிப்பு தேன் மழலை எல்லாக் களைப்பையும் போக்கிவிடும் லக்ஷ்மி ஆன்ட்டிக்கு.

ஒரு முறை பக்கத்ததில்லுள்ள சூப்பர் மார்கெட் அழைத்துப் போனபோது, அங்கு வைக்கப்பட்டிருந்த காய்கறிகள் பழங்கள் பெயரை கேட்டபோது கடகடவென சொன்னதும் அங்குள்ளவர்கள் ஆச்ரயபட்டார்கள்.

லிஃப்ட் ஏறும் போது மேல் பட்டனை பிரஸ் பண்ணும் போது பாட்டி பாட்டி, இது “டிரையாங்கிள்”என்று சொன்னபோது ஒரு முறை சொல்லிக்கொடுத்த விசயம் எப்படி அழகாகக் குழந்தை திருப்பிச் சொல்கிறது என்று வியந்ததுண்டு.

“அம்மா சாப்பாடு ரெடி.”என்று வேலைக்காரம்மா சொன்னதும், சகஜ நிலைக்குத் திரும்பினார் லக்ஷ்மி ஆன்ட்டி.

மதியம் 4 மணி. லக்ஷ்மி ஆன்ட்டியின் வீட்டுக் காலிங் பெல்லை ஆகாஷ் அழுத்தியபோது, அவரே வந்து திறந்தார்.

“யாரு?”

“நான் தான்ஆன்ட்டி ஒங்க பக்கத்து வீடு ஆகாஷ்!”

!அடடே!! வாப்பா !உள்ளே வா. !!! பாத்து நாலு வருஷம் மேல ஆச்சுல்ல ?

“அதான் சட்டுன்னு அடையாளம் தெரியல”

“பரவாயில்ல ஆன்ட்டி”

“இரு டீ போட்டுக் கொண்டு வரசொல் றேன்.”

சிவகாமி “இரண்டு டீ கொண்டுவா”. குரல் கொடுத்தார்.

“ஆமாம் ! வீட்டிலே ரமேஷ் அண்ணா, ராஷ்மி அண்ணி, குட்டி வாலு சுஷ்மிதா யாரையும் காணோம்”

“எங்கே அவங்க?” “எங்கேயாவது கோடை லீவுக்கு டூர் போயிருக்காங்களா?”

”சுஷ்மிதா குட்டிக்கு டிரஸ் பொம்மைகள்’ ஒங்களுக்குத் தங்க வளையல் இரண்டு ஜோடி; ரமேஷ் அண்ணாவுக்கும், அண்ணிக்கும், டிரஸ் வாங்கிருக்கேன் பாருங்க!!நல்லா இருக்கா ?கொண்டு வந்த சாக்லேட் களுடன் சேர்த்து கொடுத்துநமஸ்காரம்செய்தான் ஆகாஷ்.

“நல்லா தீர்க்காயுசாக இருக்க வாழ்த்துகிறேன்”.

“என்ன ஆன்ட்டி? நான் கேட்ட கேள்விகளுக்கு எந்தப் பதிலும் காணும்?”

அதைக் கேட்டதும், லக்ஷமிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.. ஒரு நேரத்தில் அவளுடைய எமோஷன்ஸ், கட்டுப் படுத்த முடியாமல், அழ ஆரம்பித்து விட்டாள்.

“ஆன்ட் டி பீ கூல். !” என்ன நடந்துச்சு ஏன் அழுறீங்க?”

அழுகையை, கொஞ்சம் கொஞ்சமா நிறுத்தி விட்டு, இந்த 3வருஷ இடைவெளியின் போது நடந்த விசயத்தைச் சொல்ல ஆரம்பித்தாள். லக்ஷ்மி

ஆன்ட்டி.

“அதை ஏன் கேக்குற? எதிர் பார்க்காத விஷயமெல்லாம் இந்த வீட்டிலே நடந்து போச்சு. ?”

“என்ன ஆன்ட்டி சொல்றீங்க?”

“நல்லாத்தானே ரமேஷ், ராஷ்மி சுஷ்மிதா இருந்தாங்க?”

“ஆமாம்!”

“அவங்கஇரண்டுபேரும்ஆபிஸ்போனபிறகு, சுஷ்மிதாவோடவிளையாடுவது, அவளுக்குப் பாடம் சொல்லி கொடுப்பது, சாதம் ஊட்டுவது, 3மணி ஆச்சுன்னா, என்னைக் கட்டிகிட்டு தூங்கி போறதும், திரும்ப 6 மணி ஆச்சுன்னா, வேக வைத்த மில்லெட்ஸ், பால் குடிச்சிட்டு, வாசலில், மத்த குழந்தைகளுடன் விளையாடிட்டு வருவதற்கும், அவங்க இரண்டு பேரும் ஆபிஸ் முடிச்சிட்டு வருவதற்கும் சரியா இருக்கும்.”

வந்தவுடன் அவங்க இரண்டு பேரும் டீ குடித்துக் கொண்டே.. “ரொம்பத் தேங்க்ஸ் அத்தை !நீங்க மட்டும் சுஷ்மிதாவை இப்படிகவனிச்சு எங்க சிரமத்தை குறைக்ககன்னா, எங்க பாடு திண்டாட்டம் தான்னு, வார்த்தைக்கு வார்த்தை சொல்லுவா ரமேஷும் அதை ஆமோதிப்பான்.”

“அது எனக்கு ஒரு இன்பமயமான காலம்”.

“நான் பெத்த ரமேஷ்க்காக அடகு வைத்த இளமையை வட்டியுடன் மீட்டு தந்த தெய்வம் சுஷ்மிதா”.

“நான் பெற்ற பிள்ளையிடம் காட்டிய கஞ்ச தனத்தை என் பேத்தி செல்லம் சுஷ்மிதா விடம் நான் காட்டியதில்லை”.

“இப்ப அவ இந்த ஊரே விட்டே, இல்லை இல்லை இந்த ஸ்டேட் விட்டே போயிட்டா ?”

இப்படிச் சொன்னதும் ஆகாஷ் அதிர்ச்சியாகி, “இந்த ஊரை விட்டு போய் எவ்வளவு நாள் ஆச்சு ஆன்ட்டி?”

“ஒரு ஆறு மாசம் இருக்கும்””சுஷ்மிதா இல்லாம நான் வாழமுடியாது ;தினம் தினம் செத்து கிட்டு இருக்கேன் ஆகாஷ்!”

“ஏன் என்ன ஆச்சு ?”

“நீங்க சொல்ல விரும்பினால் சொல்லுங்க இல்லாட்டி வேண்டாம்?”

“ஊர் உலகத்துக்கே தெரிஞ்சு போச்சு. !! உன்கிட்ட சொல்றதுக்கு என்ன”?

“மூணு வருஷம் முன்பு நீயும் ஒங்க குடும்பமும் யு. எஸ் போனதால், விசயம் ஒங்களுக்குத் தெரிய வாய்ப்பு இல்ல.”

“இவவளவு அபிமானம் வைச்சு, என்னையும் அவங்களையும் நீ பாக்க வந்திருக்கே ஒன்கிட்ட சொன்னா, எனக்கு மன பாரம் குறையும்.”

“நான் கேட்டுக்குறேன் ஆன்ட்டி!” !

“இப்ப ஒங்களுக்குத் துணை யாரு?”

“ஒரு வேலைக்காரம்மா பேரு சிவகாமி .... வந்து துணைக்கு இருப்பாங்க!” தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தாள்.

“நல்லா போய்க் கிட்டிருந்த அவங்க குடும்ப வாழ்க்கையில், பூ நாகம் ஒன்னு புகுந்துச்சு!”

ராஷ்மி ஹைதராபாத்தில் ஒரு செமினார்போனபோது, முன்னாள் காதலன் சந்தோஷை மீட் பண்ணி, அவன் இங்கே வீட்டுக்கு வந்து, ரமேஷ்டன் நண்பனாகி அதே சமயம் அவனுக்குத் தெரியாமல், ராஷ்மியுடன் கள்ள உறவுக்கொண்டு, அவள் ரமேஷை உதறிவிட்டு சந்தோஷ்டன் கிளம்பி போய் விட்டாள். ”

'“இரண்டு பேரும் குடும்ப நலகோர்ட் மூலம் பரஸ்பரம் விவாகரத்து வாங்கிட்டாங்க”.

“இப்போ ராஷ்மி புனேவில் செட்டிலாயிட்டா!”

“மாதம் ஒரு நாள் குழந்தையைப் பார்த்து விட்டு வரலாம் என்று தீர்ப்பு வந்தும், அதை ரமேஷ் ஏனோ புறக்கணித்தான்னு தெரில.”

“நான் எவ்வளவோ கெஞ்சி பார்ததும் சுஷ்மிதாவையும் தன்னுடன் கூட்டிகிட்டு போயிட்டா”ராஷ்மி.

“அந்தப் பிஞ்சு சுஷ்மிதா என்னை விட்டு போகமாடேண்ணு சொல்லி, அடம் பிடிச்சப்ப, தரதரவென்று இழுத்துக் கொண்டு போன போது, இவளுக்குத் துளிக்கூட இரக்கம் இல்லையா என்பது போல் இருந்தது”.

“என் உயிரோடு கலந்த சுஷ்மிதாவை பாக்க முடியாமல் தவிக்கிறேன்”.

. “ஆறு மாசம் ஆச்சு! இப்படிப் பைத் தியம் மாதிரி இருக்கேன்”

“ஹால் பூரா பாரு சுஷ்மிதா ஃபோட்டோ தான்”அவளுடன் நான் எடுத்தக்கொண்டது இது தான் எனக்கு இன்னிக்கு வரைக்கும் உயிரை கையில் பிடிச்சு வைச்சுருக்கு !”

”கேக்கவே ரொம்பக் கஷ்டமா இருக்கு.

சுஷ்மிதாவை பாத்து, பாத்து கவனிச்சு பாசத் தையும் காமிச்ச நீங்க, இப்ப சுஷ்மிதா இல்லைன்னு தெரிஞ்ச பிறகு பாதி உடம்பா ஆயிட்டடீங்க, ! ஆன்ட்டி. ”

“ஆமாம் ரமேஷ் அண்ணா ஒன்னும் கேக்கலையா?”

”தனக்கு நம்பிக்கைதுரோகம்செஞ்ச ராஷ்மி மேலயும், கூடஇருந்து

குடும்பத்தைகலைச்ச சந்தோஷ் மீதும் கோபம் கொண்டு, ஒரு சன்யாசி வாழக்கை வாழ்ந்து கொண்டு இருக்கான். ”!

.

“யாரையும் அவனுக்குப் பிடிக்கலை” எல்லோரும் கபடதாரிகள் என்கிற உணர்வு தான் இப்ப அவனிடம் மேலோங்கி இருக்கு.

“ரமேஷ் அண்ணா இப்ப எங்கே இருக்கார்?”

“எங்கே இருக்கான்? என்ன வேலை பார்க்கிறான்? எதுவும் எனக்குத் தெரியாது?”

“மாதத்தில் முதல் ஞாயிறு வருவான்” சிலவுக்குப் பணம் கொடுத்து செல்வான். அரை மணி நேரம் கூடத் தங்கமாட்டான்”.

“வேலைக்கார அம்மாவிடம் என்னைக் கவனமாகப் பாத்துக்கச் சொல்வான். இதே நிலைமை தான் ஆறு மாசமா”.

சட்டென்று காலண்டரை பார்த்தான் ஆகாஷ்.

நல்ல வேளை நாளை முதல் ஞாயிறு. ரமேஷ் வந்தவுடன், இந்தப் பிரச்சினை பற்றி ஒரு தீர்வு கிடைக்கப் பாடு படுவோம்.

“சரி ஆன்ட்டி !நான் கிளம்பறேன்;”நான்ஹோட்டலில்

தங்கிட்டு நாளை வரேன். ”

இப்படிச் சொன்னதும்,

“என்ன ஆகாஷ் வராதவன், வந்துருக்கே!இரண்டு நாள் தங்கிட்டு போ. எனக்கும் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்”.

டின்னர் ஆன்ட்டியுடன் சேர்ந்து சாப்பிட்ட பிறகு, அவனுக்கு என்று ஒதுக்கப்பட்ட அறையில் படுக்கப்போனான்

ஆனால் தூக்கம் வர மறுத்தது. எப்பேர்பட்டகுடும்பம். இப்படி நிலை குலைந்து சீர்கெட்டுப்போயிருக்குஎன்றுவருத்தம்கொண்டான். அவன் நினைவலைகள் பின் நோக்கி சென்றது.

புறநகர் பகுதியில் லக்ஷ்மி ஆன்ட்டி வீட்டுக்குப் பக்கத்தில் இவர்கள் குடி வர ஆகாஷ் குடும்பமும், லக்ஷ்மி ஆன்ட் டி குடும்பமும் ஒருவருக்கொருவர் நன்கு பழக ஆரம்பித்தனர்.

வட இந்தியாவிலிருந்து இவர்களும் புலம் பெயர்ந்தவர்கள். அதுவும் ஆகாஷ் என்றால் லட்சுமிக்கு மிகவும் பிடிக்கும். சுஷ்மிதா அப்போது 6 மாத குழந்தை.

அவன் யு எஸ் போகப் பண உதவி செய்த லக்ஷ்மி ஆன்ட்டியை, அவன் வாழ்க்கையில் எப்படிமறக்க முடியும்?

மனோதத்துவப் படிப்புக்கு யு எஸ் போய் அங்கேயே வேலை கிடைத்து, இப்போது 3 வருடம் கழித்து, ஊர் திரும்பிய ஆகாஷ், இப்படியொரு நிலைமையில் லட்சுமி ஆன்ட்டிய சந்திப்பான் என்று நினைக்கவில்லை..

பாவம் ஆன்ட்டி பேத்தி சுஷ்மிதா பிறந்தது மேல்பாசத்தைக் கொட்டியவள்.

திடீரென்று இப்படிப் பட்ட சூழ்நிலைக்குத் தள்ள் பட் டுள்ளாள்..

சுஷ்மிதா மீது பாசத்தை அளவுக்கு மேல் கொட்டி உள்ளார் என்பதும் எவ்வளவு நெருக்கமாக இருந்து ஒருவர் பிரிந்து போனால் ஏற்படும் துயரம் பழகியவர்களுக்கு மட்டுமே தெரியும் என்பது அவனுக்குத் தெரியும்.. பாவம் உடல் மெலிந்து தெம்பு இல்லாமல் போய் விட்டார்.

பாத்துபாத்து சுஸ்மிதாவை வளர்த்தவர் ஆச்சே!ஆன்ட்டியின் உயிர் மூச்சாக இருந்த சுஷ்மிதா இப்போது தன்னுடன் இல்லை என்கிற போது, தவிக்கும் தவிப்பு வார்த்தையினால் சொல்ல முடியாது.

தான் ஒருசைகாலிஸ்ட்எப்படியும்ஆன்ட்டியை சகஜநிலைக்கு

கொண்டுவரவேண்டும். அது தான் தான்செய்யும் நன்றிக்கடன் என்று நினைத்துக் கொண்டான்.

ஆகாஷ் இது மாதிரி கேஸ்களை நிறைய பார்த்தவன். நிச்சயம் அவர்களைக் குணபடுத்த வேண்டும். மனதுக்குள் நினைத்தவன் எப்போது தூங்கினான் என்பது தெரியாது.

மறு நாள் காலையில் சீக்கிரமே வந்து விட்ட ரமேஷை பார்த்ததும், ஆகாஷ் மனம் சங்கடப்பட்டது.

அவரிடம் எவ்வளவு துள்ளல் இருக்கும். அது காணாமல் போய் இருந்தது.

ஆன்ட்டி சொன்னபடி ஒரு சன்யாசி மாதிரி தான் இருந்தார்.

சேவிங் செய்யாத முகம் கண்களில் எப்போதும் சோகம் தெரிந்தது.

பரஸ்பர விசாரிப்புக்கு பிறகு ஆகாஷ் பேச்சை தொடர்ந்தான்

“ஐ ஆம் ரியலி சாரி அண்ணா.”எல்லா விசயமும் கேள்விப்பட்டேன்”

. “இப்போ ஆன்ட் டி நிலைமை ரொம்ப மோசமா இருக்கு.”

“இதை உடனடியாகக் களையனும்; ஒங்க ஒத்துழைப்பு வேணும் அண்ணா.”

வேண்டுகோள் விடுத்தான்

“ஆகாஷ். !இதிலே நான் என்ன செய்ய முடியும்?” விரக்தி தெரிந்ததுஅவன் பேச்சில்.

”அப்படில்ல அண்ணா !நீங்க ஒரு முறை புனே போயிட்டு வாங்க. அப்ப ஆன்ட்டியையும்அழைச்சிட்டு போங்க! சுஸ்மிதாவைபார்த்துப்

பேசினால் ஆன்ட்டி சந்தோஷப்படுவாங்க. ”

இப்படி ஆகாஷ் சொன்னதும் ஆவேசபட்டான் ரமேஷ். “அந்த ஓடுகாலியை பார்க்க நான் போகப் போவதில்லை.”

“அண்ணா நீங்க ஏன் அப்படி நினைக்கணும் ?ஒங்க வாரிசு ஒங்க இரத்தம் பார்க்க போங்க. கூடவே அம்மாவும் வந்துட்டு போகட்டும்”.

“இல்லை ஆகாஷ் என் மனசு கல்லாயிடுச்சு” எவ்வளவு வற்புறுத்தியும், ரமேஷ் மனம் இறங்கி வரவில்லை என்பது அவன் பேச்சில் தீர்க்கமாகதெரிந்தது

“சரி நீங்க போக வேண்டாம் அண்ணி போன் கொடுங்க”

“அவ ஃபோன் நம்பர் என்கிட்ட இல்ல.”வாங்கி வைச்சுக்க விருப்பமும் இல்லை. ”

“சரிஅட்ரஸ் கொடுங்க. நான் என் புனேவில் இருக்கும் நண்பனைவிட்டுச் சந்திக்கச் சொல்லி ஃபோன் நம்பர் வாங்குகிறேன். என்கிட்ட பேச சொல்றேன்””

“இது தேவையில்லாத ஒன்று ஆகாஷ்.”

“இல்லைண்ணா! இப்ப நான் கேட்கிறது கூட ஆன்ட்டி மனநிலை உத்தேசித்துத் தான்”. பாருங்க ஆன்ட்டியை. மனதளவில் நொறுங்கி போய் இருக்காங்க”.

வேண்டா வெறுப்பா முகவரியை சொன்னான்.

பின்னர்த் தனக்கு வேலை இருப்பதாகச் சொல்லி கிளம்பி போயிருந்தான் ரமேஷ்.

அட்ரஸ் குறித்துக் கொண்டு நண்பனிடம். அந்தக் குறிப்பிட்ட விலாசத்தில் ராஷ்மியைப் பார்க்கும்படி ஃபோனில் தகவல் சொன்னான். தன் குறிக்கோளை சுருக்கமாகச் சொல்லி இந்த விசயத்தில் தீவீரம் பற்றிச்சொன்னான்.

அன்று மாலையே ஆகாஷ் நண்பன் ராஷ்மி விலாசத்தைக் கண்டுபிடித்து, அவள் ஃபோன் நம்பரை. வாங்கிகொண்டான். தன் நண்பனும் ஒரு சைகாலாகிஸ்ட் என்பதால் ராஷ்மியிடம் இந்தப் பிரச்சினை பற்றிப் பேச முடிந்தது.

ஆகாஷ் பற்றிஏற்கனவே தெரியும் என்பதால் அவளும் பேசினாள்.

“அண்ணி ஒங்க சொந்த விசயம் பத்தி, நான் எதுவும் பேசமாட்டேன்”

தான் சொல்ல வேண்டியது பற்றிச் சுருக்கமாகச் சொல்லிவிட்டு ஒரு சைகாலிஸ்டு பார்வையில் “ஆன்ட்டி படும் பாசபோராட்டதுக்கு, ஒரே தீர்வு இருக்கு, ; அது ஒங்க கையிலதான் இருக்கு அண்ணி.”என்றான்

தன் அட்வைஸ் கேட்டு நடந்தால், ஆன்ட்டியின் உயிர் காப்பாற்றப்படும் என்று சொன்னதும், அவள் மனம் இறங்கி வந்தாள். அவன் சொன்ன விஷயத்துக்கு ஓகே சொன்னாள்.

ஆன்ட்டி நீங்க சுஷ்மிதாவுடன் பேச, பார்க்க, நான் சொல்ற ஒரே வழி தான் இருக்கு !”

நீங்க ஸ்மார்ட் போன் வைச்சுருக்கிங்களா?”

“இல்லை”

என்ன ஆன்ட்டி ?இந்தக் காலத்திலே எல்லார் கையிலும் ஸ்மார்ட் போன் இருக்கும் போது. ஒங்க கிட்ட இல்லைன்னு சொல்றது ஆச்சர்யமா இருக்கு. ”

“இல்லை ஆகாஷ் சுஷ்மிதா இருந்த வரைக்கும் அதற்கு வாய்ப்பு இல்லை. அவ ஊரை விட்டுப் போனதும், நான் ஒடுங்கி போயிட்டேன்”

பரவாயில்லை ஆன்ட்டி !. இன்றைய அறிவியல் வளர்ச்சி எல்லோரையும் நம் பக்கத்தில் கொண்டு விட்டுருக்கு அவர்கள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும். நமக்குச் சாதகமான விசயம் தான்.

உடனடியாக ஒரு விலை உயர்ந்த ஸ்மார்ட் போன் வாங்கி வந்து, அதை ஆபேரட் செய்வது எப்படி என்று சொல்லிக் கொடுத்தான்.

உடனே ஆன்ட்டியின் வாட்ஸ்அப் நம்பர்க்கு வர சொல்லி விடியோ காலில் சுஸ்மிதாவை பேசச் சொன்னான். வீடியோவை பார்த்ததும்,

“சுஷ்மிதா கண்ணு என்று ஆன்ட்டி கூப்பிட”பாட்டி பாட்டி ”என்று சுஷ்மிதாவும் பேச இருவரும் மிகவும் உணர்ச்சி வசப்பட்டு முத்தமழை பொழிந்தார்கள். அவர்கள் கண்களில் இருந்து ஆனந்த கண்ணீர்.

அந்த நிமிடங்கள் வர்ணிக்க இயலாத ஒன்று.

”வறண்ட இதயத்தில் விளைச்சலே

உயிரே உன் வாழ்வில் வெளிச்சம் காட்ட

உருகும் மெழுகாகி கரைவேன்

பயிரே நீ வளர பார்க்கத்தான்

உயிரை உடலில் சிறை வைத்தேன்.

உலக அதிசயங்களின் உச்சம் நீயே….. !… ”

எங்கோ எப்பொழுதோ படித்த கவிதை வரிகளை வாய் விட்டு சொன்னார். லக்ஷ்மி

சுஷ்மிதா கைகொட்டி சிரித்துத் துள்ளல். அதைப் பார்த்த லக்ஷ்மி

ஆன்ட்டி மனம் லேசானதை கவனித்தான் ஆகாஷ்.

ராஷ்மியின் ஒத்துழைப்புக்கு நன்றி சொன்னான்ஆகாஷ்.

. அதே சமயம் ராஷ்மியிடம் ஒரு வேண்டுகோளை வைத்தான்.

அண்ணி, ஆன்ட்டி எப்போதெல்லாம் சுஸ்மிதாவை நினைத்து பார்க்க வேண்டும் என்று தோன்றி வாட்ஸ்அப்பில் வீடியோ காலில் வரும்போது, ஒத்துழைப்புக் கொடுங்கள் என்றான்..

பாட்டி பேத்தி உறவு என்பது வார்த்தையில் சொல்ல முடியாத பந்தம். ஓங்களுக்கு மன முறிவு ஏற்பட்டது, அதனால் பிரிந்தது இதெல்லாம் சுஷ்மிதா குட்டிக்குத் தெரியாது.

அதுக்குத் தெரிஞ்சது எல்லாம் பாட்டியின் அன்பும், அரவணைப்பும் மட்டுமே. நீங்கள் ஒரு நாள் பாட்டியாக மாறும் போது அந்த உணர்வுகள் ஒங்களுக்குப் புரியும்.

நல்ல வேளை இன்றைய அறிவியல் வளர்ச்சி மூலம் நமக்குப் பிரியமானவர் உலகத்தில் எந்த மூலையில் வசித்தாலும் நேரிடையாகப் பார்க்கவும் பேசவும் முடியும்.

ராஷ்மிக்கு ஆகாஷ் சொன்ன வார்த்தைகள் சரியெனப்பட்டுருக்க வேண்டும். சரியென ஒத்துக்கொண்டாள். வாட்ஸ்அப் கால் மூலம் ஒவ்வொரு முறையும் வர சம்மதித்தாள்.

இனி கவலையில்லை உறவு முறிவுகள், சிக்கல்கள், பாச போராட்டத்துக்கு முன் அவைகள் சாதாரணத் தூசி போலத் தான் தெரியும்.

“காலப் போக்கில் எல்லாமே காணாமல் போய் விடும்”. ஆன்ட்டி.

என்ன தான் நீங்கள் பாசமும் அன்பையும் காட்டினாலும் ரேஷ்மி சுஸ்மிதாவின் அம்மா.

ஒங்க மருமகள் என்கிற பந்தம் முறிந்து போனாலும். அவங்களுக்குத் தன் பெண் சுஸ்மிதாவை கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்வதில் அக்கறை இருக்கும்.

“சுஷ்மிதாவுக்கு, உங்கள் அன்பு கூடிய சீக்கிரம் புரியும் !அவள் உங்களைத் தேடி நிச்சயம் ஒரு நாள் வருவாள்.”

“அதே சமயம் நீங்க ஒன்னை புரிஞ்சுக்க னும் மாற்றங்கள் என்ற ஒன்றே இந்த உலகத்தில் கடவுள் தோற்றுவித்த நியதி. வாழ்க்கையில் இதை நாம் புரிந்து வாழ பழகி விட்டால் யாருடைய மாறுதலும் நம்மைப் பலமிக்கச் செய்யாது.”

இதைத் தான் கவிஞர் கண்ணதாசன் “மாறுவதைத் தெரிந்து கொண்டால் மயக்கம் தெளிந்து விடும்” என்று.

ஆன்டடிக்கு. சரியான முறையில். கவுன்சிலிங் கொடுத்து அதற்கு ஒரு தீர்வு கொடுத்த திருப்தியுடன் ஊர் கிளம்பினான் ஆகாஷ்.

**- தினமணி கதிர் 18 செப்டம்பர் 2023**

# 7. இறுக மூடிய கதவுகள்

ஸ்ரீராமுக்கு இன்னமும் பிடிபடவில்லை, ”என்ன நடந்திருக்கும்.. ? நம் மீது எவ்வித குற்றமும் இல்லையே, ஊருக்குப் போவதற்கு முன் உறுதியாக சொன்னாரே, இப்ப ஏன் மாத்தி சொல்ல வேண்டும்.. ? நாமாக ஏதும் கேட்கவில்லையே.. ? வலிய அவராகத்தானே வந்து அவ்வாறு சொன்னார். மனிதர்கள் எல்லோரும் வார்த்தை தவறுபவர்கள் தானோ.. ? இவரும் அந்த பட்டியலில் சேர்ந்து விட்டாரே, ஆனாலும் தன்னால் அவர் சொன்ன பதிலைக் கேட்டு மனம் அமைதிகொள்ளவில்லையே, சரியான விளக்கத்தை அவரால் கொடுக்க முடியவில்லையே.. ? அது சரி இதையெல்லாம் கேட்க நான் யார் ? அவருக்கும் எனக்கும் என்ன உறவு.. ? எனக்கு ஏன் எதிர்பார்ப்புகள்.. ? சில கேள்விகளுக்கு விடை தெரியாது என்பார்களே, அது மாதிரி தானா இதுவும்!.

அந்த பொன்மாலைப் பொழுதில் பூங்கா பெஞ்சின் மீது அமர்ந்திருந்த ஸ்ரீராமுக்கு மேற்கூறிய கேள்விகள் ஒன்றன்பின் ஒன்றாய் வந்து மனதைச் சித்திரவதை செய்தது.

அந்த ஊருக்கு வந்து ஒரு வாரம் தான் ஆகியிருந்தாலும் ஒரு வாரத்திற்கு முன் நடந்த நிகழ்ச்சிகள் நினைவலைகளாக வந்து போயின.

”இதப் பாருங்க ஸ்ரீராம். இந்த ஊருக்கு மாற்றலாகி வந்திருக்கீங்க, இந்த ஊர் டவுன்லயும் சேர்த்தி கிடையாது,

கிராமத்திலேயும் சேர்த்தி கிடையாது, சின்னதா ஒரு ஹோட்டல் மெயின் ரோட்டில இருக்கு, அதிலே தான் சாப்பிடணும், அதை விட்டா வேறு வழியும் கிடையாது. தங்கறதுக்கு வேற லாட்ஜும் கிடையாது, நீங்க வேணும்னா பெருமாள் கோவில் தெற்கு மட வளாகத்திலே கேட்டுப் பாருங்க, ஏதாவது வீடு கிடைச்சா உங்க லக்” போஸ்ட் மாஸ்டர் கோவிந்தசாமி மூச்சு விடாமல் சொல்ல, மனதிற்குள் ஏற்றிக் கொண்டான் ஸ்ரீராம். அந்த அஞ்சலக வேலை நேரம் காலை ஒன்பது மணி தொடங்கி ஐந்து மணி வரை இருந்ததால் ஐந்து மணிக்கு மேல் பெருமாள் கோயிலை ஒட்டிய மட விளாகத்திற்கு வந்தான் ஸ்ரீ ராம்.

பெருமாள் கோயிலை ஒட்டி எதிரில் பெரிய குளம். நான்கு கரைகளும் அழகாய் அமைந்திருந்தன. பெருமாள் கோயிலை ஒட்டி ஒரு ஆரம்பப் பள்ளி. தெற்கு மட வளாகத்தில் மொத்தம் இருபது வீடுகள் இருந்திருக்கலாம். மடவளாகத்தில் நடுநாயகமாய் இருந்த வீட்டில் பெரியவர் ஒருவர் பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்து

“எஸ்கியூஸ் மீ சார், நான் ஸ்ரீராம் இந்த ஊர் போஸ்ட் ஆபீஸ் கிளார்க் வேலைக்கு மாற்றலாகி வந்திருக்கேன், இங்க ரூம் ஏதாவது கிடைக்குமா.. ? என்று விசாரிக்க வந்தேன்” வலிய போய் பேசினான் ஸ்ரீராம.

”வாப்பா உள்ளே வா. ஆராவமுதன் அன்பாய் கூப்பிடவே உள்ளே அவருடன் நுழைந்தான் ஸ்ரீ ராம்.

“வா…இப்படி உட்கார்” சேரைக் காட்டிய படியே தானும் ஒரு சேரில் உட்கார்ந்தார்.

“இந்த ஆத்திலே நானும் என் ஆத்துக்காரியும் தான், உன்னைப் பார்த்ததும் எனக்கு பிடிச்சுப் போய்டுத்து” லௌகீக வாழ்க்கையில் இருக்கிற இளைஞர்கள் மத்தியிலே நெற்றியிலே திருமண்காப்பு இட்டுண்டு பார்க்க லட்சணமாய் இருக்கே! மேலும் உனக்கு ரூம் கொடுக்கிறதுக்கு முக்கியமான காரணம், சின்ன வயசிலே தொலைந்து போன என் பையன் மாதிரியே இருக்கிறாய், அடடே நான் மட்டும் பேசிண்டு இருக்கேன், என் ஆத்துக்காரியை அறிமுகம் பண்ணலையே, சித்த இரு, வேதா வேதா, இங்கே வாயேன்”

”நீங்க இரண்டு பேரும் பேசிண்டு இருக்கும்போதே கவனிச்சேன். இந்தாப்பா கேசரி எடுத்துக்கோ| சாப்பிடு, வேதா உரிமையுடன் சொன்னாள்.

“என்ன சார் இது” தயக்கம் காட்டினான் ஸ்ரீராம்.

“இல்ல ஸ்ரீராம், எடுத்துக்கோ| இன்னிக்கி என் பையனுடைய பிறந்தநாள்| எதேச்சையாய் நீ வந்திருக்க| நான் யாருக்கும் பொதுவா ரூம் கொடுப்பதில்லை, உன்னை ரொம்ப பிடிச்சுப் போச்சு, நிச்சயம் ரூம் உனக்குத்தான், இப்ப கேசரி சாப்பிடலாம் இல்லையா.. ?” சிரிப்பு வெள்ளமாய் ஆராவமுதன் சொல்ல, இனியும் சங்கோஜப் படக்கூடாது என்று எண்ணி சாப்பிட ஆரம்பித்தான் ஸ்ரீ ராம்.

கேசரியா அது| இளம் சூட்டில் உருக்கிய நெய்யுடன் அழகாய் முந்திரி திராட்சைகளைப் போட்டு வாயில் வைத்த உடனே வழுக்கிக் கொண்டு உள்ளுக்குள் சென்றது.

அதுவரை முழுமையாய் வேதா மாமியைப் பார்க்காத ஸ்ரீராம், இப்பொழுது பார்த்தான். மகாலட்சுமி மாதிரி ஒரு களை, தேஜஸ்சான முகம், மடிசார் புடவையுடன் அசல் அலர்மேல் மங்கை தாயாரே நேரில் வந்தது மாதிரி உணர்வு ஏற்பட்டது ஸ்ரீராமுக்கு, ஆனாலும் மாமி முகத்திலே இனம் தெரியாத சோகம் குடிகொண்டிருப்பதைக் கண்டான் ஸ்ரீராம்.

“வேதா, ஸ்ரீராமுக்கு காபி கொண்டு வா” காபியை சாப்பிட்ட மாத்திரத்திலே “ஸ்ரீராம் உன் பெட்டி படுக்கைகளை உடனே கொண்டு வா. வேதா ஸ்ரீராம் ரூமை நன்கு அஞ்சலையை விட்டுப் பெருக்கச் சொல்லு, சுத்தமாய் இருக்கணும், நீ போஸ்ட் ஆபீஸ் போய் லக்கேஜை எடுத்துண்டு வா”

ஆராமுதனைப் பற்றி இப்பொழுது சொல்லியாக வேண்டும், முறைப் பெண்ணான வேதாவைக் கல்யாணம் செய்துகொண்டு முப்பது வருடங்கள் ஓடி விட்டன. ஆசைக்கு ஒரு பெண்ணும், ஆஸ்திக்கு ஒரு பையனும். பெண் கல்யாணம் ஆகி பெங்களூரில் செட்டில் ஆகிவிட்டாள்.

நிறைய நில புலன்களைச் சாகுபடி செய்யும் அளவிற்கு ஏகப்பட்ட சொத்துக்காரர். தன்னை விட தன் மனைவி அழகாய் இருப்பதால் எந்த வெளி ஆம்பளைகளுடனும் பேசக்கூடாது என்ற கட்டாயத் திணிப்பு. சந்தேகப் பேர்வழி| யாராவது தெரு ஜனங்கள் தன் மனைவியுடன் பேசினால் கூட மனைவியைக் கோபித்துக் கொள்வார்.

எவ்வளவு நல்ல மனதுக்காரராக இருந்தாலும், அவ்வப்போது தன் மனைவியின் மீது ஏற்படும் சந்தேகப் பேய் தலை விரித்து ஆடும், அதனால் சண்டை வரும். இது முப்பது வருடங்களாக நடைபெற்று வரும் வாடிக்கையான நிகழ்ச்சி.

ஆச்சு| வந்த இரண்டு நாட்களிலே ஆராவமுதன் நன்கு பழக ஆரம்பித்து இருந்தார். ஸ்ரீராமுக்கும் அவரை மிகவும் பிடித்து போய்விட்டது.

ஒரு நாள் இவர் பக்கத்து ஊருக்குச் சென்றிருந்த சமயம் வேதா மாமிக்கு உடம்பு சுகமில்லாமல் பேச்சு, மூச்சு இல்லாமல் இருக்க, பரபரப்பாய் மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று ட்ரீட்மென்ட் செய்து ஆத்துக்கு அழைத்து வந்தது, ஒரு சமயம் மாமாவிற்காக பாயிலரில் வெந்நீர் போட்டு கொடுத்தது இப்படி சின்ன விஷயங்களில் ஆராவமுதன் மனசுலே ஸ்ரீராம் மேலே ஒரு நல்ல அபிப்பிராயம் ஏற்பட காரணமாயிற்று.

“ஸ்ரீராம் ஸ்ரீராம் என்று கூப்பிட்டனே”

“என்ன சார்”

“இதப் பாரு ஸ்ரீராம் அவசரமாய் நான் மெட்ராஸ் போக வேண்டிய வேலை இருக்கு. அங்கே நம்ம வக்கீலைப் பார்த்துட்டு வரணும், அதுக்கு நாலு நாள் ஆகும். நீ ஆத்தைப் பாத்துக்கோ, மாமிக்கு துணையாய் இரு, எப்போதும் துணைக்கு இருக்கிற பக்கத்து வீட்டு சூடாமணிப் பாட்டி வேண்டாம்”

”வேண்டாம் சார், அது நல்லா இருக்காது. வழக்கமாய் வர்ற பக்கத்தாத்து பாட்டியே துணைக்கு இருக்கட்டும்/

”இதப் பாரு ஸ்ரீராம், உன் மேல எனக்கு நம்பிக்கை இருக்கு, நீ மன விகாரங்களோடு வாழ்கின்ற போலி மனிதன் இல்லை. சின்சியரா இருக்கே, அதனால நீ இரு, என்ன வேதா சொல்ற.. ? வேதா மாமியைப் பார்க்க வேதா ஏதும் மறுப்பு சொல்லவில்லை.

”இன்னொரு குட் நியூஸ். நீ இனிமேல் ஹோட்டலில் சாப்பிட வேண்டாம், எங்காத்திலேயே பேயிங்ஹெஸ்டா இருந்துக்கோ. நான் மெட்ராஸ் போயிட்டு வந்தவுடன் செல்லலாம்ன்னு நினைச்சேன், இப்பவே சொல்லீட்டேன், உனக்கு ஓகேவா என்றார்.

ஸ்ரீராமால் நம்ப முடியவில்லை. எப்போவோ படித்த கவிதை வரிகள் ஞாபகத்திற்கு வந்தன. “மனிதனுடைய விருப்பம் என்பது தேவலோகத்து கற்பகக் கொடி அல்ல, பாலைவனத்தில் தென்படும் பசுமை அது”

விருப்பங்கள் தான் வாழ்க்கையைச் செலுத்துகின்றன. நியாயமான விருப்பங்களில் என்ன தவறு இருக்க முடியும்.. ? எனவே ஆராவமுதன் இவ்வாறு சொன்னதும்

“ரொம்ப தேங்க்ஸ் சார், எனக்கும் ஹோட்டல் சாப்பாடு ஒத்துக் கொள்ளவில்லை, என்ன பண்றதுன்னு நெனச்சேன், ஆனா இப்படி ஒரு இன்ப அதிர்ச்சியைத் தருவீங்கன்னு நினைக்கலை மறுபடியும் தேங்க்ஸ் சார்”

“சார் என்று கூப்பிட்டு அந்நியப்படுத்தாதே, என்னை அப்பான்னு கூப்பிடு, மாமியை அம்மான்னு கூப்பிடு” ஸ்ரீராம் நெகிழ்ச்சியுடன் கண்கலங்க ஆராவமுதன் அவனை சமாதானப்படுத்தி அன்றிரவு சென்னைக்கு பயணமானார்.

மறுநாள் தலைவலி என்று ரெஸ்ட் எடுத்துக் கொண்டிருந்தான் ஸ்ரீராம். கையில் சூடான காபியையும், தலைவலி மருந்தையும் எடுத்துக்கொண்டு வேதா மாமி வந்தாள், உள்ளம் நெகிழ்ந்து போனான் ஸ்ரீராம். அனாதையாகிவிட்ட தனக்கு ஒரு தாயின் அன்பு கிடைக்குமா.. ? என ஏங்கினான், கூடவே வேதா மாமியும் அழவே

”ஏன் மாமி உடம்புக்கு ஏதும் சரியில்லையா.. ? டாக்டரிடம் அழைச்சிண்டு போகட்டுமா.. ? எனக் கேட்டான்.

“ஒன்றும் இல்லப்பா” என்று வேதா மாமி சொன்னாலும், கண்களிலிருந்து பொல பொலவென கண்ணீர் வரவே ஸ்ரீராமிடம் தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள் வேதா.

“உன்னை அன்னைக்குப் பார்த்ததுமே என் பையன் ஞாபகம் எனக்கு மட்டுமல்ல மாமாவிற்கும் வந்தது, அதனால் தான் அவர் உன் மேல இவ்வளவு பாசமாய் இருக்கிறார், ஆனால் இப்ப என் பையன் எங்ககிட்ட இல்லை, அதுக்கு காரணம் யாரு தெரியுமா.. ? இவரும் இவருடைய அக்காவும் தான்”

”உன் பெயர்தான் அவனுக்கும், ஐந்து வயசு இருக்கும் போது அக்காவுடன் கும்பகோணம் மகாமகம் போனவர் ஸ்ரீராமை தொலைச்சிட்டு வெறுமனே வந்தவர் தான். எங்கே தேடியும் அவன் கிடைக்கல, பார்க்காத ஜோசியம் இல்ல, வைதீஸ்வரன் கோயில் போய் நாடி ஜோசியமும் பார்த்தோம், அதில் என் பையன் உயிரோடிருப்பதாகவும், ஒரு நாள் அவனே உங்களைத் தேடிக் கொண்டு வருவான் என்றும் ஜோசியர் சொன்னார். அதைக் கேட்ட பிறகு என் மனம் சமாதானம் அடைந்தது. ஏதோ கடமைக்கு வாழ்ந்துட்டு இருக்கேன், பெருமாளும் என்னை அழைச்சுக்கமாட்டேங்கிறார், என் பையனையும் என்னிடம் கொண்டு வந்து சேர்க்க மாட்டேங்கிறார், இதில் இன்னொரு ஆச்சரியம் என்னன்னா அவருக்கும் உன்னைப் பிடிச்சதுதான்.

ஸ்ரீராம் பரிதவித்தான். மாமியின் வாழ்க்கையில் இவ்வளவு ரணமா.. ? இவ்வளவு மன வேதனையுடன் தான் அவருடன் வாழ்க்கை நடத்துகிறாளா.. ? மாமியை ரொம்பவும் ஆசுவாசப்படுத்த வேண்டியிருந்தது ஸ்ரீராமுக்கு.

” அம்மா இனி நீங்க கவலைப்பட வேண்டாம், உங்க ஸ்ரீராம் மாதிரியே இந்த ஸ்ரீராம், உங்க சுமையை நான் தாங்கறேம்மா” நெகிழ்ச்சியோடு ஸ்ரீராம் சொல்ல வேதா மாமியும் சற்று தெம்பானாள்.

சொன்ன மாதிரியே நாலு நாள் கழித்து மாமா மெட்ராஸிலிருந்து ஊர் திரும்பினார். காலையில் வந்த அவசரத்தில் அவருடன் பேச நேரமில்லாததால் ஆபீஸ் விட்டு வந்ததும் புழக்கடை பக்கம் சென்று தன்னைக் கண்டதும் மாமாவும் பக்கத்து வீட்டு சூடாமணி பாட்டியும் பேசிக் கொண்டிருந்த பேச்சை நிறுத்தவே, ஸ்ரீராம் ரூமுக்கு திரும்பினான்.

“என்ன மாமா, மெட்ராஸ் பயணம் எப்படி இருந்தது.. ?” ஆராவமுதன் பதில் எதுவும் சொல்லவில்லை. மாமி முகம் வாடி இருந்தது. தான் இல்லாத இடைப்பட்ட நேரத்தில் ஏதோ நடந்திருக்க வேண்டும். இரண்டு பேரிடமும் கலகலப்பு மிஸ்ஸிங். ஸ்ரீராம் யோசித்தான். ஸ்ரீராம் மீண்டும் கேட்கவே, ஆராவமுதன் தொடர்ந்தார்.

“ஸ்ரீராம் நான் உன்னிடம் சொன்ன மாதிரி நீ இங்க இருக்க இப்ப சௌகரியப்படாது, ரூம் எனக்கு தேவையா இருக்கு, எனவே நீ வெளியே எங்கேயாவது தங்கிக்கோ”

மாமியைப் பார்த்தான் ஸ்ரீராம். அவரை எதிர்த்துப் பேச முடியாத அளவிற்கு கண்களில் கண்ணீர். கண்களினாலே ஸ்ரீராமிடம் மன்னிப்பு கேட்டது மாதிரி இருந்தது.

ஆயிரம் இடிகள் வந்து தாக்கியது மாதிரி இருந்தது ஸ்ரீராமுக்கு. மனது நொறுங்கிப் போனது. எங்கிருந்தோ வந்த தனக்கு தாய் கிடைத்தாள் என நினைத்தான், இருந்தாலும் இந்த ஆத்துல உரிமை கொண்டாட நமக்கு என்ன சொந்தம் இருக்கு.. ?

இந்த எண்ணங்களோடு நடை திறந்தவனாய் தன்னுடைய பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டு கும்பகோணம் போவதற்குப் பயணமானான். போகிற அவசரத்தில் தன்னுடைய உடமைகளில் ஒரு பெட்டியைத் தவறுதலாக வேதா மாமி அகத்திலேயே விட்டுவிட்டு கும்பகோணம் செல்லும் பேருந்தில் ஏறி அமர்ந்து இருந்தான் ஸ்ரீராம்.

பேருந்து நிலையத்தில் எங்கும் ஆரவாரம், புகையைக் கக்கிக்கொண்டு பேருந்துகள் புறப்படும் ஒலியும், கும்பகோணம் கும்பகோணம் என நடத்துனர் கூவும் ஒலியும், தின்பண்டங்களை விற்போர் எழுப்பும் ஒலியும் அவன் காதைத் துளைத்துக் கொண்டிருந்தது. கண்களில் நீர் மல்க இருக்கையில் அமர்ந்திருந்தவன் செவிகளில் ஆராவமுதனின் கூப்பாடு மெல்லியதாகக் காதில் விழத் தொடங்கியது. உற்று கவனித்தான்.

” ஸ்ரீராம் ஸ்ரீராம்” என்று கூப்பிட்டுக்கொண்டு ஆராவமுதனும் வேதா மாமியும் மூச்சிறைக்க ஓடி வந்து கொண்டிருந்தார்கள். என்னவாயிற்றோ என்று பதறிக் கொண்டே புறப்படத் தயார் நிலையில் இருந்த பேருந்தை விட்டு ஸ்ரீராம் அவசர அவசரமாக இறங்கினான்.

”ஸ்ரீராம் வா, நம்ம ஆத்துக்குப் போகலாம், நான் தப்பு செஞ்சுட்டேன், ஆத்திலே நீ விட்டுச் சென்ற பெட்டி திறந்த நிலையில் இருந்தது. அதை ஒழுங்குபடுத்தும் போது சிறு வயதில் உன் தாயுடன் நீ எடுத்துக்கொண்ட புகைப்படத்தைக் கண்டேன், நீ தான் எங்களுடைய மகன் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

பக்கத்து ஆத்து சூடாமணி பாட்டியின் பேச்சைக் கேட்டு என் புத்தி கெட்டு உன்னிடம் சற்று கடுமையாகவே நடந்து கொண்டேன், என்னை மன்னித்துவிடு” என்று கண்கலங்கினார் ஆராவமுதன். தன்னுடைய தாய் தந்தை கிடைத்த ஆனந்தத்தில் மூழ்கி நின்றான் ஸ்ரீராம். ஆராவமுதனுடைய இதயத்தின் இறுக மூடிய கதவுகள் இனி எப்போதும் திறந்தே இருக்கும்.

**- பாஞ்சஜன்யம் மார்ச் 2006**

# 8. அடிப்பிரதட்சணம்

விடியற்காலையில் எழுந்திருக்கும் போதே சோர்வாய் உணர்ந்து இருந்தாள் பத்மா. கடந்த ஒரு வாரமாக பெய்த கனமழை, அதனால் ஏற்பட்ட உடல் பாதிப்பு சோர்வை இன்னும் அதிகமாக்கி இருந்தது. மார்கழி மாத குளிர் வேறு இருந்தாலும், அதிகாலையில் கோயிலில் ஒலிவாங்கி மூலம் திருப்பாவை பாசுரம் காற்றலைகளாக மிதந்து வர ஒரு தெம்பு ஏற்பட்டிருந்தது.

சில நேரங்களில் நமக்கு துன்பம் உண்டாகிறது, நாம் விரும்பியது நடக்கவில்லை, ஆசைப்பட்டது நிறைவேறாமல் போனால் மனம் இடிந்து போகிறது, உடல் பிணியால். பொருள் இல்லாமையால் குடும்பத்தில் பிரச்சனைகள் தொடர்கதையாக வரும்போது, எல்லோருக்கும் மனச்சோர்வு வருவது சாத்தியமே. பத்மாவிற்கும் தன் பெண் குண்டாக இருப்பதும். அவளுக்கு நல்ல வரன் அமையவில்லையே என்ற ஆதங்கமும். இனி தான் தனி ஆளாக எவ்வாறு வாழ்க்கையை நடத்த போகிறோம் என்ற மன உளைச்சல் மிகுந்து காணப்பட்டாள்.

மெலிதான தேகம், வாய்க்கும் வயிற்றுக்கும் எப்போதும் சண்டை, அந்த அளவு வறுமையோடு வாழ்ந்த பத்மாவை, சொந்தம் விட்டுப் போகக் கூடாது என்பதற்காகவே, தன் அத்தைப் பையனான மாதவனுக்கு மணம் முடித்திருந்தார் பத்மாவின் அப்பா.

மாதவனுக்கு அதிகம் படிப்பு இல்லயென்றாலும். ஏற்கனவே கற்றிருந்த வேதம் கை கொடுக்க, பக்கத்து கிராமங்களில் உள்ள கோயில்களுக்கு பூஜை செய்து கொண்டு குறைந்த வருமானத்தில் வாழ்க்கைச் சக்கரத்தை ஒட்டிக் கொண்டிருந்தான். அவர்களின் திருமண பந்தத்திற்கு சாட்சியாக வைதேகி பிறந்திருந்தாள். ஏழ்மையில் வாழ்ந்திருந்தாலும் பருவச் செழிப்போடு மட்டுமல்லாமல் குண்டாக இருந்ததே ஒரு பெரிய குறையாக இருந்தது. வரும் வரனெல்லாம் பெண் குண்டாக இருக்கிறாள் என்று தட்டிக் கழித்து விட்டு சென்று விட்டார்கள். இத்தனைக்கும் வைதேகி பிளஸ் டூ தான் முடித்திருந்தாள். ஒரு முறை வெறுப்பாக

“ஏன் எனக்கு கல்யாணம் ஏற்பாடு செய்கிறீர்கள்.. ? நான் மேற்கொண்டு படிக்கப் போகிறேன்” என்று கண்டிப்புடன் கூறினாள்.

திடீரென ஒரு நாள் மாதவன் பூஜைக்குச் சென்றிருந்த போது பின்னால் வந்த அம்பாஸிடர் கார் மோதி ஸ்பாட்டிலேயே இறந்து போயிருந்தான் மாதவன். அப்படியே இடிந்து போனாள் பத்மா. விபத்து ஏற்படுத்திய காரின் ஓனர் பத்மாவிடம் வந்து “நீங்கள் போலீஸ் கோர்ட் கேஸ்ன்னு போக வேண்டாம், காம்ப்ரமைஸ் செய்து கொள்ளலாம், உங்கள் குடும்ப நிலையை உத்தேசித்து நஷ்ட ஈடாக ஒரு பெரும் தொகை தருகிறேன்” என்று சொல்லிவிட்டு போனவன் தான், இதுவரை திரும்பிப் பார்க்கவில்லை. அதைப்பற்றி முயற்சி செய்ய எந்த சொந்தக்காரனும் முன் வரவில்லை. பண உதவி செய்யாவிட்டாலும் சில உறவினர்கள் “நீ

போலீஸ் கோர்ட்டுன்னு போயி செலவு செய்திருந்தால் நிச்சயம் பணம் கிடைத்திருக்கும்” என்று சொல்லிவிட்டுப் போனார்களே தவிர, யாரும் எந்த உதவியும் செய்ய முன்வரவில்லை. தோழி ராஜமும் அவள் கணவரும் இருந்திருந்தால் தனக்கு உதவியாய் இருந்திருக்கும், ஆனால் அவர்கள் தான் யூஎஸ்சில் இருக்கிறார்களே.

ஆச்சு, இன்னியோட ஒரு வருடம் ஆகப் போகுது, நஷ்ட ஈடு வந்த பாடில்லை. ஏற்கனவே தெரிந்து வைத்திருந்த தையல் கலையும், சமையல் கலையும் கை கொடுக்க அதுவே பத்மாவிற்கு இப்ப பொழப்பாச்சு.

மனதையும், அதன் தாக்கங்களையும், தடுமாற்றங்களையும் நாம் உணர்ந்து கொண்டால், மனம் நம் வசம் தானே, ஒரு கணம் யோசித்தாள்.

திருப்பாவை காற்றாலைகள் மூலம் வந்து போன சறறு நேரத்திற்கெல்லாம், வேறொரு திசையிலிருந்து இன்னொரு காற்று அலைகளாய், தென்றலாய் வந்த இந்த வரிகள் அவள் மனதை இன்னமும் அதிகமாய் தெம்பாக்கியது.

“மனமிருந்தால் பறவைக் கூட்டில் மான்கள் வாழலாம்” “வழி இருந்தால் கடுகுக்குள்ளே மலையைக் காணலாம்” “துணிந்து விட்டால் தலையில் எந்த சுமையும் தாங்கலாம்” “மனம், மனம் அது கோயிலாகலாம்”,

மனதில் தெளிவு பிறந்தது. பிரச்சனை யாருக்குத்தான் இல்லை. எந்த பிரச்சனைக்கும் ஒரு தீர்வு உண்டு. தீர்வைத் தேடி போவோமே, சட்டென பத்மாவிற்கு தன் பள்ளி தோழியான ராஜம் ஊரிலிருந்து வந்தது ஞாபகத்துக்கு வந்தது. ராஜமும் பத்மாவும் தங்கள் சொந்த கிராமத்தில் ஐந்தாம் வகுப்பு வரை ஒன்றாகப் படித்தவர்கள். வெவ்வேறு காலகட்டத்தில் மாற்றங்கள் ஏற்பட்டு ராஜம் நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டு டில்லி, பம்பாய் போன்ற இடங்களில் வேலை நிமித்தம் இருந்திருந்ததால். எப்போதாவது கடிதத் தொடர்பு இருவருக்கும் இருந்து வந்திருந்தது. இப்ப அவளும் அவ வீட்டுக்காரரும் தெற்கு வீதியில் உள்ள அவர்களுடைய பூர்வீக வீட்டிற்கு ஒரு வாரத்துக்கு முன் வந்திருந்ததை கேள்விப்பட்டுதான் போய் பார்த்து வர தயாரானாள்.

“வைதேகி கிளம்பும்மா, நம்ம இரண்டு பேரும் என் தோழி ராஜம் வீடு போய் வந்துவிடலாம் சீக்கிரம் வீட்டைப் பூட்டும்மா”

ராஜம் வீட்டை பத்மா அடைந்தபோது வாசலிலேயே வரவேற்றாள்

“நீ எப்படி இருக்கே ராஜம்.. ?” நீண்ட நாளைக்குப் பிறகு சந்தித்தால் பேச முடியுமா.. ? கண்களில் நீர் சொரிந்தது.

“கண்ணைத் தொடைச்சுக்கோ ஏய்” உரிமையோடு கையைப் பிடித்து கொண்டு “என்ன இது”

“ஏங்க... உங்களுக்கும் இரண்டாவது டோஸ் காபி கொண்டு வரட்டுமா.. ?”

“என் தோழி வந்திருக்கா, சமையல் லேட் ஆகும், சாரி பத்மா நீ எப்படி இருக்கே. ?”

ராஜம், கோபாலன் ஆதர்சன தம்பதியினருக்கு ஆசைக்கும், ஆஸ்திக்கும் என்று சொல்வார்களே அது மாதிரி பையன் சாப்ட்வேர் இன்ஜினியரராய். கலிபோர்னியாவிலும், பெண் டாக்டராய் நியூயார்க்கிலும் சுகமாய் குழந்தைகளுடன் சௌகரியமாய் இருக்க வட இந்தியாவில் நிறைய இடங்களில் பணி செய்து பின் கடந்த வருடம் ரிட்டையரான கையோடு யு. எஸ் சென்றவர் இப்போதுதான் ஊர் திரும்பியிருந்தார்.

மகாலட்சுமி களை என்று சொல்வார்களே அது மாதிரி வசீகர முகம், புன்சிரிப்பு பிறர்க்கு உதவும் மனப்பான்மை, கூடவே ஆன்மீக பக்தி. கோபாலனும் ஆன்மிக பார்வையுடனும் அறிவியல் நோக்குடையவர். எந்த காரியத்தையும் அறிவியல் தொடர்பு கொண்டு பார்க்கும் குணம். வெள்ளந்தியான மனசு.

பத்மாவின் நிலையையும் அதோடு வைதேகி குண்டுன்னு சொல்லி வந்த சம்பந்தமெல்லாம் நின்று போனதை கேள்விப்பட்ட ராஜம் "கவலையை விடு பத்மா நிச்சயமா நம்ம செங்கமல தாயாரும் ராஜகோபாலனும் கண் திறப்பார்கள். நீ கவலைப்படாமல் இரு, நீ என்ன பண்ற, பெருமாளை சேவிக்கும் போது தினமும் இந்த பாசுரத்தைப் படி, நிச்சயம் உனக்கு மன உறுதி கிட்டும், மன உளைச்சல்களிலிருந்து விடுபடணும், அதுதான் முக்கியம், நீ இந்த கீழ்க்கண்ட பாசுரத்தைப் படி, பலன் கிடைக்கிறதா இல்லையானு நீ வந்து நிச்சயமா என்கிட்ட சொல்லத்தான் போறே!"

"அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய் ஒத்தொதவாத பல் பிறப்பொழிந்து நம்மை ஆட்கொள்வான் முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார் எத்தினால் இடர் கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே!"

- திருமிழ்சை ஆழ்வார்

தோழிகளின் பேச்சை அவ்வப்பொழுது கவனித்து வந்த கோபாலன், ஈஸிச் சேரில் இருந்தபடியே அந்தச் செய்தித்தாளில் வந்த அந்தச் செய்தியைப் படித்தவுடன் முகம் பிரகாசமாகி "ஏன் பத்மா... நான் சொல்றேன்னு தப்பா எடுத்துக்கலைனா நான் ஒன்று கேட்பேன், வைதேகி கோவிலுக்குப் போகிற பழக்கம் உண்டா?"

"வெள்ளி தவறாம தாயார் சந்நிதிக்கு தீபம் போட்டுட்டு வரா"

"உன் பிரச்சனை எனக்கு நல்லாப் புரியுது, விளைவைச் சிந்தித்து அச்செயலிலிருந்து விலக நினைப்பது உலக ஆயுதம்! மற்றொன்று செயலின் நியாயம் குறித்து பின் விளைவை ஏற்று அனுபவித்துக் கொள்வோம் எனத் துணிந்து அச்செயலில் ஈடுபட்டு விடுபடுவது. இந்த இரு நிலைகளிலும் மனச் சோர்வை நீக்கிக் கொள்ளலாம்.

பேசிக் கொண்டிருக்கும் பொழுதே டிவியில் ஒரு பாடல் காட்சி தெரிந்தது கோபாலன் உடனே பத்மா கொஞ்ச நேரம் இந்த பாட்டை கவனி

பார்க்கத் தெரிந்தால் பாதை தெரியும்
பார்த்து நடந்தால் பயணம் முடியும்
பயணம் முடிந்தால் கதவு திறக்கும்

கதவு திறந்தால் காட்சி கிடைக்கும்
காட்சி கிடைத்தால் கவலை தீரும்
கவலை தெரிந்தால் வாழலாம்
வழியா இல்லை பூமியில்

பாட்டின் கருத்தை கவனிச்சியா? எவ்வளவு தத்துவம் சொரிந்த பாடல், கண்ணதாசன் எவ்வளவு அருமையா சொல்லியிருக்கார். கவலைப்படுவதால் என்ன பிரயோஜனம்.. ? நீ எவ்வளவோ கஷ்டப்பட்டுட்டாய், நீ பெருமாள் மீது கொண்டிருக்கும் ஒரு விதமான அபக்ஷன் நீ மட்டுமல்ல, இன்றைக்கு நிறைய பேர் புலம்பத்தான் செய்கிறார்கள். நமக்கு நேரம் வந்துடுதே, நமக்கு நல்ல வசதி வரவில்லையே, சௌபாக்கியம் கிடைக்கவில்லையே என்று பலவிதமான குடும்பங்களில் புலம்பல் நிறைய பார்க்கிறோம். சரியான வழிகாட்டி இல்லைங்கிறது ஒரு காரணமாக இருக்கலாம், ஆனா அதுவே தீர்வாகி விடுமா.. ? முயற்சிக்க வேண்டும்.

நோய் நொடி வந்துவிட்டது என்று சொல்லி டாக்டர்கிட்ட பணம் செலவு பண்ணுவதை விட்டுவிட்டு நம்ம வீட்ல கடவுள் படம் முன்னாடி ஐந்து நிமிடம் பாசுரங்களைப் படித்து வந்தால் நோய் நொடி போகும். சௌபாக்கியம் கிடைக்கும்.

பாசுரங்களை மட்டும் தினமும் நீ சொல்லிக் கொண்டு வந்தால், எல்லா நோய்களும் போய்விடும். சௌபாக்கியம் கிடைக்கும். எங்களுக்கு நல்ல வழிகாட்டி இருந்தார்கள். தினமும் பாசுரங்களைச் சேவித்தோம், என் குழந்தைகளும் பின்பற்றினார்கள், இன்று நல்ல நிலைமையில் உள்ளார்கள். ஆன்மீக நம்பிக்கை மட்டும் போதாது, அறிவியல் தொடர்பாய் சிந்தித்து செயல்பட வேண்டும்.

“வைதேகி இன்னிக்கு சாயந்திரம் தாயார் சந்நதிகிட்ட வந்து பாரு, தாயார் கண்ணைத் திறந்ததாக நினைச்சுக்கோ, இன்னும் இரண்டு மாசத்திலே உனக்கு நல்ல வரன் கிடைச்ச மாதிரின்னு நினைச்சுக்கோ, பத்மா உனக்கும் நஷ்ட ஈடு பணம் கிடைக்க சீக்கிரம் ஏற்பாடு செய்கிறேன், எதற்கும் கவலைப்படாமல் போ,”

” நீ தைரியமாய் இரு பத்மா”

“ராஜம் அப்ப நான் போயிட்டு வரேன்”

“என்ன போறதாவது.. ? சாப்பாடு யாருக்குன்னு நினைச்சே? ஒரு வாய் சாப்பிட்டு விட்டு போ, பதினொரு மணி ஆச்சு”

“ரொம்ப தேங்க்ஸ் பத்மா, நீயும் உன் வீட்டுக்காரரும் என்கிட்ட இருந்த குழப்பங்களைத் தீர்த்து வச்ச மாதிரி இருக்கு”

“கவலைப்படாமல் கிளம்புங்க, நான் மட்டும் மறுபடியும் கலிபோர்னியா போக வேண்டி இருக்கு, வருவதற்கு ஒரு மாதம் ஆகும், ஆனால் இவர் இங்கதான் இருப்பார், நீ என்ன உதவி வேணும்னாலும் கேட்டுக்கலாம் ஓகேவா.. ?”

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை பத்மா சந்தோசமாய் பூ பழத்துடன் வைதேகியுடன் உள்ளே

வர, " வா பத்மா வா" வைதேகி வரவேற்றாள்.

"ராஜம் வைதேகிக்கு வரன் நிச்சயமாயிடுச்சு, நீ வந்த பிறகுதான் நிச்சயம் பண்ண வேண்டும் என்று சொல்லிவிட்டேன், வரும் வெள்ளிக்கிழமை நிச்சயம் உன் முன்னிலையில் தான் செய்யப் போறேன், இன்னொரு செய்தி தெரியுமா.. ? நஷ்ட ஈடு நாலு லட்சம் ரூபாய் கிடைச்சிருச்சு"

முகத்தில் பூரிப்பு ரேகைகள் படர, பத்மா சொல்வதைக் கேட்ட ராஜம் ரொம்ப சந்தோசமா பீல் பண்ணினாள்.

"எல்லாத்துக்கும் காரணம் உன் வீட்டுக்காரர் தான் ராஜம்"

"ஏங்க என்ன சொல்றா பத்மா?" ஆச்சரியமாய் கேட்க வைதேகி இடையில்

"ஆன்டி போன மாதம் நான் எப்படி இருந்தேன் குண்டு பூசணிக்காயா இருந்தேனா இப்ப எப்படி இருக்கேன்" வெள்ளந்தியாய் கேட்க

நீ என்ன ராஜாத்தி பூங்கொடியாய் இருக்கே"

"வெரி குட் இப்போ நீங்க சொன்னேள் இல்லையா பூங்கொடி மாதிரி, அதுக்கு முழுக்க முழுக்க காரணம் அங்கிள் தான்"

"நீ என்ன சொல்ற, எனக்கு ஒண்ணுமே புரியலையே"

"ஆன்டி அன்னைக்கு அங்கில் கோயில்ல வந்து பாருன்னு சொன்னாரில்லையா...? நானும் அவரைப் பார்க்க போனேன், என்னிடம் பேப்பர்ல வந்த ஒரு செய்தியை காண்பித்தார், அதை ஃபாலோ பண்ணுவியா.. ? என்று கேட்டார். நான் சரி என்றேன், உடனே கோபாலன் குறிக்கிட்டு"மிச்சத்தை நான் சொல்றேன் ராஜம், ஒரு கல்யாணத்துக்கு அழகும் உடல் ஆரோக்கியமும் மிக முக்கியமானது என்பது எல்லோருக்கும் தெரியும். உடல் எடை அதிகமாகி குண்டாக இருப்பதனாலே வரன் கிடைப்பது அந்த காலத்திலேயே குதிரைக் கொம்பான விஷயம், அதனால் தான் அந்தக் காலத்திலேயே பெரியவங்க எல்லாம் காரண காரியங்களை சொல்லாமல் அடி பிரதட்சணம் செய், அம்பாள் கண்ணைத் திறப்பாள், கல்யாணம் குதிரும் என்று சொல்லி அடிப்பிரதட்சணம் செய்யச் சொன்னார்கள். அந்தக் காலத்து பெண்கள் எல்லாம் மறு பேச்சு பேசாமல் அடிப்பிரதட்சணம் செய்து வந்தார்கள். நல்ல வரனும் கிடைச்சது, இதிலே விஞ்ஞான பூர்வ உண்மை இருக்கு, அறிவியல் பூர்வமான உண்மை என்னவென்றால் அடப் பிரதட்சனம் செய்யும் பொழுது நம்முடைய கால்களில் நடுப்பாகமும், குதிகாலும் நன்றாக தரையில் அழுத்த அழுத்த காலில் உள்ள உணவுப் புள்ளிகள் தூண்டப்பட்டு உடல் எங்கும் இரத்த ஓட்டம் சீராகி புத்துணர்வுடன் எடை அதிகமான பெண் முப்பதே நாளில் எடை குறைந்து அழகான மெலிதான தேகம் பெறுகிறாள் என்ற செய்தி தான் அது. இந்த கால பெண்களைப் போல் பணத்தை செலவு செய்து ஜிம்முக்கு போகிறேன் என்று சொல்லாமல் நான் சொன்ன சிம்பிளான உடற்பயிற்சியை தினமும் மேற்கொண்டாள். நான் ஒவ்வொரு நாளும் அவள் அடிப்பிரதட்சணம் செய்து வந்த

பிறகு அடடா எவ்வளவு அழகாய் நீ இருக்கிறாய் என்று ஒவ்வொரு நாளும் சொல்லிக் கொண்டே இருந்தேன். அவள் மனது அதைக் கேட்டு கேட்டு என்னிடம் உள்ள குறை சென்று விட்டதாய் நினைத்து பூரித்து பூரித்து அவளுக்கு இல்லாத ஒரு அழகு முகத்திலும் மனதிலும் வந்தது. இது மனோதத்துவத்தினால் வந்த நிலை, அவள் மனதை நன்றாக அறிந்தாள் அதனால் ஜெயித்தாள், நாமெல்லாம் மனதுக்கு கட்டுப்பட்டவர்கள். அதே மாதிரி அவர்கள் குடும்பத்திற்கு வரவேண்டிய நஷ்ட ஈடு பணத்தை லோக் அதாலத் மூலம் முயற்சி செய்து மூன்றாவது கியரிங்லேயே நஷ்ட ஈடாக நான்கு லட்சம் ரூபாயை லோக் அதாலத் நீதிபதி முன்பு விபத்து ஏற்படுத்திய காரின் ஓனர் கொடுத்தார், இதில் என்னவொரு சவுகரியம் என்றால் லோக் அதாலத் நீதிபதியின் தீர்ப்புக்கு அப்பீல் கிடையாது, எனவே ஈசியாக பணத்தை வாங்கிக் கொடுத்தேன். நீ ஊர் சென்ற ஒரு மாத காலத்தில் என் ஹசின் பையன் ஸ்ரீராமிடம் வைதேகி பெண் பார்க்க வரச் சொல்லி இருந்தேன் அவன் ஒரு கண்டிஷன் போட்டிருந்தான்.

“என்ன கண்டிஷன்.. ?” ராஜம் ஆச்சரியமாய் கேட்டாள்.

”வைதேகியைக் கல்யாணம் முடிக்கும் பட்சத்தில் வைதேகி அம்மாவும் தங்களுடன் இருக்க வேண்டும் என்றான். பத்மா தயங்கினாள், நான் தான் சம்மதிக்கச் சொன்னேன்’

”என் தோழிக்காக இவ்வளவு நல்ல காரியங்களைச் செய்த உங்களை பாராட்டாமல் இருக்க முடியாது, ரொம்ப ரொம்ப நன்றி, நான் கொடுத்து வைத்தவள் என்று சொல்லியவாறு கண்கலங்கினாள் ராஜம்.

**- பாஞ்சாஜன்யம் ஆகஸ்ட் 2006**

# 9. நேத்ரதரிசனம்

பெண் ஜென்மம் எடுத்தாலே துன்பப்பட வேண்டியது தானா.. ? பெண்ணாய் பிறந்ததே பாவமா.. ? நெஞ்சில் முள்ளாய் தைத்த வார்த்தைகள் கொஞ்ச நஞ்சமா.. ? கண்ணீர் துளிகள் கண்களிலிருந்து வழிய, பேருந்திலிருந்த மற்ற பயணிகள் கவனிக்க போகிறார்களே என்ற நினைப்பு வரவே, தன்னை சுதாகரித்துக் கொண்டு கண்களில் வழிந்த நீரை துடைத்துக் கொண்டாள் லட்சுமி.

இனி நான் எங்கு போகப் போகிறேன்.. ? என்ன செய்யப் போகிறேன்..? இனிவரும் காலத்தை எப்படிக் கழிப்பது..? இவ்வாறான எண்ண அலைகள் ஆர்ப்பரிக்க, சோகமே உருக்கொண்டார் போல தன் இருக்கையில் அமர்ந்திருந்தாள் லட்சுமி.

எப்படி வளர்தியிருப்பேன் இந்த சாரங்கனை, யோசிக்காமல் நொடியில் ஆத்தை விட்டு வெளியே போகச் சொல்லிட்டானே, நினைக்க நினைக்க நெஞ்சு குமுற ஆரம்பித்தது, அவளுக்கு ஆத்துக்காரர் இருந்திருந்தால் இப்படி ஆகி இருக்குமா.. ? அவரை ஆசார்யன் தன் திருவடிக்கீழ் சேர்த்துக் கொண்டது போல என்னையும் அழச்சிண்டு போயிருக்கலாமே, அப்படி நடந்திருந்தால் இந்த சாரங்கனிடம் திட்டு வாங்காமல் இருந்திருக்கலாமே, எல்லாம் விழலுக்கு இறைச்ச தண்ணீர் மாதிரி ஆயிடிச்சே|.

என்ன தப்பு செஞ்சுட்டேன், இன்று காலை உப்புப்பெறாத விஷயத்தை ஊதி பெரிதாக்கியிட்டாளே இந்த பத்மா. எழுந்திருக்கும் போதே சோர்வாய் இருந்தவளுக்கு, வேண்டா வெறுப்பாய் "டங" கென்று கழுநீரை விட கேவலமான காபியை வைத்துவிட்டு போனாள் பத்மா. கை தவறி காபி பத்மா வைத்திருந்த ஆபீஸ் ஃபைல் மீது கொட்டி விட, அந்த வீடே ரணகளமாயிற்று. பத்மாவிடமிருந்து வார்த்தைகள் அனலாய் தெறித்து வந்தன.

"கண் அவிஞ்சி போயிடுத்தா, திங்கறது தண்டச் சோறு இதுல வேளா வேளைக்கு காபி, அந்த காபியையும் ஃபைல் மேல கொட்டி சே, இந்த அக்கிரமத்தை கேட்க மாட்டேளா.. ?" பத்மா கூக்குரலிட்டுக் கொண்டிருந்தாள்

சாரங்கனுக்கு ஏற்கனவே அந்த ஆத்தில் நல்ல மரியாதை, திமிர் பிடித்த பத்மாவோ தன்னைவிட அதிகம் சம்பாதிப்பவள், அவளை சப்போர்ட் பண்ண வேண்டிய கட்டாயம் வேறு, நியாய அநியாயங்களை அலசிப் பார்க்க அவனால் முடியாது, முயற்சிக்கவும் மாட்டான்/ அம்மா மீது அவன் கோபம் தாவியது. " ஏம்மா உனக்குப் புத்தி கெட்டுப் போச்சா.. ?"

"இல்லேடா சாரங்கா, ஏதோ தெரியாத்தனமா காபி கொட்டி போச்சுடா.. |" அம்மாவை எந்த சாக்குப் போக்கு சொல்லி வீட்டை விட்டு வெளியேற்றலாம் என்றிருந்தவனுக்கு, பத்மா ஃபைல் விவகாரம் கை கொடுத்தது,

"இனி ஒரு நிமிஷம் கூட இந்த ஆத்திலே இருக்கக் கூடாது. எங்கேயாவது போய் தொலை, என் மூஞ்சியில முழிக்காதே, ஆறு, குளத்தில விழுந்து சாகு, இல்லேன்னா ஒரு ரயில் முன்

விழுந்து உயிரை விட்டுத் தொலை” என்று கூறி கதவைத் தடாலென சாத்தி லட்சுமியை வெளியே அனுப்பி விட்டான் சாரங்கன்.

எள்ளைக் கொட்டினால் பொறுக்கி விடலாம், சொல்லைக் கொட்டினால் பொறுக்க முடியுமா.. ? இந்த பத்மாவாவது வயசான மாமியார் ஆச்சே என்று தடுக்க வேண்டாமா? சாரங்கன் செயலுக்கு ஒத்து ஊதுவது மாதிரியல்லவா நடந்து கொண்டாள். அவள் மீது கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. சாரங்கன் சொன்ன மாதிரி ஏதாவது ஆற்றிலோ, குளத்திலோ விழுந்து செத்து போயிடலாமா.. ? மரணத்திற்கு தான் தயார், ஆனால் அமைதியற்ற துர்மரணமாக இருக்க வேண்டுமா.. ? வேண்டாம், வாழ்ந்து காட்டணும், பெருமாள் கொடுத்த உயிரை ஏன் மாய்த்துக் கொள்ள வேண்டும்.. ?

வங்காளத்து இந்துக்கள் விடியற்காலையில் தாயை வணங்குவார்களாம், ஒரு பெரிய தட்டில் தன் தாயின் சுத்தமான பாதங்களை வைத்து, அதை கங்கா தீர்த்தத்தால் அலம்பி, அந்த புனித நீரை குடிப்பார்களாம், எப்பவோ ரகுவின் பெண் கோதை சொன்னது ஞாபகத்திற்கு வந்தது லட்சுமிக்கு.

இதே மாதிரி பிரச்சனை முன்பு ஒரு தடவை வந்தபோது, அக்கா பையன் ரகு ஆத்தில் தங்கியிருந்தேனே, அப்போது ரகுவும் சரி, ரம்யாவும் சரி, பேத்தி கோதையும் சரி, என்னமாய் தாங்கினார்கள். எவ்வளவு அன்பு செலுத்தினார்கள், குறிப்பாக கோதை எவ்வளவு அறிவுப் பூர்வமான விஷயங்களை எடுத்துச் சொன்னாள்.

கோதை சொன்ன செய்தியை நினைத்துப் பார்த்த லட்சுமி மனதிற்குள் சிரித்துக் கொண்டாள். பெற்ற தாயை தெய்வம், கோயில் என்று நினைப்பவர்களுக்குத் தானே அதெல்லாம். பாதுகாபிசேகம் பண்ண வேண்டாம், சுடு சொல் சொல்லாமல் இருந்தாலே போதுமே. என்ன நெஞ்சழுத்தம் இருந்தால் பொண்டாட்டி பேச்சைக் கேட்டு என்னை வெளியே தள்ளிவிட்டான் சாரங்கன்.

இவனெல்லாம் நன்னா இருப்பானா.. ? இவனுக்கு நல்ல சாவு கிடைக்கக்கூடாது ஒரு கணம் சபிக்க வேண்டும் போல் தோன்றியது. அடுத்த கணமே அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டாள். பெத்த வயிறு ஆச்சே சாபம் கொடுக்கக் கூடாது. என்னிக்காவது பெருமாள் நல்ல புத்தியை கொடுப்பார். பத்தாயிரம் ரூபாய் சம்பாதித்து புத்தி கெட்டு அலைந்தவர்களும் உண்டு, இரண்டாயிரம் ரூபாய் சம்பளத்தில் இணையற்ற சந்தோஷத்தையும், அமைதியும் காண்பவர்ளும் உண்டு. உடனே லட்சுமிக்கு தனபூர்வீக கிராமத்தில் இருக்கும் ரகுவின் ஞாபகம் வந்தது. இரவு எட்டு மணி ஆகியிருந்தது. லட்சுமியை அந்த கிராமத்தில் இறக்கிவிட்டு பேருந்து உறுமிக் கொண்டு சென்றது.

கதவு தட்டப்படும் சத்தம் கேட்கவே திறந்த ரகுவிற்கு ஆச்சரியமாய் இருந்தது. “வா சித்தி, என்ன இந்த நேரத்திலே”

“வாங்கோ சித்தி” கூடவே ரம்யாவும் வரவேற்றாள்.

ரகுவைப் பார்த்த மாத்திரத்திலேயே லட்சுமிக்கு தாரை தாரையாய் கண்களில் வர, நடந்த

நிகழ்ச்சிகளை விவரித்தாள். அதைக் கேட்ட ரகு, " விடு சித்தி, சாரங்கன் குணம் தான் நம்ம எல்லாருக்கும் தெரியுமே, நீ இனிமே கவலைப்படாதே, எங்களோடே பேசாம இருந்துடு, அப்படி உனக்கு இஷ்டம் இல்லையா.. ? எதிர் வீடு சும்மாதான் இருக்கு, அதுல இருந்துக்கோ" என்றான்.

"ஆமாம் சித்தி, நீங்க எங்கேயும் போக வேண்டாம், உங்களைப் பற்றி யாருக்கும் குறிப்பா மச்சினர் சாரங்கனுக்கும் தெரிய வேண்டாம்" ரம்யாவும் தன் பங்குக்கு ஆறுதலாய் சொல்லவே நெகழ்ந்து போனாள் லட்சுமி.

அலுவலகத்திலிருந்து அப்போதுதான் திரும்பிய கோதை. "ஹாய் பாட்டி, எப்படி இருக்கே! என்ன ஆச்சு, மறுபடியும் வேதாளம் முருங்கை மரம் ஏறடிச்சா.. ? நீ பேசாம போலீஸ்ல புகார் கொடுத்திருக்க வேண்டியதுதானே, உன்னோட பென்ஷனையும் வாங்கிட்டு ஒனனை விரட்டின இந்த மாதிரி ஆம்பளைங்கள நாலு சாத்து சாத்தி முட்டிக்கு முட்டி தட்டி தவிக்க வச்சாத்தான் உருப்படுவாங்க, பெத்த தாயை கவனிக்க தெரியாதவனுக்கெல்லாம் இதுதான் வைத்தியம்"

கோதை சமுதாய வேறுபாடுகளைக் களைந்து எடுக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவள். அறிவாளி, புத்திசாலி, அத்தனைக்கும் மேல் பாரதி கண்ட புதுமைப் பெண் என்றால் அது இவள் தான். கை நிறைய சம்பளம் ஆனாலும் மனிதநேயம் மிக்கவள். " பாட்டி இனிமேல் சாரங்கன் சித்தப்பா இல்லைன்னு நினைச்சுக்கோ/"

"ஏய் கோதை, என்ன பெரியவாகிட்ட தப்பா பேசிண்டு" ரகுவும், ரம்யாவும் அதட்டினர்.

"இல்லேப்பா, என்னாலே இந்த மனிதப் பண்பற்ற செயலைக் கண்டிக்காம இருக்க முடியல, பாட்டி எவ்வளவு நல்லவ, இந்த சித்தப்பா பாட்டி உயிரோட இருக்கும்போது எதுவும் செய்யாம பாட்டி செத்தபிறகு தடபுடலா பத்து சபண்டீ கரணம், கபஸ்வீகாரம்ன்னு செய்வா,. போன தடவை செஞ்ச மாதிரி பாட்டியை சமாதானப்படுத்தி அவர்கிட்ட விட்டுட்டு வரக்கூடாதுப்பா, அந்த போலி மனிதனின் முகத்திரையை கிழிக்கணும்னா பாட்டி சாகற வரைக்கும் நம்மோட இருக்கணும்"

"ஆமாம் ரகு, கோதை சொல்ற மாதிரி, நான் உங்க பார்வையிலேயே, எனக்கு வர்ற பென்சனை வச்சிட்டு எதிர் வீட்டிலேயே இருக்கேன்."

"சரி பாட்டி, இந்தாங்கோ மலைப்பழம், நீ வருவேன்னு தெரியாது தெரிஞ்சிருந்தா நிறைய வாங்கியிருப்பேன்" கோதை மலைப்பழத்தை கொடுத்த போது லட்சுமிக்கு பழைய நினைவுகள் நிழலாடின.

சாரங்களிடம் ஒரு நாள் தான் பழம் கேட்டதும், அவன் சொன்ன வார்த்தைகளும் காதிலே ஈயத்தைக் காய்ச்சி ஊத்தின மாதிரி இருந்தது.

"சாரங்கா, பழம் சாப்பிடணும், ஆசையா இருக்குடா, சாயந்திரம் ஆபீஸ் விட்டு வரும்போது அரை டஜன் மலைப்பழம் வாங்கிட்டு வாடா, இரண்டு நாளா வயிறே சரியில்லைடா"

“நீ சாப்பிடுவதே தண்டம். இதுல மலைப்பழம் வேறு கேடா” சட்டென பதில் வரவே அடங்கிப் போனாள் லட்சுமி. “தீயினாற் சுட்ட புண் உள்ளாறும் ஆறாதே, நாவினாற் சுட்ட வடு” என்ற குரல் லட்சுமியின் ஞாபகத்திற்கு வந்தது.

ஆச்சு, இன்னியோட ஒரு வருஷமாச்சு, கோதையின் அரவணைப்பினாலும் ஆதரவான பேச்சினாலும் நிறைய விஷயங்களைத் தெரிந்து வைத்திருந்த லட்சுமி, கோதை ஒரு பிரபலமான மருத்துவமனையில், தன் மறைவிற்குப் பின் கண் தானமும், உடல் தானமும் செய்வதற்கு உடன்பட்டு ஒப்புதல் கடிதம் கொடுக்கப் போவதாய் கேள்விப்பட்டு தானும் தயாரானாள்.

“இருட்டு, வெளிச்சம், இன்பம், துன்பம் இரண்டையும் சமமா பார்க்கணும்னு நீதானே சொன்ன கோதை, அதனால என் மறைவிற்குப் பிறகு என் கண்ணையும் உடலையும் தானமாக கொடுக்க வேண்டும் என்று நானும் முடிவு பண்ணிட்டேன். எந்த இடத்தில கையெழுத்துப் போடணும் பாரத்தைக் காட்டு”

“பாட்டி யூ ஆர் ரியலி கிரேட்”

காலச்சக்கர சுழற்சியில் லட்சுமியும் பென்ஷன் பணத்தை சிக்கனமாகச் செலவு செய்து ஒரு பெரும் தொகையையும் கோதை பணி புரியும் வங்கியில் டெபாசிட் செய்து நாமினி ஆக கோதையைப் போட்ட போது,

“பாட்டி, என்ன இது, எதுக்கு என்னை நாமினி ஆக போடறேள், ஆயிரம் தான் இருந்தாலும் சாரங்கன் சித்தப்பாவை நாமினியாகப் போடுவது தான் நியாயம்.”

“இத பாரு கோதை, இதை தெரிஞ்சுதான் செஞ்சிருக்கேன், என் மறைவிற்குப் பின் எந்த காரணம் கொண்டும் என் பிணத்திற்கு சாரங்கன் கொள்ளி வைக்கக் கூடாது, என்னோட கடைசிக் காரியங்களுக்கு என் பணத்தை செலவு பண்ணுங்கோ, இவ்வளவுதான் நீ எனக்குச் செஞ்சதை திருப்பிச் செஞ்சா நீ வாங்கிக்க மாட்டே, அதனால் தான் இந்த ஏற்பாடு, மாத்திரைகளைச் சாப்பிட்டுட்டு தூங்குறவன் கவலைகளை சாகடிக்க வில்லை, நரம்புகளைச் சாகடிக்கிறான் என்று அடிக்கடி நீ சொல்லுவ அது உண்மைதான் கோதை.”

பேசிக்கொண்டே வந்த லட்சுமி திடீரென மூர்ச்சையாகி கீழே விழுந்திட, உடனே கோதையும் ரகுவும். ஆட்டோவில் ஏற்றிக்கொண்டு மருத்துவமனைக்குச் சென்று கொண்டிருந்தபோது, லட்சுமியின் உயிர் கோதையின் மடியிலே பிரிந்தது. லட்சுமி ஒவ்வொரு நாளும் அந்திம காலத்தில் தன்னை கடாட்சிக்கும்படி பெருமாளை சேவிக்கும்

துப்புடையாரை அடைவதெல்லாம் சோர்விடத்துக் துணையாவரன்றோ ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன் ஆனைக்கு நீ அருள் செய்தமையால் ஏய்ப்பு என்னை வந்து நலியும் போது அங்குஏதும் நானுன்னை நினைக்க மாட்டேன் அப்போதைக்குஇப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே!

என்ற பெரியாழ்வார் திருமொழி 4-10 பதிகப் பாசுரங்கள் கோதையின் நினைவிற்கு

வந்தன. ஏற்கனவே பாட்டியின் விருப்பத்திற்கேற்ப கண்தானம், உடல் தானத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை அந்த மருத்துவமனையில் செய்ய ஆரம்பித்தனர் கோதையும், ரகுவும்.

அதே நேரம் அந்த மருத்துவமனையின் நாலாவது ப்ளோரில் பரபரப்பாய் காணப்பட்டான் சாரங்கன். முகத்தில் சோகம் நிறைந்திருந்தது.

“டாக்டர் சார், எப்படியாவது என் பத்மாவை காப்பாத்துங்க” என்று மருத்துவரிடம் கெஞ்சிக் கொண்டிருந்தான்.

“மிஸ்டர் சாரங்கன், மேஜர் ஆக்சிடென்ட்ல உங்க ஒய்ஃப்க்கு இரண்டு கண்ணும் மட்டுமல்லாமல் இடது காலும் எடுக்க வேண்டிய சூழ்நிலை, வேறொருவருடைய கண்களைப் பொருத்திடலாம் என்றால் ஐ பேங்கில் கைவசம் ஸ்டாக் இல்லையாம்”

“சார் சார், எப்படியாவது ஏற்பாடு பண்ணுங்க சார், எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை”

“நாங்க முயற்சிக்கிறோம்”

பத்மாவுக்கு இப்படி நடந்ததற்கு காரணம், தன் அம்மாவை விரட்டி விட்டதுடன் மட்டுமல்லாமல், தன் அம்மா உயிரோடு இருக்கிறாளா.. ? என்பதைப் பற்றி கூட சிந்திக்காமல் இருந்ததற்கு தக்க தண்டனையை பெருமாள் கொடுத்துட்டாரோ. புலம்பினான், தவித்தான் சாரங்கன்.

“மிஸ்டர் சாரங்கன், இப்பதான் இறந்து போன ஒரு பேஷண்டோட கண்ணைப் பொருத்தி ஆப்ரேஷன் நடந்துகிட்டு இருக்கு, லெட் அஸ் பிரே டு காட் அண்ட் ஹோப் ஃபார் தி பெஸ்ட்”

“ரொம்ப தேங்க்ஸ் டாக்டர், அந்த பேஷண்டோட உறவுக்காரர்களை எனக்கு அறிமுகப்படுத்துங்க டாக்டர்”

“உணர்ச்சி வசப்படாதீங்க சாரங்கன், ஜஸ்ட் பைவ் மினிட்ஸ் வெயிட் பண்ணுங்க சாரங்கன்” டாக்டர் அறிமுகப்படுத்திய நபர்களைப் பார்த்ததும் உறைந்து போனான்.

“ரகு, ரகு என்னுடைய அம்மா கண்ணையா பத்மாவுக்கு பொருத்தியிருக்காங்க”

”டேய் சாரங்கா, நீ என்ன கொடுமை செய்தாலும் பெத்த தாய் உனக்கு நன்மையைத்தான் செய்வாள், உங்களுக்கு தொல்லை கொடுத்தவர்களை கவனித்துக் கொள்ளும் பொறுப்பை பகவானிடம் விட்டுடுங்கோன்னு அடிக்கடி சொல்லுவா உன் அம்மா, ஆனால் அவளோ தன் கண்களை தானமாய் கொடுத்து உன்னை கவனிக்கும் பொறுப்பை மீண்டும் ஏற்றுக் கொண்டுள்ளாள், இனியாவது உன் மனைவிக்குச் செய்யும் பணிவிடைகள் அவளுக்ல்ல. உன் அம்மாவுக்கு என நினை, மனித நேயத்துடன் வாழ முயற்சி செய். தாயிற் சிறந்ததொரு கோவிலுமில்லை என்று பெரியவா சொல்லுவா, ஆனா நீ உன் தாயை எவ்வளவு உதாசீனப்படுத்தியிருப்ப, நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் உன் தாய் தினமும் உன்னை பார்க்கும்படி செய்து கொண்டு விட்டாள். இதுதான் உண்மையான நேத்திர தரிசனம்.

# 10. தாய் மண்

“காடு வெளஞ்சு என்ன மச்சான் நமக்குக் கையும் காலும் தானே மிச்சம்”.

- பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

இன்றைய இளைஞர்களுக்குத் தேவை, அறிவு ஊட்டும் நூலகங்கள் தவிர, அறிவை

கெடுக்கும் ரசிகர்மன்றமோ, இல்லை, என்ற கொள்கையுடைய

அரவிந்தனை தேடி வந்த பாஸ்கர் “சேதி தெரியமா? நம்ம கிளாஸ்மேட் பெரிய பண்ணைசுந்தர், அமெரிக்காவிலுருந்து, வந்த காரணமே, மெயின்ரோடு ஒட்டி, அவங்க 40 ஏக்கர் விவசாயநிலத்தை, ஒரு பன்னாட்டுநிறுவனத்துக்கு விற்க தானாம்.”அந்தப் பன்னாட்டு நிறுவனம், பெரிய மால், மல்டி பிளெக்ஸ் தியேட்டர் தீம் பார்க் கட்ட போகுதாம்“?”

இது பற்றி சத்தியமூர்த்தி ஸார்கிட்ட, கலந்து பேசுவோம். ” என்று இருவரும் அவரிடம் சென்றார்கள்

இந்தியாவினமுதுகெலும்பு, விவசாயம், அதுல பசுமைபுரட்சி

ஏற்படுத்தணும்ன்னு, சொல்லிட்டு, சுந்தர் மூலமா, இப்ப இந்த விவசாய நிலத்தை அழிக்க அரசும் துணை போகுதே?அதற்கான ஏற்பாடு நடக்குதே?”

. அது அவனுடைய சொந்த விருப்பம். நாமே இதிலே எப்படித் தலையிடமுடியும்?”

“சார்!அப்படிசொல்லாதீங்க!” இதனால் 40 ஏக்கர் நிலத்தை விவசாயப் பண்ணும் குடும்பங்கள் பசியும் பட்டினியுமாக இருக்க வேண்டிய சூழ்நிலை உருவாகும். இந்தப் பிரச்சினைக்கு ஒரு தீர்வு வேணும் சார். ”

“நாளைக்கேபஞ்சாயத்து தலைவர், ஊர் பெரியவங்களல்லோருடனும் பேசி புரிய வைப்போம் சரியா”.

கிராமத்தில், அதிக நஞ்சை, புஞ்சை, நிலம் பரம்பரை பரம்பரையாக, பெரிய பண்ணை முத்தையா முதலியாருக்குச்சொந்தமாக் இருந்தது..

அரசு ஆணைப்படி சீலிங்கில், சில ஏக்கர்நிலங்கள் அடிபட்டு போக, மிச்சம் இருப்பது மெயின் ரோடு ஒட்டி உள்ள 40 ஏக்கர் நஞ்சை நிலமும், அதைச் சுற்றி இருக்கிற மரங்கள் அவர்கள் வாழ்ந்து வரும் பெரியவீடும் மட்டும் தான்.

அமெரிக்காவில் எம். எஸ் முடித்து, அங்கேயே வேலை பார்த்து வந்த சுந்தருக்கு, தன் அப்பா திடீர்னு மாரடைப்பில் இறந்து போனதால். அந்த நேரம் வந்து 40 ஏக்கர் நிலத்தைக் குத்தகை சாகுபடிக்கு 20 விவசாயிகளிடம் கொடுத்து சாகுபடி செய்யுமாறு சொல்லி விட்டு அமெரிக்கா கிளம்பி போயிருந்தான்.

அப்படிப் பட்ட அந்த 40 ஏக்கர் நிலம் தான், இப்போ கார்பொரேட் நிறுவனதிற்குக் கை மாறப் போகும் சூழ்நிலை கேள்விபட்டு கொதித்த து மொத்த விவசாயக் குடும்பங்களும்.

மறுநாள் சத்தியமூர்த்தி, பஞ்சாயத்து தலைவர், அரவிந்தன், பாஸ்கர், மற்றும் ஊர் விவ சாயீகள் சில பேர், சுந்தர் வீட்டில் ஆஜராக, சுந்தர் மாடியிலிருந்து இறங்கிவந்துஎல்லோரையும் வரவேற்றான்.

”நீ உன் நிலத்தை விற்பனை செய்ய ஏற்பாடு செஞ்சு இருக்கே. அதனால ஏற்படப் போகும் பிரச்சனை, தீமைகள் நினைச்சு பாத்தியா? இந்த நிலத்தை வித்துத் தான் நீ வாழவேண்டிய சூழ்நிலையா ?இந்த செயலால் விவசாயிகளின் வாழ்வாதாரம் பறி போகும். நிலை தெரியுமா?

”நாடு செழிச்சிட மாடாஓழைச்சவன், நாத்துபரிச்சவன், ஏத்தம் இறைச்சு, மூடாத மேனியும், ஓடா எளச்சவன், அரை வயிறு கஞ்சி குடிக்கறவன், அதுவும் கெடக்கமா துடிக்கிறான்.

பட்டுக்கோட்டையார் தீர்க்கதரிசி அன்னிக்கே பாடிட்டு போனாரு.

இன்னமும் அந்த நிலைமை இங்கே தொடர்ந்து கிட்டு தான் இருக்கு. இதிலே நீ வேறே துணை போகரே

சத்தியமூர்த்தி சார் சொல்லவும்,

“நான் விக்கப் போற இந்தநிலத்திலே, பெரிய மால், ஷாப்பிங் காம்ப்ளக்ஸ் மல்டிபளக்ஸ் தியேட்டர், பெட்ரோல் பங்க்,. உலகதரம்வாய்ந்தபொருள்கள், பிரெஷ்காய்கறிகாய்கள்விற்பனைக்கு. கிடைக்கப் போகுது”

அந்தக் கட்டிடம் வந்த பிறகு நம் ஊர் நிலம் மதிப்பு பல மடங்கு உயர போகுது. பொருளாதாரம் மேம்படப் போகுது. ”

‼அந்தஎண்ணத்தில் தான் அந்தபெரியநிறுவனதக்கு விலை

பேசியிருக்கேன். ”

”. தம்பி சுந்தர், ! நீ மெத்தபடிச்சபையன். அமெரிக்கா கலாசாரம் மேம்பாடு அப்படின்னு பேசறே. அது இங்கே ஒத்து வராது.

ஆனா உங்க 40 ஏக்கர் விவசாய நிலத்தை, நம்பி ஏழை விவசாயக் குடும்பங்களைப் பத்தி, யோசிச்சு பாத்தியா? அவங்களுக்கு விவசாய வேலைய விட்டா வேற எதுவும் தெரியாது. “அவங்க நாளைக்கு ரோட்டில் வந்து நிக்க நீ காரணமாக இருக்க வேண்டாமே?”

”சுதந்திரம்வாங்கி76வருஷம்ஆச்சுஇந்தசூழ்நிலையில்2020

கணக்குப் படிஇன்னமும் தமிழ் நாட்டில் 8 கோடி மக்கள்தொகையில் 12 சதவீதம் மக்கள் வறுமை கோட்டுக்கு கீழே, வாழ்ந்து கிட்டு இருக்காங்க. ”

இன்னிக்குவீதிக்குவீதி, காய்கறிகள் கூவி விக்கற, தள்ளு வண்டி வியாபாரி, தன்

தலையில்சுமந்து, வீடுவீடா, கீரை காய்விக்கிறபெண்மணி, எல்லோரையும்ஒழிச்சிட்டு பண முதலைகளை, இன்னும் கொழிக்க வைக்கிற விசயத்துக்கு, நீ துணைபோகலாமா?”

அரவிந்தன் பேசும் போது” ”ஏசி யைபோட்டுக்கிட்டு, நம்மதோட்டத்துல, விளைஞ்ச காய்கறி யை கொறச்சவிலைக்கு அவங்க வாங்கிட்டு, நல்லா தொடச்சு, கண்ணாடி பெட்டிக்குள்ளவைச்சுட்டா, அதுபிரெஷ்ஆகுமா என்றான்.

இந்தவிவசாயமண்நம்முடையதாய்மாதிரி. இதைப் பன்னாட்டுக் கார்பொரேட் நிறுவனத்திற்கு விக்கறது, நம்ம பெத்த தாயை விபசாரத்துக்கு அனுப்பற மாதிரி. ”

ஒரு நிமிடம் வந்திருந்த எல்லோரும் ஆடிபோனார்கள்

“இப்படிச் சொன்னதுக்கு என்னை மன்னிக்கணும் சுந்தர்..”அண்ணி என்னைநீங்களும்மன்னிச்சுடுங்க.

உணர்ச்சிவசப்பட்டுபேசிட்டேன்”

அரவிந்தன் மன்னிப்பு கேட்டான்.

நீங்கள் என்னவாதம்

பண்ணினானாலும் நான் கேக்க, போவதில்லை. என் முடிவிலுருந்து நான் பின் வாங்க போவதில்லை;எனக்குமுக்கியமானவேலைஇருக்கு. ”நீங்க கிளம்பலாம்.

சுந்தர் வேகமாக மாடிக்குப் போனான்.

ஒரே நாளுல, தீரும் பிரச்சனை கிடையாது. நம் கருத்தை சொல்லி இருக்கோம். சுந்தர் யோசிக்க டைம் கொடுப்போம்”.

அன்னபூரணிக்கு, சுந்தர் செய்வது எதுவும் பிடிக்க வில்லை.

இந்தக் கிராமத்தை பூச்சோலையாக, வளமான பூமியாக வைத்துருந்த, தன் கணவர் எங்கே? பூநாகம் புகுந்த மாதிரி சுந்தர் நடவடிக்கை எங்கே?”

சுந்தர் பக்கத்து டவுனுக்குச் சென்று விசா சம்பந்தமான வேலைகளைப் பார்க்க தொடங்கினான்.

“அம்மா நாளைக்குச் சென்னை விசா ஆபீஸ் போகணும். தயாரா இருங்க.”என்று சொன்னதும்

அன்னபூரணி கோபமா கத்தினாள்.

“நான் எதுக்கு அமெரிக்கா வரணும்?. உனக்குச் சமைச்சு போடவா? அப்படி வேணும்ன்னா, ஒரு பொண்ணை கல்யாணம் செஞ்சுகி ட்டு, குடித்தனம்பண்ண வேண்டியது தானே. ? நிறையத் தடவை இதைப் பத்தி பேசினா பிடி கொடுத்து பேச மாட்டேங்றே?”

பாசத்தையும், அன்பையும் கொட்டி வளர்த்த இந்த வயல்கள், மரங்கள், செடி கொடி என்னைப் பாத்து, எங்களை விட்டுட்டு போகாதேன்னு சொல்ற மாதிரி இருக்கு”

“மரங்கள் பேசுமா? வயல்கள்பேசுமா? இது என்ன பைத்தியக்கார தனம்ன்னு, உனக்குத் தோனும். யார்கிட்ட பாசமும் நேசமுமா இருக்கோமோ, அவர்களின் மன உணர்வுகள்பேசும்.”

மேற்கு ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த மோனிகா காக்லியானோ உள்ளிட்ட சில ஆராய்ச்சியாளர்கள், செடிகளால் பேசவும் கற்றுக்கொள்ளவும் தகவல்களைப் பரிமாறிக்கொள்ளவும் முடியும் என்பதைக் குறிப்பிட்டு பல ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதியிருக்கிறார்கள்.

என்பதை நான் படித்தேன். அதை அனுபவபூர்வமாக உணர்ந்தேன்.

மனுஷன்மாதிரிதான்தாவரங்களும் சரி, பாசமுள்ள பிராணி களும் சரி. ”

அந்த 40 ஏக்கர் வயல்கள் சுற்றி நிறையத் தென்னை மரங்கள், மற்றமரங்கள் மாசுவைகட்டுபடுத்துகிறது. கரிமலவாயுவை உட்கொண்டுஆக்ஸிஸனை கொடுக்கிறது. நாம் உயிர்வாழபெரிதும பயன்படுகிறது”.

“பறவை கழிவு மூலம் தான்மரங்கள்வளர்கிறது. அவை எல்லாம் என்னைப் பார்த்து,”அண்ணி!அண்ணி ! என்னை வெட்ட சொல்லாதீங்க!. எவ்வளவு வருஷம் எவ்வளவு பலன் கொடுத்து இருக்கோ ம் என்று தினமும் என்னைக் கேட்குது”

“அந்த நன்றி ஒங்க பையன் கிட்ட இல்லாம போச்சே, என்று கண்ணீர் விட்டு புலம்பிய மாதிரி எனக்கு ஒரு உணர்வு.”

“அப்பேரபட்ட மரங்களை வெட்டி, அங்குக் கட்டிட்டம் வர வேண்டுமா?”

நீ எவ்வளவு கெஞ்சி கேட்டாலும் நான், இந்த மண்ணோடு தான் இருப்பேன். இங்கேயே மடிந்து போவேன்”. என் சாவுக்குக் காரணம் நீ தான் என்று எழுதிவிட்டு தற்கொலை செய்து கொள்வேன்

ஊர் மக்கள் சொல்லியும், நான்சொல்லியும், நீஉன் எண்ணத்தை மாற்றிக் கொள்ளாவிட்டால், நீ ஒரு பணப் பிசாசு தான். என்று கூறி விட்டு தன் ரூமிற்க்கு சென்று பூட்டி கொண்டாள்.

அன்று இரவு முழுவதும், சுந்தர் தூங்க முடியாமல் தவித்த தான், அம்மா சுபாவத்தில் நல்லவர் ஆனால் ரோஷம் மிக்கவர். ஏதாவது செய்து கொண்டால்?

அதே சமயம் எதையும்யோசிக்காமல் அவசர பட்டு, முடிவு எடுத்து விட்டோமோ? குழம்பி, குழம்பி, அப்படியே படுத்தவன் காலையில் லேட்டாக எழுந்தான்.

காலையில் அம்மா கதவு திறக்க படாமல் இருந்தது கண்டு பதட்டமான நிலையில்.

பஞ்சாயத்து தலைவர் சத்தியமூர்த்தி மற்றும் அரவிந்தனை

வரவழைத்தான்.

வந்தவர்களிடம், “அம்மா என்னோடு அமெரிக்கா வர முடியாது. சரியான முடிவு தெரியற

வரைக்கும் பச்சை தண்ணி குடிக்க மாட்டேன்ன்னு, சொன்னாங்க. தர்க்கம் எங்களுக்குள் நடந்தது.”

“அம்மா சொன்ன விஷயத்தையும்,”இந்த தாய் மண்ணை வித்தா நம்ம தாயை, விபசாரத்துக்கு விக்கிற மாதிரின்னு” அரவிந்தன் சொன்னதும் என்னைச் சவுக்கால் அடித்த மாதிரி இருந்தது”

நேத்து பூரா, அம்மா இந்த வயல்கள். மரங்கள் மீது வைத்துள்ள பாசத்தை, ஒவ்வொரு மரத்துகிட்டயும் வயல் வரப்புலேயும் புலம்பி கிட்டு இருந்ததை நேரில்பார்த்தேன்.

“அன்னிக்கு நீங்க சொல்லும் போது கேக்காதவன், ஒரே ராத்திரி, மனசு மாற முடியுமான்னு ஒங்களுக்குத் தோணும்!”அது தான் மனித இயல்பு.

திரும்பத் திரும்ப ” பிளாஷ்” மாதிரி அரவிந்தன் சொன்னதும், அம்மா சொன்னதும் வந்து வந்து போனது.

“அம்மாவிற்கு இந்த வயல்களும் மரங்களும்செடி கொடிகள் பிடித்தமானவை இனிமேல் அவங்களுக்குப் பிடித்தவைகள் தான் எனக்கும்.”

ஏழைவிவசாயீகளின்வறுமையையும் கெடுக்கும் இந்த திட்டத்துக்கு, துணைபோகமாட்டேன் இது, சத்தியம்.

“என் அமெரிக்கா நண்பனக்கு இன்னிக்கு மெயில் கொடுத்துட்டேன்.”

“என் காண்ட்ராக்ட் அடுத்த வருடம் முடிஞ்சுடும்.”

“இனி என் திட்டம் விவசாயத்தில் பசுமை புரட்சி.” பண்ணுவது தான்.

காடு வெளஞ்சு என்ன மச்சான் நமக்குக் கையும் காலும் தானே மிச்சம்“. என்றுபட்டுக்கோட்டையார் சொன்னதை மாற்றி, என்கிட்ட விவசாயம் பண்ணி கிட்டுஇருக்கிற 40விவசாயிகளுக்கும், 40ஏக்கர் நிலத்தில் 20 ஏக்கர் நிலத்தை ஆளுக்கு அரை ஏக்கர் வீதம், ஒரு வாரத்தில் பட்டா செய்யத் தயாரா இருக்கேன். இது என் அம்மாவுடைய விருப்பமும் கூட.”

இதைக் கேட்டதும் அன்னபூரணி அண்ணி வெளியே வந்தார் அவர் முகத்தில் மகிழ்சசி தெரிந்தது. சுந்தரை பாசம் பொங்க அனைத்துக் கொண்டார்

தன் மகன் மனம் மாறியதும். விவசாயிகளுக்கு மறுவாழ்வு கிடைத்த சந்தோசத்தில்

தன்கண்கள் மூலம் சத்தியமூர்த்திச் சாருக்கும் அரவிந்தனுக்கும் நன்றி கூறினார் அன்னபூரணி.

இனி ஒரு போதும் அந்த ஊருக்குக் கார்பொரேட் முதலைகள் ஆதிக்கம் வர முடியாது

விவசாயிகள் வாழ்வு இனி மலரும்

என்றநிம்மதியில், சுந்தர்க்கு ” நன்றிகூறினார்கள் ஊர் மக்கள்.

- முதலெழுத்து இதழ் டிசம்பர் 2023

# 11. அகிலா அர்ஜன் அமிக்டலா

“யாரோ பக்கத்து ஊர் பணக்காரர் பையன் பிறந்தநாளாம்;. அபிசேகம் அர்ச்சனை பிரசாதம் என வேலை எனக்கு நெட்டி கழட்டும்”. நாளை சீக்கிரம் எழுந்து க்கணும் ”

“பக்கத்து வீட்டு சாரதா டிபன் கொடுப்பா சாப்பிட்டு ஸ்கூல் போ லஞ்ச் நான் கொண்டு வரேன்”. விசு கிளம்பி போயிருந்தான்

“அகிலா கண்ணு, என்னடா!”அழுது அழுது முகம் வீங்கி இருக்கு”.

துக்கம் தாளாமல் சாரதாவிடம், ”அர்ஜுன்ன்னு கிளாஸ்மேட் பெரிய பணக்காரன் நாலஞ்சு பேரோடு சேர்ந்து என் மொபைல்க்கு, ஆபாச வீடியோ அனுப்பினது மட்டுமல்லாமல், நான் கிளாஸ் விட்டு கிளம்பி வீட்டுக்கு நடந்து வரும் போது, என் கைய பிடிச்சு இழுத்துட்டான். தொடகூடாதா இடத்தில் தொட்டுட்டான்.

எனக்கு ஒரே அவமானமா போச்சு.. ”

“நீ தைரியமா இரு. கண்ணைத் துடைச்சுக்கோ”. போக்சோ சட்டம் இருக்கு கவலைப்படாதே”

போலீஸ்அதிகாரிமப்டியில ஸ்கூல்க்கு வநது சம்பந்தபட்ட இருவரையும், தனி அறையில் காவலர் துணையுடன் விசாரித்து

வாக்கு மூலம் பெறப்படும் பின்னர்போக்சோ சட்டம் பிரகாரம் அர்ஜுனனை நிச்சயம் கைது செய்யும்..

என்று தெரிந்து வைத்திருந்தாள்

புகார் கொடுத்தபின் இன்ஸ்பெக்டர் ஸ்கூலில் காத்திருக்கும் படி சொல்லவும், ஸ்கூல் திரும்பியிருந்தார்கள்

அதே நேரம் கோயிலில், பிரசாதம் கொடுக்கும் நேரத்தில் அர்ஜுனைபோலீஸ் ஜீப் வந்து அழைத்துப் போகவும், பதட்டத்துடன் ஸ்கூலுக்குக் கிளம்பினார்கள்அவன் பெற்றோர்கள்..

கான்ஸ்டபிள் பேச்சில் அகிலா பெயர் அடிபடவும் விசுவும் ஸ்கூலுக்குக் கிளம்பினான்.

ஹெட்மாஸ்டர் ரூமுக்குக் கோபமாக வந்த அர்ஜுன் பெற்றோர்கள்,

“எங்க மானம் சந்தி சிரிக்கவும். என் பையன் கெட்டு போனதுக்கு, ஒங்க ஆசிரியர்கள் தான் முழுக்க முழுக்கக் காரணம்”

“ஒங்க பையனை நெறிப்படுத்தும் பொறுப்பு ஆசிரியருக்கு மட்டும் தானா?” ”

இவர்களின் சூடான வாதங்களிடையே, உள்ளே நுழைந்த விசுவை கண்டதும், ஹெட்மாஸ்டர் எழுந்து நின்னு வரவேற்றது மட்டுமல்லாமல் இன்ஸ்பெக்ட ரும்

வரவேற்றதைக்கண்டுஅர்ஜுன்பெற்றோர்கள்அதிர்ச்சிஆனார்கள். , ”குருக்களாக

இருக்கும் இவருக்கு இவ்வளவு மரியாதையா?. ””இவர் மகளிடமா ? அர்ஜுன் வம்பு செய்தது உள்ளான்?”

தன் பையன் வாழ்க்கை இனிஅவ்வளவுதான்!

” ஓங்க அர்ஜுன் கெட்டு போனதுக்குக் காரணமே ஒங்களைப் போன்ற பெற்றோர்களும், சினிமாவும், சமூகமும் தான். ”

பையன்களுக்கு, அதிகச் செல்லம் கொடுத்து, விலை உயர்ந்த செல் வாங்கிக் கொடுத்து, கெடுத்து இருக்கிங்கே !அதான் அர்ஜுன் அம்மாதிரி நடந்து உள்ளான். ”

”வெளிநாட்டு திரை படங்கள் குழந்தைகள் வரும் காட்சிகளைமிக

கவனத்துடன் எடுக்கிறார்கள்.. ஆனால் இங்கோ, வகுப்புக்குவரும் ஆசிரியர்களை,

கேலிசெய்வது,. ஆசிரியைக்கு மாணவன் காதல் கடிதம் கொடுப்பது. மாணவிகளுக்குப் பாலியல் தொந்திரவு, வகுப்பில் மது குடிப்பது. சிகரெட் பிடிப்பது

ஆசிரியர் மீது காகிதஅம்பு விடுவது. இம்மாதிரி காட்சிகளைத் திரை படத்தில் பார்த்து, பார்த்து அதன் படி மாணவர்கள், அதைச் செய்து விடுகிறார்கள். ” கன்ட்ரோல் கிடையாது

“ஒரு மாணவனின் வளர்ச்சியில் சிறார் பருவமும், டீன் ஏஜ் பருவமும் தான், மிக முக்கியமானவை. அந்த பருவம் கண்ணாடி பாத்திரம் மாதிரி பாதுகாக்கபட வேண்டிய ஒன்று.”

விசு பேச பேச தலையைக் குனிந்து கொண்டார்கள்

ஒவ்வொருவாரின் மூளைக்குள்ளே ஓர் ஓரத்தில் அடியில் இருக்கும் ஒரு தக்கினியூண்டு சதைக்கட்டு, மூளையின் இரண்டு பக்கமும், பக்கவாட்டுப் பகுதியில் பாதுகாப்பாகப் புதைக்கப்பட்டுள்ள சிறிய சைஸ் பாதாம்பருப்பு அளவே உள்ள ஓர் உறுப்புதான். அமிக்டலா’ (amygdala) என்கிற பகுதியும், அங்கு ஏற்படும் மாற்றங்களும்தான் என்கிறது மருத்துவ அறிவியல்.

”நமது பயம், நமது வெறுப்பு, ஆத்திரம், அகங்காரம், அன்பு, கனிவு, துக்கம், சோகம் உடனடிஎதிர்மறைஎண்ணங்கள், மற்றும்கோபத்தை, வெளிப்படுத்தும்தான்செய்வதுசரியாதவறா என்று முடிவெடுக்க முடியாத உணர்ச்சிகளை உற்பத்தி செய்வது ‘அமிக்டலா’ தான்

.

“அதனால் தான் ஆசிரியர்கள் ஆசிரியைகள் திட்டினால், அவமானப்படுத்தினால், அவர்களை வகுப்பில் கத்தியால் குத்துவது, கொஞ்சம் எமோஷன் ஆவது. சில மாணவர்கள் சில மாணவிகளிடம் செய்யும் பாலியல் தொந்தரவு இதனால் மன உளைச்சல் ஆகி தற்கொலை செய்து கொள்வது போன்ற சம்பவங்கள். நடக்குது”

அம்மா இல்லாத பொண்ணு.. அதற்குள் சகோதரி சாரதா புகார் கொடுத்துவிட்டார்.

"வளர்ந்த, நாமே கணநேரதில் எமோஷனல் ஹை-ஜாக். ஆகும்போது அர்ஜூன் மட்டும் என்ன விதி விலக்கா?

குழந்தையின் உடலின் எந்தப் பகுதியிலும் ஊடுருவலை ஏற்படுத்தும் வகையில் நடந்துகொண்டாலோ, அதுபாலியல்வன்கொடுமைஎன்றுபோக்சோகருதப்படுகிறது. "நீதிபதி கொடுக்கும். தண்டனையை அனுபவிக்கும் போது அர்ஜூன் க்கு பழி வாங்கும் உணர்ச்சிஅதிகம் வரும். மன உளைச்சலை ஏற்படுத்தும்.

"சட்டஅறிவுசொல்லபடவதோடு, போக்சோசட்டம்பற்றியவிழிப்புணர்வுபள்ளிக்கூடத்தில்போதித்தால், மாணவ மாணவிகளிடம் பயம் வரும். எதிர்காலம் பற்றி அச்சம் வரும்."

இன்று காலை அவன் பிறந்த நாள் நீடூழி வாழ வேண்டும் நல்ல புத்தி கொடுக்கவேண்டும் என்று கடவுளிடம் பிரார்த்தனை செய்து ஆசிர்வாதம் செய்து வாழ்த்தியது நான்.. "

"அர்ஜுன்வாழ்க்கைபாதிக்கபட நான் விரும்ப வில்லை. புகாரை வாபஸ் வாங்குகிறேன்.. இன்ஸ்பெக்டர்

' அர்ஜூன் இரண்டு பேரும் கெட்ட கனவா மறந்துடங்க !. "

, விசுவுக்குக் குருக்கள் பணி தொழில். ஆனால் சைகாலஜி பட்டதாரி. " நிறைய ஸ்கூல போலீஸ் ஸ்டேஷன் போன்றவற்றில் மன உளவியல் வகுப்புகள் இலவசமாக எடுத்து நல்வழி படுத்துகிறார் என்று இன்ஸ்பெக்டர் சொல்லவும்

விசு குருக்கள் பேச்சின் நேர் மறைஅணுகுமுறை, மாணவர்களின் செயல்களை மருத்துவ அறிவியல் மூலமாக நிரூபித்தது, அவர்கள் மீது தப்பு இல்லை பெற்றோர் தான் முக்கியப் பங்கு என்கிற வாதத்திலும், எப்படி பாதிக்கப் பட்டவர்களைக் கையாள்வது, என்கிறமுறையில், நியாயம்இருப்பதைஉணர்ந்தஅர்ஜூன்பெற்றோர்கள் விசுகுருக்கள் ஹெட்மாஸ்டர் இன்ஸ்பெக்டர் எல்லோரிடமும் மன்னிப்புகேட்டதோடு, தெய்வம் மனித உருவில் தங்கள் தவறை திருத்தியதாக உணர்ந்தார்கள்...

**- தேன்சிட்டு 2022 தீபாவளி மலர்**

# 12. உருவ கேலி

Experience is not what happens to you; it is what You make of that happening.

By Renowned Austrian Psychologist Alfred Adler.

நான் டூட்டிக்கு வரும் போது, இரயில்வே டிராக்கில் நின்றுக்கொண்டுருந்த, இந்தப் பெண், தற்கொலைக்கு முயற்சித்தாள்.

“என்னை ஏன் காப்பாத் தினிங்க?. எனக்கு வாழ பிடிக்கலன்னு” சொல்லி, அழுதுகிட்டு இருந்தாள்..

“போலீஸ் கேஸ்ன்னு போனா, பிரச்சினை தான் வரும்.”

“இவளுக்கு மனதளவில், ஏதோ பிரச்சினை இருக்க வேண்டும். ;இதற்கு ட்ரீட்மென்ட் தான் சரியான வழின்னு முடிவு செஞ்சு;, ஒங்க கிட்ட அழைச்சிட்டுவந்தேன் டாக்டர்.”

பர பரபரப்புடன் சொல்லி முடித்தார் டாக்டர் நரேன்.

“யுவர் டிரிட்மெண்ட் இஸ் இமெடியட்லி நீடெட் டாக்டர்!”

““ஓகே. ஐ வில் டேக் ஹெர்.”

“தாங்க்ஸ் ஃபார் யுவர் டைமிலி ஹெல்ப்.”பை பிரிங்கிங் ஹியர்.”

நான் டாக்டர் விஸ்வநாத், நகரத் தில் புகழ் பெற்ற சைக்காலிஸ்ட்..

வந்த பெண் பெயர் திவ்யா என்றும், வயது 17ன்னு சொன்னாள்.

17வயதுக்குண்டான உருவ அமைப்பு இல்லை;. மிகவும் குண்டாக, எடை 50கிலோவுக்கு மேல் இருந்திருக்க வேண்டும்.

அவளைஉட்காரச்சொன்னேன். சேரில்உக்காரசிரமப்பட்டாள்;மூச்சுவாங்கியது. ;

“பீ ரிலாக்ஸ் திவ்யா!” உங்க ப்ராப்ளம் என்ன? ” ஏன் தற்கொலைக்கு முயற்சி செஞ்சிங்க?”

ஒரு மாறுபட்ட கோணல் சிரிப்பில், அவள்சொன்ன வார்த்தை, எனக்கு அதிர்ச்சியாக இருந்தது.

”நான் பிளஸ்2மாணவி; நான் பாடி ஷாமிங் என்று சொல்லப்படும் உருவ கேலிக்கு பலிகடா ஆகிவிட்டேன். ; வகுப்பில் தான் மாணவர்கள் கேலி செய்கிறார்கள் என்றால் வீட்டில் பெற்றோர்கள் என்னை இகழ்ச்சி அடைய செய்கிறார்கள்;.

என் உருவ அமைப்பினால் எனக்கு ஃப்ரெண்ட்ஸ் யாரும் இல்லை. ;

ஐ ஃபீல் அலோன்.

உறவினர்கள், அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள்நான் மிகவும் குண்டாக இருக்கிறேன் என்று தினமும் கேலியும் கிண்டலும்!" பண்ணும் போது மனது இடிந்து போகிறேன்.

மனதைக் காயப்படுத்தும் மனிதர்கள் நடுவில் நான் வாழ விரும்பலை".

அதான் அப்படியொரு தற்கொலை முயற் சிக்கு முடிவு செய்தேன்.

குண்டாக இருக்கும் பெண் குழந்தைகள் மனசோர்வுடன் இருப்பதும், தற்கொலை செய்வதும், பள்ளி படிப்பை நிறுத்திவிடுவதும், நின்றுவிடும் சம்பவங்களும், கடந்த சில ஆண்டுகளில் நடந்துள்ளன. ; என்பது எனக்கும் தெரியும்.

சில பெற்றோர்கள், குண்டாக இருக்கும் பெண் குழந்தைக்கு, தேவையான அளவு உணவை கொடுக்காமல், குறைவாகக் கொடுப்பதையும் நான் பார்த்துள்ளேன்.

என் சிந்தனை ஓட்டத்தைக் களைத் தாள் அவள்.

“நான் ஏன் குண்டா பிறந்தேன் அது என் குற்றமா. ?டாக்டர்”

”இந்த உலகில் என்னைப்போன்ற பல பேர் அன்பு தோல்விக்குக் காரணம் நம்பிக்கையுரியவர்கள் முதுகில்குத்துவதே. !ஆனால் அந்தத்துரோகத்தை

வெறுக்கிறேன்”.

“வெல் செட் திவ்யா”!

இந்தப் பெண்ணின் மனதில், இவ்வளவு ஆழமான வடுஉள்ளதுஎன்றுதெரிந்த போதுவருத்தம்;, அதேசமயம், இவ்வளவுஅழகாக, பேசியவிதமும், என்னை கவரந்தது.

“பிளிஸ் ப்ரோஸெட்”

“இப்ப நீ யாரோட இருக்கே?”

“நான் ஹாஸ்டல்ல, என் பிரெண்ட் ரூமில். டாக்டர்”

திவ்யாவின், பர்சனல்ஹிஸ்டரி, கேட்டபிறகு இவளுக்கு. முதலில் மன உளவியல் சிகிச்சை அறிவாற்றல் நடத்தை சிகிச்சை, சைக்கோ-டைனமிக்சிகிச்சை, பகுத்தறிவு உணர்ச்சி நடத்தை சிகிச்சை, கெஸ்டால்ட் சிகிச்சை, மனிதநேய சிகிச்சை போன்ற பல்வேறு வகையான சிகிச்சைகளைப் பயன்படுத்த வேண்டும் ;

அந்த அளவுக்கு அவளின் மன அழுத்ததின் வீரியம் பேச்சில் தெரிந்தது.

“இப்ப உனக்கு லைப்லே என்ன வேணும். ?”

”அன்பு இல்லாத உலகம். மேலும் அபத்தமா தான் தெரியுது. வாழ பிடிக்கலை

“இத பாரு திவ்யா ஒங்க அப்பா அம்மா இல்லை ஸ்கூலில் மற்றவர்கள் பேசும் இகழ்ச்சி வார்த்தைகளுக்கு நீ முக்கியத்துவம் கொடுக்காதே.”

”நீ அவர்கள் பேசும் வார்த்தைகளை எண்ணி எண்ணி மனதில் இருத்திகொண்டால் ;நீ உனக்குள்ளே ஒரு சுவர் எழுப்பிச் சுய அனுதாபம் பெறும் அளவுக்கு ஆகி விடும் நிலைக்குத் தள்ளப் படுவே. அவர்கள் பேச்சின் மீது கோ பபடுவே.

இதைப் பார்த்து அவர்கள் மீண்டும் மீண்டும் அதே கமெண்ட் அடிப்பார்கள். ”

“இதனால் இந்த எமோஷன்ஸ் நீ என்ன விரும்புகிறாயோ அதைப் பெற விடாமல் தடுத்து நீ வாழ்க்கையில் உன் குறிக்கோள்களை அடைய முடியாமல் தடுத்து விடும்.”

“இங்கே பாரு திவ்யா அவர்கள் தன் குறுகிய கண்ணோட்டத்தில் உன் உடம்பை பார்க்கிறார்கள். அவர்களுக்கு விசாலமான எண்ணம் கிடையாது. அப்படி அவர்கள் பேசுவதால் இல்லை கேலி பண்ணுவதால் நீ எப்படி அவர்களுக்கு விக்டிம் ஆவாய்?”

”ஒன்றை மட்டும் நீ புரிந்துகொள் உன்னைக் கேலி பண்ணுபவர்கள் பேச்சுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் உன் வேலையைப் பார்.

அவர்களும் உன்னைப் பற்றிக் கேலி பேசுவதை நிறுத்துவார்கள். ;.

உன் எதிர்மறை குணமும் உன்னிடமிருந்து விலகி போகும் ;பிறர் என்ன சொன்னாலும் செவி மடுக்காதே. சரியா. !”

புகழ்பெற்ற உளவியலாளர் ஆல்ஃபிரட் அட்லர் : “அனுபவம் என்பது உங்களுக்கு ஏற்படுவதல்ல, அதுவே நீங்கள் நடப்பதைச் செய்கிறீர்கள்” இங்குச் செயல்படும் சொல் ‘உருவாக்கு’ என்பதுதான், கெட்டவற்றிலிருந்து நாம் நல்லதைச் செய்ய முடியும், என்று சொல்கிறார். ”!

ஆமாம்!”

நீ யாரையாவது காதலிச்சு இருக்கியா“?”

என்ன டாக்டர் நீங்களும், என்னைக் கிண்டல் பண்றீங்களா? ”

அழுதுக்கொண்டே, “நான் யாரையும் லவ் பண்ண முடியாது;.. , எனக்குப் பயமா இருக்கு. ; ம்ம்ம்.” எனக்கு அந்த அருகதை கிடையாது“! நான் குண்டு; என்னை யாருக்கும் பிடிக்காது?”

. “ஏன் நீ ரொம்ப அழகா தானே இருக்கே. ?”

“உன்னை நேசிப்பவர்கள் யாரவது இருந்தால், நீ அன்பை திருப்பிக் காண்பிக்க முடியுமா?”

நான் அப்படியொரு கேள்விக் கேட்டதும்

“இல்லை ம்ம்ம்ம் எனக்குப் பயமா இருக்கு” இந்தக் குண்டு உடம்பை யாருக்கு பிடிக்கும்?

“இவளின் உள் மனதில் உள்ள அழியாத பயத்தை எப்படிப் போக்கு வது?”.

என் கைகளை, என் இருதயமருகில் கொண்டு போயி, அந்தக் கைகளை எடுத்து, சிம்பாலிக்கா’ என்அன்பை காண்பித்து, சைகைமூலம்உணர்த்தி, ஸீ மை டார்லிங் திவ்யா ; “ஐ லவ் யூ”. “நான் உன்னிடம் ஷேர் பண்ண நினைக்கிறேன்.”

நான் செய்த, சைகையை, பார்த்த திவ்யா என்னை, சந்தேகக் கண்ணோட் டத் துடன் பார்த்தாலும். ,

திரும்பத் திரும்ப நான், “டேக் இட் திவ்யா ; ஐ லவ் யூ.”என்று சொன்ன போது, அவள் என்னைத் தயக்கம் கொண்டு பார்த்தாள்.

“கம் ஆன் திவ்யா இட்ஸ் ஏ கிப்ட் டு யூ டேக் இட்.”. மீண்டும். மீண்டும் நான் சொல்ல விசும்பலும் அழுகையும் தான் அவளிடம் காணப்பட்டது.

சிறிது நேரம் மௌனத் துக்குப் பிறகு,

“டாக்டர் ! இப்போ தான் என்னையும், லவ்பண்றேன்னு, சொல்ற ஆளை, முதல் முதலாக ஓங்களைப் பார்க்கிறேன்.”

ஸ்கூல் படிப்பு முடிக்கற வரைக்கும், எனக்குக் காலையில் பிரேக் பாஸ்ட், லஞ்சோ கிடைக்காது; கேட்டால் இவ்வளவு குண்டா இருக்கே இன்னும் வெயிட் போடும் டயட்டில் இரு என்று சொல்வார்கள்”.

அவர்கள் நிராகரித்து உன்னைத் தூக்கி எறிந்தாலும் கவலைப்படாதே!!!! கடவுள் உன்னைத் தாங்கி பிடிக்க ஒருவரை அனுப்பி வைப்பார். ”

“திவ்யா யூ வில் பி ஆல் ரைட் சூன்.” எனக்கு அந்த நம்பிக்கை பிரகாசமா தெரியுது ”

“டோன்ட் ஒர்ரி” ஒன்னு செய்யேன்”.

“உங்க அம்மா, அப்பா இரண்டு பேரரையும் இங்கே அழைச்சிட்டு வர முடியுமா? நான் பேசணும்”.

”ம்ம்ம்ம் முடியுமான்னு தெரியல டாக்டர்.

ஓகே ஓகே. நீ அட்ரஸ் கொடு. ”

அட்ரஸ் வாங்கிக் கொண்ட பிறகு “ஓகே திவ்யா நீ ஹாஸ்டல் போய் நிம்மதியா இரு.. நாளை மறுதினம் என்னை வந்து பாரு!”பி சியர்புல் ஓகே “ஆல் தி பெஸ்ட்.”.

இரண்டு நாள் கழித்து, திவ்யாவின் அப்பா சந்திரன், அம்மா மலர் கிளினிக் வரவழைக்கப்பட்டார்கள்.

திவ்யாவின்இப்படிப்பட்டநிலைமைக்குதாங்கள்தான்காரணம்என்பதை, அவர்கள்உணர்ந்துகொண்டதாகவோ, வருத்தப்பட்டதாகவோதெரியலை.

”பர்சனல் ஹிஸ்டரியை கேட்ட போது, சந்திரன் ஒரு கம்பெனி யில் கிளார்க். மலர் வேறு ஒருகம்பெனியில் கிளார்க்.. நல்ல வேலை. போதுமான சம்பளம். அழகான பெண் குழந்தை. பின்னே என்ன பிரச்சனை. ?

திவ்யா வளர, வளர, சந்திரனுக்குக் குடி பழக்கம் வளர ஆரம்பித்து உள்ளது. மலரை போட்டு அடிப்பது. இவன் அடி தாங்காமல், வெறுத்து மலர் ஆபீஸ்ல, இன்னொரு ஆளுடன்,

நெருங்கிய உறவை தேடி கொண்டு உள்ளாள்.

திவ்யா, அழகு தேவதையிடம் அன்பு பாசம், நேசம், பரிவு கவனிப்பு காட்ட வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல், குண்டு என்று உருவ கேலி வேறு

தங்களுக்குள், பிரிந்து வாழ முடிவு செய்து, டிவோர்ஸ் ரிசல்ட்க்காக காத்து இருப்பதும், தெரிய வந்தது.

“ஆமாம் !திவ்யாவின் படிப்பு, ஹாஸ்டல் செலவுக்குப் பணம்?””

“அவ ரோசக்காரி;. எங்க இரண்டு பேர்பணம் வேண்டாம்;பார்ட்டைம் ஒர்க் பண்ணி, தானே தன் செலவினை சமாளிச்சுகிறான்னு அவ பிரண்ட் மூலம் தெரிஞ்சுகிட்டோம்.”

“இப்படிச் சொல்ல உங்களுக்கு வெக்கமா இல்லை?” நான் கொஞ்சம் பேச்சில் கடுமை காட்டினேன்.

”தாய் அன்பு, அரிச்சுவடி. ;தந்தைஅன்புவழிகாட்டி;. இரண்டும்உங்களிடம்இல்லை. ;

ஒங்களுக்குத் தெரியுமா?பெற்றோர் வளர்ப்பு முறை நான்கு வகைபடும்.

முதலாவது சர்வாதிகார பெற்றோர் ;

இரண்டாவதுஅதிகார பெற்றோர் ;

மூன்றாவது அனுமதி அளிக்கும் பெற்றோர்; :

நான்காவதுசம்பந்த படாத பெற்றோர்;

இதில் நீங்கள் கடைசி ரகத்தைச் சேர்ந்தவர்கள்.

திவ்யா அன்பின்றி, தன்னம்பிக்கை இல்லாமல்மன வேறுபாடு, மனநெருக்கடி, சோகம் பயம், தன்னைப் பெற்றோர்கள் கவனிக்கவில்லைஅவர்களேஏளனப்படுத்துகிறார்கள், என்கிற ஏக்கம். பாசம் காட்டாத உங்க சுய நலம், அத்துடன்”பாடி ஷாமிங் காரணமாகத் தற்கொலை முயற்சி வேறு.

உடல் ஷேமிங்கின் காரணமாக எதிர்மறையான உணர்ச்சிகரமான விளைவுகளை ஏற்படுத்திருக்கு;,

“இதில் சுயமரியாதை குறைதல்; மற்றும்▯▯, உண்ணும்கோளாறுகள்;, பதட்டம், உடல்மனச்சோர்வு இதன் விளைவுகள் மோசமடைய வைச்சிருக்கு.”

“குறிப்பாகத் தங்கள் உடல், சமூக அளவுகோல்களைச் சந்திக்க முடியாது என்று நினைக்கும் போது. தற்கொலைக்கு முயற்சிக்கிறார்கள்”

நல்ல வேளை, என் ஜூனியர் டாக்டர் காப்பாத்தி, இங்கே கொண்டு வந்து விட்டுட்டு போனார்;. ! இப்போஅவளை நீங்க உயிரோடு பார்க்கறிங்க!;இது உங்களுக்குத் தெரியுமா?”

சில பெண்களுக்குத் தைராய்டு ஹார்மோன், ரொம்பக் குறைவாகச் சுரப்பதால் வரும் ஹைப்போ தைராய்டு பிரச்னைகூட உடல்பருமனுக்குக் காரணமாகலாம்".

பெண்கள் ஒல்லியாக இருக்கிறீர்களா, ! குண்டாக இருக்கிறீர்களா! என்பது முக்கியம் இல்லை. நீங்கள் ஆரோக்கியத்துடன் இருப்பதுதான் அவசியம்.

உடல்பருமன் என்பது குறையல்ல.. "

"பொதுவாகப் பெண்கள் ஆண்களைவிட உயரம் குறைவாக இருப்பதால பெண்களுடைய BMI (Body Mass Index) அதிகம் இருக்கும். இருந்தால் அவர்கள் குண்டானவர்கள். அதுவே 27-30 இருந்தால் ஆபத்தானது."

சந்தோஷமே வாழ்க்கையாக வேண்டுமென நினைத்தால், உங்களை உண்மையாகநேசிக்கும் ;திவ்யாவை நேசியுங்கள். "

கண் கலங்கிக்கொண்டே, ""டாக்டர் இவ்வளவு நாள், எங்க அறியாமை, மற்றும் ஈகோ வினால் எங்களை அழித்துக் கொண்டதுமட்டும்இல்லாமல், திவ்யாவாழ்க்கையிலும், அன்பு பாசம் கவனிப்பு முக்கியமா கேலி பண்ணியது தவறு என்று புரிந்து கொண்டோம்; வாழ்க்கையின் அர்த்தம் தெரியாம இருந்து விட்டோம்"'.

"இனி திவ்யாதான் எங்களுக்கு எல்லாமே!பிராமிஸ் டாக்டர்"

"எங்களை மன்னிச்சுடுங்க டாக்டர்."

"ஹாய் திவ்யா ! ஒங்க அப்பா அம்மா கிட்ட நடந்த கவுன்சிலிங்க் சக்ஸஸ் ஆயிடுச்சு!"

"நீ ஒளி தரும் தீபம் பிரகாசம் அளிக்கக் கூடியவள். அவர்களுக்கு இனி நீதான் ஆத்மா உயிர் என்பது அவங்களுக்குப் புரிஞ்சிக்க இவ்வளவு நாள் ஆகிருக்கு.." சொல்லிகொண்டே,

"நான் என் கையை அவள் கன்னம் அருகில் கொண்டு போய், செல்லம்மாகத் தட்ட, இப்போ சொல்லு, நீ உஷ்ணத் தின் தன்மையை உணர முடியுதா சொல்லு ?"

"ஐ லவ் மை செல்ப்ன்னு சொல்ல முடியுதா?"

"என்னால் சொல்ல முடியல டாக்டர்"

"நோ நீ சொல்லி தான் ஆகணும்.."

நான் கொஞ்சம் வேகமா அதட்டிய குரலில் சொல்லவே,

"ம்ம்ம்ம் எஸ் ஐ பீல்"டாக்டர்"

"வேகமா சொல்லு."

"ஐ லவ் மை செல்ப்"

"இன்னும் வேகமா சொல்லு"

"ஐ லவ் மைசெல்ப்"

“குட்.” வெரி குட்“இந்த நிமிசத்துல ஒனக்கு ஒளி புள்ளி வர ஆரம்பித்து, உற் சாகம் மற்றும் உனக்குள்ளஒருபரவசநிலை வர ஆரம்பித்து விட்டது.”உன்கிட்ட இருக்கும் இந்த

உற்சாகம் தீ மாதிரி, இந்த ரூம் முழுவதும் பரவின மாதிரி இருக்கா? ”

“எஸ் டாக்டர். நான் உ ற் சாகமான பொண்ணுன்னு ; இந்த ரூம் முழுவதும் கேட்குது..”

என் கிட்ட இருந்த அபத்தங்கள் எல்லாம் காணாமல் போய் விட்டது. ”

என் தெரபி ட்ரீட்மென்ட் சக்சஸ்.

திவ்யா முத்து பற்கள்தெரிய சிரிக்க ஆரம்பித்தாள்

“எப்ப நீ உன்னை நம்ப ஆரம்பித்து விட்டியோ, அப்பவே உன் கான்பிடன்ஸ் வர ஆரம்பித்து விட்டது.”

“ரொம்பத் தேங்க்ஸ் டாக்டர்.”

”இத பாருங்க ! திவ்யாவை கூட்டிகிட்டு, ஹில்ஸ் ஸ்டேஷன் போங்க!

இன்னும் பிரெஷ் ஆகப் பீல் பண்ணுவா. ”நான் சொன்னதை மறந்துடாதீங்க. அன்பு ஒன்று தான் அவளைக் குணப்படுத்தும்

“ஆல் த பெஸ்ட்திவ்யா”

சந்திரனும் மலரும் நன்றி சொல்லிவிட்டு கிளம்பி போயிருந்தார்கள்

கிளம்பும் முன் திவ்யா ஒரு நிமிடம் அவள் காதில் ஒரு செய்தி சொன்னதும்

ஓகே டாக்டர் என்று சொல்லிவிட்டு கிளம்பி போயிருந்தாள்.

நானும் அவளை மறந்து போயிருந்தேன்.

ஆறு மாதம் கழித்து ஒரு நாள், “மே ஐ கம் இன் டாக்டர்”.

“திவ்யாவும் ஒரு வாலிபனும் உள்ளே நுழைந்தார்கள்... அவர்களைத் தொடர்ந்து மலரும் சந்திரனும்”

“ஹௌ பியூட்டி யூ நௌ.” யூ லுக் வெரி ஸ்மார்ட். ”கன்னத்தில் உடம்பில் செழுமை. முகத்தில் மலர்ச்சி அதோடு தன்னம்பிக்கை யும் தெரிந்தது.

“டாக்டர் ! ஒங்க புண்ணியத்துல நான் அப்பா அம்மா பரிவு, அன்புடன், நல்லா இருக்கேன்.”

“அன்னிக்கு,”இத பாரு திவ்யா, “வாழ்க்கையில் வெற்றி பெற”தகுதி” வேணும்ன்னு எல்லோரும் சொல்வங்கா. ; அந்தத் தகுதி வாரத்தைக்கு அர்த்தம் என்னன்னு தெரியுமா?ன்னு எனக்கு விளக்கம் சொன்னீங்க!*

தன்னம்பிக்கை, குறிக்கோள், திட்டமிடல். இந்த மூன்றையும் சரியா செய்தால், தகுதி தானாகவே கிடைக்கும்ன்னு சொன்னிங்க. ””நான் ஒங்க அறிவுரை படி நடந்தேன். இப்போ ஜெயிச்சுட்டேன். டாக்டர்”.

அன்னிக்கு, எனக்குப் பிடித்த கோயில் சன்னதியில் அடிப்ரதட்சனம் பற்றிச் சொல்லிதினமும் காலை மாலை ஒரு மணி நேரம் அடிப்ரதசனம் செய்யச் சொன்னீர்கள். ”

“இதில் ஆன்மீகம் மட்டுமல்ல, அறிவியலும் கலந்து இருக்கு. !!”

”ஒவ்வொரு அடியா வைக்கும் போது, நம்முடைய கால்களில் நடுபாகமும், குதிகாலும், நன்றாகத் தரையில் அழுத்த அழுத்த, காலில் உள்ள உணர்வு புள்ளிகள் தூண்டப்பட்டு, உடல் எங்கும், இரத்த ஓட்டம் சீராகும். புத்துணர்ச்சி ஏற்பட்டு, எடை குறைந்து மெலிதான தேகம் பெறமுடியும் என்ற செய்தி தான் அது…

நீங்க சொன்னதை முழு ஈடுபாட்டுடன் செய்தேன். , ”

“எஸ் எஸ்” அன்னிக்கு ஓங்கிட்ட சொன்னது இப்போ ஞாபகம் வருது”

“அன்னிக்கு இன்னொரு வார்த்தையும் சொன்னீங்க!”

. “உன்னைத் தாங்கி பிடிக்கக் கடவுள் ஒருவரை அனுப்புவார்ன்னு சொன்னீங்க. ;”அதுவும் பலித்து விட்டது.

“இவர் சந்தோஷ். என்னை நேசிக்கும் மனிதர். கூடிய சீக்கிரம் கல்யாணம் ஒங்க தலைமையில்!”திவ்யா கண்களிலிருந்து ஆனந்த கண்ணீர்;. கூட வந்த மலர் சந்திரனுக்கும் அப்படித்தான் இருந்தது.

அன்பு எல்லாவற்றையும் வெல்லும். என்று சும்மாவா சொன்னார்கள்!!.

**- முதலெழுத்து ஆகஸ்ட் 2023**

# 13. விபரீத விளையாட்டு

அஞ்சல் கோட்ட கண்காணிப்பாளராக, அந்த தலைமை அலுவலகத்திற்கு இன்ஃபெக்ஷன் செய்ய வந்த வாசு, ஒவ்வொரு பிராஞ்ச் விசிட் முடித்த பின்பு தந்தி பிராஞ்ச் ரூமுக்கு நுழைந்த போது கொஞ்சம் கண் கலங்கியது. அங்கிருந்த

டெய்லி ஷீட் காலண்டர் ஏப்ரல் 1 ம் தேதியை காட்டியது. அதை பார்த்ததும் இன்னும் வாசுவின் மனசு என்னவோ கணத்தது

இப்போது தந்தி பிராஞ்ச் நடைமுறையில் இல்லை. அந்த இடம் ரெக்ரியேஷன் கிளப் ஆக மாறியிருந்தது.

35வருடங்கள் முன்பு இந்த ஆபிஸில் தந்தி கிளர்க்காக வேலை பார்த்த போது, ஒரு சோக சம்பவத்தை கொண்டு வரும்என்றோ, அதனால்

அவன், இந்த ஊரை விட்டு, மாற்றல் வாங்கி, வேறு ஊருக்கு போவான் என்று நினைக்கவில்லை.

அவன் நினைவுகள் பின் நோக்கி சென்றது.

சீர்காழிபோஸ்ட் ஆபீஸ் க்கு டிரான்ஸ்ஃபர் வந்த ஆர்டர் கண்டு சந்தோசமானன் வாசு.

மேற்கே தாடாள பெருமாள் சன்னதி, கிழக்கே சிவன் கோயில். ஞானசம்பந்தர் வாழ்ந்த இரட்டைத் தெரு முலைப்பால் உற்சவம் இதெல்லாம் பார்க்க ஒரு நல்ல வாய்ப்பு.

சென்னை மூக்கர் நல்ல முத்து தெருவில் தந்தி டிரெய்னிங் 6 மாசம். பக்கத்தில் உள்ள மேர்தேகா லாட்ஜ்ல் ரூம் வாசம்.

வாசுவை பொறுத்து அந்த ஆறு மாசம் தான் அவன் வாழ்க்கையில் மிக மிக சந்தோச நிலையை அடைந்தான் என சொல்லவேண்டும்.

சென்னை டிரெய்னிங் என்பதால் டிபுட்டேஷன் கணக்கு. சென்னை டி ஏ, ஹெச் ஆர் ஏ , சி சி ஏ என கூடுதல் சம்பளம். கிடைத்தது

அப்பாவுக்கு எப்போதும் அனுப்பும் பணத்தை விட அதிகமாகவே அனுப்பினான்.

ஒரு வாரம் காலை 7 மணி முதல் மதியம் 2 மணி வரை. டூட்டி அந்த வாரம்

டூட்டி முடிந்து பின் சாப்பிட்டு விட்டு நல்ல தூக்கம். 5 மணிகங்கு எழுந்து ஒரு குளியல். லைட் டிபன். பின் ஏதாவது ஒரு சபாவில் நாடகம்.

அடுத்த வாரம் 2 மணி டூட்டி இரவு 9 மணி வரை.

வெளியில் வந்ததும் டிபன் சாப்பிட்டுவிட்டு ஏதாவது ஒரு சினிமா.

இப்படி ஜாலியாக தான் போனது.

ஞாயிறு அன்று பஸ் பாஸ் எடுத்துகொண்டு ஒரு வாரம் நங்கநல்லூர், ஒரு வாரம் திருவான்மியூர், ஒரு வாரம் அயன்புரம். கட்டாயம் போகவேண்டும்

அவன் திருமருகலில் கிளார்க் ஆக வேலை பார்த்து, தங்கியிருந்த போது அந்த ஹவுஸ் ஓனரின் கட்டளை. அது. தன்பிள்ளைகள் வீட்டுக்கு வார வாரம் ஞாயிறு அன்று போக வேண்டும்.

ஒரு வாரம் வாசு போகவில்லை என்றால், இங்கு இருப்பவர், ஊரில் உள்ள அவருக்கு இண்டிமேட் செய்துடுவார்.

இரண்டொரு நாளில் ஹவுஸ் ஓனர் மூலம் ஏன் போகவில்லை உடம்பு ஏதும் சரியில்லையா ?என்று கேட்டு வாசுவுக்கு விளக்க கடிதம் வரும்.

அந்த அளவு அவனை நேசித்த வர்கள். வாசுவின் ஹவுஸ் ஓனர். பாக்கியம் ராமசாமியின் அப்புசாமி சீதாபாட்டி ரெப்ளிகா.

ஒரு வழியாக தந்தி டிரெய்னிங் முடிந்து, தஞ்சாவூர் பிராக்டிகல் டிரெய்னிங் 3 மாதம் முடித்த பின்,

இதோ சீர்காழியில் போஸ்டிங். பெரிய ஆபீஸ். போஸ்ட்மாஸ்டர்ஜ பார்க்க, கொஞ்சம் பயமாக தான் இருந்தது. கொஞ்சம் பெருத்த உருவம். பெரிய மீசை.

வாசுவுக்கு

ஜாயின் பண்ணிய அன்றே தந்தி பிராஞ்ச்.

என்னதான், பிராக்டிகல் டிரெய்னிங் முடித்து இருந்தாலும், முதல் முதலில் தந்தி வாங்க அவன் கைகள் என்னவோ நடுங்கியது.

போதாத குறைக்கு தந்தி பிராஞ்ச் மட்டும், ரோடு ஓரம் முகப்பில் இருந்ததால், பஸ் சத்தம், மற்ற இரைச்சலில் மோர்ஸ் ஒலிகளை கவனித்து, தந்தி வாங்குவது சிரமமாக தான் இருந்தது.

ஆனால் கூடவே இருந்த கணேசன் சார் ஊக்க மூட் டினார்.

“பயப்படாதே போக போக சரியாயிடும்”

”ஆமா எங்கே தங்க போறே ?

நீ லாட்ஜ் எடுத்து தங்க வேண்டாம். நீ இரட்டை தெரு போ. என் நண்பர் நாராயணசாமி பேங்க் கேஷியர் ரிடயர்டு ஹெல்ப் பண்ணுவார். அவர் கிட்ட ரூம் இருக்கு அட்ரஸ் 34 இரட்டை தெரு.

ரொம்ப தேங்க்ஸ் சார்!”

போஸ்டாஃபீஸ் பக்கமே அந்த தெரு. சுமார் அரை கிலோமீட்டர் தான் இருந்தது

மாலை 6 மணி. டூ ட்டி முடிந்து, வாசு அந்த வீட்டின் காலிங் பெல் அழுத்திய பொது ராஜம் மாமி கதவை திறந்தாள்

“யாரப்பா என்ன வேணும்?”

அதற்குள் நாராயணசாமி கொல்லை புறத்திருந்து வந்தவர்.

“நம்ம கணேசன் போன் பண்ணி, இந்த பையனை பத்தி சொன்னான்”

“வாப்பா உக்காரு”.

வாசுதன்னை பற்றி சொன்ன செய்திகள் கேட்டு கொண்ட ராஜம், அசப்பில் நம்ம சங்கர் மாதிரி இருக்கான்.

நமக்கும் துணையாக இருக்கட்டும். என்று பச்சை கொடி காட்டியது நாராயணசாமிக்கு சாதகமாக போனது.

“இந்த முதல் ரூம்ல தங்கிக்கோ. இரண்டு மாதத்துக்கு ஒரு முறை பத்தாயம் மூலம் நெல் அரவைக்கு எடுப்போம்.. அப்ப சிரமமாக இருக்கும் ஓகேவா”

“பரவாயில்லை நான் அட்ஜஸ்ட் செய்துக்கிறேன் சார்.”

நாளடைவில் அவர்கள் குடும்பத்தில் மட்டுமல்ல பக்கத்து வீட் டு நபர்கள்கூட நட்பு ரீதியான முறையில் பழக ஆரம்பித்தார்கள்.

குறிப்பாக சொல்லவேண்டுமென்றால் ராஜி அக்கா. நட்பு ராஜி அக்காவுக்கு 21 வயது. எனக்கும் 20 வயது.

இரண்டு வருடம் முன்பு கல்யாணம் ஆனவர். கணவர் மஸ்கேட் டில் வேலை. வரும் அக்டோபரில் தான் பார்த்த கம்பெனி பெங்களூருக்கே வர இருப்பதாகவும் அப்போது அழைத்து போக இருப்பதால் இங்கே அம்மா அப்பாவுடன்.. இரண்டு தங்கை தம்பி. அப்பா புரோகிதம் சாப்பட்டுக்கு கஷ் டமில்லை.

ராஜி அக்கா எப்போதும் சிரித்த முகம். கியூட். நெளி நெளியான நீண்ட கூந்தல்

அசப்பில் அபூர்வ ராகங்கள் ஸ்ரீவித்யா மாதிரி.

அறிவாளி எந்த பிரச்சினை வந்தாலும் சமாளிக்கும் திறமை. மொத்தத்தில் பாரதி கண்ட புதுமைப்பெண்.

ஒரு நாள் கணேசன் சாருடன் டீ குடித்து கொண்டிருந்த போது.

” என்ன வாசு ?ரூம் சௌகரியமாக இருக்கா?”

”அப்புறம் ஒன்னு சொல்ல மறந்துட்டேன்

ஒனக்கு சனிக்கிழமை இரவு தந்தி டூட்டி வரும். ஸ்கிப் பண்ணி, ஊருக்கு போறேன்னு போகாதே. சனி இரவு நல்ல லேட் பீ (அதாவது ஒரு தந்தி புக் செய்தால் எக்ஸ்டிரா பணம் வசூலிக்க படும். அது மாத கடைசியில் பில் தயார் செய்யப்பட்டு மேலிடத்துக்கு அனுப்பி பில் சாங்சன் ஆகி வரும். அது ஒரு எக்ஸ்ட்ரா வருமானம். ).

"போஸ்ட்மாஸ்டர் உனக்கு அடுத்த டர்ன். உன்னை சீக்கிரமே சனி மாலை ஊருக்கு போகலையா? ன்னு கேட்பார்.

அவர் ஒனக்கு நன்மை செய்யறதா நினைச்சு 4 மணிக்கே ஒன்னை கிளப்பி விடுவார். " அவருக்கு ஞாயிறு இரவு டர்ன். நீ ஊருக்கு சனி இரவு போனால் சனி ஞாயிறு எல். எப் நிறைய கிடைக்கும்

" ஆர்வ கோளாறில் நீயும் போயீடுவே. போகாதே

ஜாக்கிரதை. " எச்சரித்தார்

அந்த வாரமே, கணேசன் சார் சொன்ன மாதிரியே, போஸ்ட்மாஸ்டர், வாசு அருகில் வந்து அவனிடம் மிகவும் அன்பாக ஊர் கிளம்பலே வாசு !என்று தேன் ஒழுக பேசியுள்ளார்.

கணேசன் சார் சொன்னது ஞாபகம் வந்தது.

அடுத்த வாரம் போறேன் சார் என்று பதில் கூறியிருந்தான். வாசு

இப்படி ராஜி அக்கா, மாமா மாமி, கணேசன் சார் எல்லோரும் வாசுவிடம் அப்படி அன்பு செலு த்தியதில், அவன் சொந்த ஊருக்கு போவதையே படி படியா குறைத்து கொண்டான்.

அன்று ஞாயிறு மாலை 4மணி அளவில் எல்லோரும் ராஜம் மாமி செய்த பஜ்ஜி யை சுவைத்துகொண்டே இருந்தபோது, நாராயணசாமி பேச்சை ஆரம்பித்தார் நாளை ஏப்ரல் முதல் தேதி. மதியம் 3 மணிக்குள் யார் ஏப்ரல் ஃபூல் ஆகி தோத்து

போறாங்களோ, அவங்க எல்லோரையும் சினிமாவுக்கு அழைச்சுட்டு போகனும்

டீல் ஓக்கேவா. இதுஒரு வேடிக்கை விளையாட்டு.

"என்ன சின்ன பசங்க விளையாட்டு? நீங்களும் அவங்கள்ளோட் சேர்ந்துகிட்டு !துளி கூட நல்லாயில்லை".

மாமி இது சும்மா விளையாட்டுக்கு தான் ராஜி தான் பரிந்து பேசினாள்

வாசுவுககு, மறுநாள் காலை 7 மணி டூட்டி. கிளம்பும் போதே ராஜியும், நானா மாமாவும் அவனை ஏப்ரல் ஃபூல் ஆக நினைத்து தாங்கள் தோத்து போனார்கள்.

வேலை நேரத்தில் ஏகபட்ட தந்திகள்.

சரியா 2. 30 மணிக்கு தான் வாசுக்கு மற்ற மூவரையும் இந்த விளையாட்டுக்கு உட்படுத்தவில்லை. என்ற ஞாபகம் வந்தது.

3மணிக்குள் கட் ஆஃப் டைம் ன்னு வேற

சொல்லியிருக்கார்.

முதலில் ராஜி அக்காவை ஏப்ரல் ஃபூல் பண்ணுவோம். பின் மாமா மாமியை பார்த்துக்கலாம்.

உடனே அதே செயல் படுத்தினான்.

இளம் கன்று பயமறியாது

தான் என்ன செய்ய போகிறோம் அதன் பின் விளைவு இதையெல்லாம் யோசிக்க நேரம் இல்லை அவனுக்கு.

டூட்டி முடிந்து ரூமுக்கு வந்த போது, தந்தி பியூன் தந்தியை, கொடுத்ததும் ராஜி அழ ஆரம்பித்தாள்.

பெங்களூருக்கு ஆபீஸ் விசயமா வந்த அவள் கணவன் மாரடைப்பில் மரணம் என்று ” இருந்தது.

அப்பா அம்மா வெளியூர் இருந்ததால், தகவல் சொல்ல முடிய வில்லை.

ஒரே அழுகை. மாமா மாமி அவளை சமாதான படுத்தினார்கள்.

கொஞ்ச நேரம் கழித்து

ரிலாக்ஸ் ராஜி அக்கா! ஓங்க வீட் டுகரருக்குஒன்னும் ஆகலை. !!

“நான் தான் ஒரு பொய்யான தந்தி எழுதி பியுன் மூலம் கொடுத்துவிட்டேன்”

“நீ ஏப்ரல் ஃபூல் ஆயிட்டே”.

எங்கிருந்து ராஜம் மாமிக்கு கோபம் வந்த்துண்ணு தெரியல

வாசுவையும் வீட் டுகாரரையும் சகட்டு மேனிக்கு திட்டி தீர்த்து விட்டாள்.

”நேத்திக்கே சொன்னேன்

கேட்டிங்களா. ?

எது விளையாட்டு? இப்படி ஒரு அஞ்சு நிமிசத்தில எல்லோரையும் கண் கலங்க வெச்சுட்ட. ”

”மாமி தெரியமா தப்பு பண்ணிட்டேன்.

என்னை மன்னிச்சிட்டேன்னு சொல்லுங்க” காலில் விழுந்தான் வாசு

விளையாட்டுக்காக கூட யாருக்கும் தீங்கு நினைக்காதே ஏன் என்றால் விளையாட்டுக்கு ன்னு விஷம் சாப்பிட முடியுமா? அப்படின்னு காந்திஜி சொல்லியிருக்கார்.

“அரசாங்க வேலையில் இருக்கே இப்படி பொறுப்பு இல்லாமல் இருக்கே”. ?

இப்பவும் ராஜி அக்கா தான் என் சப்போர்ட்க்கு வந்தாள்

“விடுங்க மாமி ஏதோ விளையாட்டு தனமா செஞ்சுட்டான். நெருப்புண்ணு சொன்னா வாய் வெந்திடுமா என்ன?”

வழக்கமான புன்சிரிப்புடன் தன் வீட்டுக்கு கிளம்பி போயிருந்தாள்.

வாசு. மனது அழுது கொண்டே இருந்தது ராஜி அக்கா மனதை புன் படுத்தி விட்டதாகவே புலம்பி கொண்டுரு ந்தான்.

அவ்வளவு சீக்கரத்தில் அவனால் ஜீரணிக்க முடியவில்லை.

ராஜம் மாமி சொன்ன மாதிரி இந்த செயலை மேல் அதிகாரிக்கு, தெரிய படுத்தினால், தன் வேலையே போயிடும்.

கணேசன் சார் தன்னை எவ்வளவு கேவலமாக நினைப்பார். மூஞ்சியில் காரி துப்புவார்.

அந்த வாரம் முழுவதும் கலகலப்பாக இருந்த வீடு அதை இழந்து இருந்தது.

மறு ஞாயிறு மாலை 6 மணிக்கு லைப்ரரிக்கு கிளம்பிய நேரம் , தந்தி பியுன் எதிர் பட்டான்.

“சார் ராஜலக்ஷ்மி வீடு எது சார். ?”

“மொட்டையா ராஜலக்ஷ்மி இரட்டை தெரு என்று வீட்டு இலக்கம் இல்லாமல் வந்துருக்கு சார்”.

வாசு ராஜி வீட்டை காண்பித்து லப்ரரி போகாமல் வீட்டுக்குள் நுழைந்தான்.

ராஜி அக்கா ராஜம் மாமி வீட்டில் இருந்தாள்.

தந்தி வாசகம் இப்ப நிஜமாகவே

ராஜி மயக்கமானாள் ஒரு நாள் வேலையாக பெங்களூரு வந்தவன். மாரடைப்பில் மரணம் என்று இருந்தது.

நான் என்ன வாசகம் எழுதி அன்றைக்கு அனுப்பியது மாதிரியே இருக்கவே என் உடல் நடுங்கியது.

என்கரி நாக்கு பலித்து விட்டதே!!

நான் செய்த விளையாட்டு தவறினால் அவர்களுக்கு ஏற்பட்ட துயரம். நான் தான் முழு பொறுப்பு. விளையாட்டு இப்போ வினை ஆகி விட்டதே. புலம்பினான் வாசு.

எது சரி தவறு என்று தீர்மானித்து செயல் பட தைரியம் இல்லாமல் போய் விட்டதே.

To see what is right and not to do it is want of courage.

வாசுவுக்கு இருக்க பிடிக்காமல், மறு வாரமே வேறு ஊருக்கு டிரான்ஸ்ஃபர் வாங்கி கொண்டான்.

இந்நாள் வரை எந்த தொடர்பும் வைத்து கொள்ள முடியாத அளவுக்கு சூழ்நிலை கைதியாகி விட்டான்

“சார்! இரட்டைதெரு 34 ம் நம்பர் வீட்டில் நீங்க சொன்ன நபர் இருக்காங்களாம்.”

போஸ்ட்மாஸ்டர், வாசுவிடம் வந்து சொன்னபோது தான், வாசு பழைய நிலைக்கு திரும்பினான்..

என் ராஜி அக்கா அங்கு இருப்பதே சந்தோசம் தான்

ஜீப்பில் போய் இறங்கியதும் அதே புன்னகை யுடன் வரவேற்ற ராஜி அக்காவை பார்த்தான்..

அவள் ஒரு தொடர்கதை சுஜாதா மாதிரி ராஜி அக்கா வாழ்க்கை ஓட்டம் இருந்துள்ளது என்று கேள்விப்பட்டேன்.

பழங்களை கொடுத்தேன்

“நீ கல்யாணம் செஞ்சுகிட்டாயா? மனைவி எந்த ஊர். ?குழந்தைகள் எவ்வளவு ?”

கேள்வி மேல் கேள்வி 35 வருடத்துக்கு முன்பு, எப்படி சுறு சுறுப்போ அதே மாதிரி இருந்தது.

இது பைத்தியக்கார தனமாக தோணும் ஆனால் அது தான் விதி

ஒனக்கு செஞ்ச விளையாட்டு வினை ஆனதால், நான் இன்னமும் அப்படியே தான் இருக்கேன்

ராஜி அக்கா

I am also sailing on the same boat.

**- மங்கையர் மலர் இதழ் பெப்ரவரி 2023**

# 14. நிறம் மாறும் நிஜம்

பாத்ரூமில் துணிகளைத் துவைத்து அதில் உள்ள அழுக்கையெல்லாம் அகற்றிக் கொண்டிருந்த வத்சலாவிற்கு தன்னுடைய மாமியார் பங்கஜம், டில்லியிலிருந்து வந்திருந்த உறவினரிடம் தன்னைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தது மனதை நெருடியது.

“ஏன் பங்கஜம், ஏதாவது பரிகாரம் செஞ்சு பாத்தியா..?” டில்லியிலிருந்து வந்திருந்த ராஜம் விடாமல் கேள்வி கேட்டுக் கொண்டிருக்க,

”இத பாரு ராஜம், நான் ஏறாத கோயிலா..? சேவிக்காத பெருமாளா..? என்ன பண்றது, பெருமாள் இன்னமும் கண்ணைத் திறக்க மாட்டேங்கிறார், உங்க குலதெய்வத்தை நீங்க கண்டுக்கலையின்னு ஒரு ஜோசியர் சொன்னான்னு நம்ம பூர்வீக கிராமத்துக்குப் போய் எல்லாம் செஞ்சுட்டு வந்தாச்சு, என்ன பிரயோஜனம், ஒரு புழு பூச்சி கூட வயத்திலே உண்டாகவில்லை வத்சலாவுக்கு. இன்னொரு ஜோசியர் சொன்னார்ன்னு பத்து ஏழைக் குழந்தைகளுக்கு அன்னதானமும் பண்ணியாச்சு. என் பையன் ஸ்ரீராம்கிட்ட வேறே சொல்லிட்டேன், கல்யாணமாகி ஆறு வருஷமாச்சு, எனக்கு உன்னோட குழந்தையைக் கொஞ்சணும்போல இருக்குடா, நல்ல டாக்டர்கிட்ட வத்சலாவை அழைச்சிட்டு போ காமின்னு, சொன்னா அவன் நான் சொல்றதை காதிலே போட்டுக்க மாட்டேங்கிறான், அவன் தான் அப்படின்னா

இவளாவது தன் உடம்பை டாக்டரிடம் காண்பிக்கணும், இவளும் மாட்டேங்குறா..” இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த வக்சலாவிற்கு ஆயிரம் தேள் கொட்டியது மாதிரி வலித்தது, ஆனாலும் இதெல்லாம் புதுசா என்ன, ஆத்துக்கு வர்ற எல்லார்கிட்டேயும் தன்னுடைய மாமியார் புலம்புவதை வழக்கம்போல் கேட்டு கேட்டு மனசு மரத்ததுப் போவதும் வாடிக்கையான ஒன்றாய் போய்விட்டது.

நேரே பூஜை அறைக்குப் போய் ஸ்ரீ ராஜகோபாலனிடம் “கோபாலா எனக்கு சொத்து சுகமெல்லாம் வேண்டாம், ஒரே ஒரு வாரிசு மட்டும் கொடுத்திடு” கண்ணீர் விட்டாள் வத்சலா.

பத்து நிமிடம் கழித்து சகஜ நிலைக்கு திரும்பிய வத்சலா, காபியைக் கலந்து மாமியாருக்கும், வந்திருந்த டில்லி மாமிக்கும் கொடுத்துவிட்டு, மாமனாருக்கு காபி கொடுக்க அவர் அறையை நோக்கி சென்றாள்.

ராமபத்ரன் தன் மனைவி வந்திருந்த உறவினரிடம் வத்சலாவைப் பற்றி குதர்க்கமாகச் சொல்லிக் கொண்டிருந்ததை பேப்பர் படித்துக் கொண்டே கவனிக்கத் தவறவில்லை.

என்ன மனுஷி இவள், வர்றவா யாரு..? எப்படின்னு தெரியாம எல்லார்கிட்டயும் மாட்டுப் பொண்ணைப் பத்தி புலம்பித் தீர்க்கிறாளே, ஆத்துக்கு வந்துள்ள மாட்டுப் பெண்ணின் மனசு என்ன பாடுபடும் என்பதை உணராமல் வாய்க்கு வந்தபடி பேசுறாளே.

பிறப்பால் தொடரும் உறவுகளல்லாமல் பிணைப்பால் தொடரும் உறவுகளே உன்னதமானவை என்று பெரியவர்கள் சொல்லி வைத்தது ஏன் இவளுக்கு புரிய மாட்டேங்கிறது.

வத்சலா கொண்டு வந்த காபியை ருசித்தவாறே, “இன்னிக்கு காபி ஏ ஒன் எப்படிம்மா இவ்வளவு சூப்பரா காபி போட கத்துண்ட..?” மாமனார் தன் சோகத்தை மாற்றுவதற்காக இப்படி ஐஸ் வைக்கிறார் என்பதை தெரிந்து கொண்ட வத்சலா புன்முறுவலை மட்டுமே பதிலாய் உதிர்த்தாள்.

“இத பாரு வத்சலா, உலகில் வகை வகையான மலர்கள் பூத்துக்குலுங்கும், உலகில் ஒவ்வொரு மலருக்கும் ஒவ்வொரு விதமான வாசம் உண்டு. ஆனால் மல நாற்றம் அடிக்கும் மலரைப் பற்றி உனக்கு தெரியுமா..?”

“என்னப்பா சொல்றேள்” ஆச்சர்யத்துடன் கேட்டாள் வத்சலா

“ஆமாம் அது ஒரு அபூர்வ மலர், பீநாறிச்சங்கு என்ற இந்த மலர்களின் செடிகள் கூட மல நாற்றத்தைப் பரப்பிக் கொண்டிருக்குமாம், அந்த இலைகளை அரைத்துக் குடித்தால் உடம்பில் எவ்வளவு சிரங்கு இருந்தாலும் சொஸ்தமாகி விடுமாம். இதை மோந்துப் பார்த்தால் மூன்று நாளைக்கு சாப்பாடு உள்ளே செல்லாதாம், இதுவும் இறைவனின் படைப்புதான். உன் மாமியாரும் அப்படிப்பட்டவள் தானம்மா, பாகற்காய் மாதிரி கசப்பாய் பேசுவாள் ஆனால் பாகற்காய் குணம் தான் உனக்குத் தெரியுமே, அது மாதிரி தான் இவளும், சுபாவத்தை மாற்ற முடியாது. எனக்குத் தெரியும் உன் மன வேதனை, நீ சொல்ல நினைப்பதெல்லாம் சொல்லாமல் போவதற்கு, உன் உள் மனதிலே இருக்கும் ஊமை புண் காரணம்ன்னு, எப்பெல்லாம் உன் மாமியார் உன்னைப் பத்தி சொல்றாளோ, அப்பெல்லாம் ராஜகோபாலன்கிட்ட சரண டைஞ்சுடு, அவன் உனக்கு நிச்சயம் நல்லது செய்வான். மாலை கோர்ப்பவர்கள் மலர்களை ஊசியினால் குத்தி கோர்க்கிறார்கள், அப்படி குத்தினாலும் மலர்கள் மலர்ந்தே இருப்பதைப் பார், அதுபோல் உன்னை யார் எவ்வளவு இம்சை செய்தாலும், மலர்ந்த முகத்துடன் இரு, நீ இந்த ஆத்துக்கு வந்ததிலிருந்து அப்படித்தான் இருக்கே, இருந்தாலும் உன்னைப் பார்க்கும் போதெல்லாம் நான் ஏன் சொல்றேன்னா உனக்கு மன உறுதி வரணும் அதுக்காகத்தான்.”

“தேங்க்ஸ் அப்பா, நீங்க மட்டும் இந்த ஆத்திலே அப்பப்ப ஆறுதல் சொல்லாம யிருந்தா, நான் எப்பவோ செத்துப் போயிருப்பேன்.”

“என்ன அசட்டுத்தனமா பேசுற, சரி சரி விடு போய் வேலையைப் பாரு” ராமபத்ரன் வத்சலாகிட்ட மட்டுமல்ல யாரிடமும் கனிவாய் பேசும் இயல்புடைய மனிதர், யார் மனதையும் புண்படுத்தக் கூடாது என்று நினைக்கிற உள்ளம், ஆனால் இவர் குணத்திற்கு எதிர்மறையாய் பங்கஜம், இதுவும் பெருமாளின் படைப்பு தானே.

சூரியன் மெதுவாக மறைந்து கொண்டிருந்த அந்த மாலை வேளையில் வாசலில் ஆட்டோ வந்து நிற்க வத்சலாவின் அம்மா கை நிறைய பொருட்களுடன் இறங்கினாள்.

“வாம்மா” அம்மாவைப் பார்த்ததும் வத்சலா கட்டிக்கொண்டு உள்ளே அழைத்துச் செல்ல எதிர்பட்ட ராமபத்திரன் “வாங்கோ சம்பந்தி வாங்கோ, ஊர்ல மாமா சௌகரியமாய் இருக்காரா..? பேசிண்டு இருங்கோ, கடை தெரு வரைக்கும் போயிட்டு வரேன்” என்று கூறியவறே பயணப்பட்டுக் கொண்டிருந்தார்.

வத்சலாவின் அம்மா வந்திருப்பதை நன்கு அறிந்தும், முகம் கொடுத்து அவளை வரவேற்காமல் வேண்டுமென்றே புறக்கடைப் பக்கம் சென்றாள் பங்கஜம்.

வத்சலாவின் அம்மா வலியப் போய் “என்ன மாமி சௌக்கியமாய் இருக்கேளா..? என்று விசாரிக்க,”ஏதோ இருக்கேன் பூமிக்கு பாரமா” வார்த்தையில் கனல் தெறித்தது.

வத்சலாவிற்கும் சரி, அவளுடைய அம்மாவிற்கும் சரி கொஞ்சம் கஷ்டமாய் இருந்தாலும், சம்பிரதாயத்திற்காக ஓரிரு வார்த்தைகள் பேசிவிட்டு தன் அம்மாவை ரூமிற்கு அழைத்துச் சென்றாள் வர்சலா. “வத்சலா, எங்கே மாப்பிள்ளையைக் காணோம்..?”

“சொல்ல மறந்துட்டேம்மா, அவர் ஆஃபீஸ் விஷயமாய் டில்லி வரை போயிருக்கார், வர்றதுக்கு பத்து நாள் ஆகும்”, வத்சலாவும் அவள் அம்மாவும் ஊர்க் கதைகள் பேசிவிட்டு இரவு சாப்பாட்டை முடித்துக் கொண்டு படுக்கச் சென்றார்கள்.

பங்கஜத்திற்கு மனக்கசப்பு அதிகரித்ததோடு மட்டுமல்லாமல் வத்சலா மீதும் அவள் அம்மா மீதும் கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. தூக்கம் வராமல் தவித்துக் கொண்டிருந்தாள். ஸ்ரீராமுக்கு ஒரு வாரிசு இல்லையே, இவனுக்கு மூத்தவன் ரகுவிற்கும், அடுத்தவன் ராமாநுஜத்திற்கும் ஆசைக்கென்றும் ஆஸ்திக் கொன்றும் டில்லியிலும், மும்பையிலும் இருக்கும் போது, கடைக்குட்டி ஸ்ரீ ராமுக்கு எதுவுமில்லையே என்கிற ஆதங்கம் மனதை நேருடிக் கொண்டிருந்தது. புரண்டு புரண்டு படுத்தாள். அஞ்சு ஆறு வருஷமாச்சு, தன் தம்பி பெண் சுகந்தியை பண்ணிக்காமல் வத்சலாவைத்தான் பண்ணிக்குவேன்னு ஆசைப்பட்டானே, ஆனால் ஒரு புழுப் பூச்சி கூட வத்சலா வயித்திலே வளரலையே. எப்படியும் இந்த தடவை ஸ்ரீராம் டில்லிலிருந்து வந்ததும் தீர்மானமா ஒரு முடிவு எடுத்துடணும், ஸ்ரீராம் கிட்ட சம்மதம் வாங்கி வத்சலாவை டைவர்ஸ் பண்ணச் சொல்லணும், அப்புறம் இவனுக்காக காத்திண்டு இருக்கிற சுகந்தியை கல்யாணம் பண்ணி வைச்சுடணும், இனிமே பொறுமையாக இருக்கக் கூடாது, என்று எண்ணிக் கொண்டிருந்தவளுக்கு விக்கல் எடுக்கவே தீர்த்த சொம்பைத் தேடினாள். ஆனால் தீர்த்த சொம்பு இருக்க வேண்டிய இடத்தில் இல்லை.

அங்கே அது இல்லாமல் போகவே, பங்கஜத்திற்கு வத்சலா மீது கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. “பொறந்தாத்து மனுஷா வந்தாச்சுன்னாலே தலைகால் புரியாதே மகாராணிக்கு, தீர்த்த சொம்பைக் கூட வைக்க முடியல” என வத்சலாவை அர்ச்சனை செய்து கொண்டே புலம்ப ஆரம்பித்தாள்.

“சரி விடு பங்கஜம், ஏதோ அம்மாவைப் பார்த்த சந்தோஷத்திலே மறந்து போயிருப்பா, நீ போய் தீர்த்தம் சாப்பிட்டுவிட்டு எனக்கும் கொண்டு வா” என்றார் ராமபத்ரன்.

“மாட்டுப்பொண்ணச் சொன்னா உங்களுக்கு ஆகாதே, சரி சரி நானே போய் சாப்பிட்டுக்கிறேன்” தளிகை அறையை நோக்கிச் சென்றவளுக்கு பக்கத்து ரூமிலிருந்து வத்சலாவும் அவள் அம்மாவும் பேசிக் கொண்டிருப்பதை காதைக் கூர்மையாக்கிக் கொண்டு கேட்க ஆரம்பித்தாள் பங்கஜம்.

ஏன் வத்சலா, நீயும் மாப்பிள்ளயும் டாக்டர்கிட்ட காண்பிச்சேளா..? ஆறு வருஷமாச்சு, குழந்தை இல்லைன்னா எல்லோருக்கும் மனசு கஷ்டமாத்தான் இருக்கும், உன் மாமியாருக்கும் அந்தக் கவலை தான், நியாயமான கவலை கூட, அக் கோபத்தின் வெளிப்பாடுதான், சாயந்திரம் என்கிட்ட உன் மாமியார் காண்பிச்சாளே, எனக்குத் தெரியாதா..?”

“அம்மா டாக்டர் கிட்ட போன மாசம் கூட போயிட்டு வந்தோம், என்கிட்ட எந்த குறையும் இல்லையாம், அவரோட உடம்பிலே சின்ன குறையாம், நாலு மாசத்துக்கு மருந்து சாப்பிட்டு வந்தா சரியா போய்டுமாம், பாவம் ஸ்ரீராம் டாக்டர் இப்படி சொன்னதும் குலுங்கி குலுங்கி அழ ஆரம்பிச்சுட்டார் உன் மாப்பிள்ளை. அவர் அம்மா கிட்ட எல்லாத்தையும் சொல்லிடுறேன்னு கிளம்பினார், நானும் என் மாமனாரும் அவரை சமாதானப்படுத்தி வைத்திருக்கோம், டாக்டர்கிட்ட போயிட்டு வந்தப்புறம் நான் மௌனமா இருக்கிறதாலே, மாமியார் என்னோட சரியாப் பேசறதில்லை, கோபப்படறது, வெடுக் வெடுக்கென்று பேசுறது, வாழ்க்கை எனக்கு ஒரே நரகம் தான், எல்லாத்தையும் என் மாமனாரோட நல்ல மனசுக்காகவும், ஸ்ரீராமுக்காகவும் பொறுத்துப் போ என்று இருக்கேன் அவ்வப்பொழுது மாமனார் கொடுக்கிற தன்னம்பிக்கை சிலந்தி வலை போல் பின்னப்பட்டு லௌகீக வாழ்க்கையில் துன்பங்களை எப்படி சமாளிப்பது எல்லாம் மாமனார் சொல்லிக் கொடுத்ததால் தான் இன்னமும் நம்பிக்கையோடு வாழ்ந்திண்டிருக்கேன்.”

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த பங்கஜம், நான் எவ்வளவு பெரிய தவறு செய்ய இருந்தேன், எவ்வளவு கொடூரமான வார்த்தைகளை கொட்டியிருந்தேன், உடனடியாக ரூமிற்கு திரும்பியவள் கணவரை பார்த்து “ஏன்னா எல்லாம் தெரிஞ்சும் என்கிட்ட எதுவும் சொல்லலை ..?” கோபமாய் கேட்க,

“பங்கஜம் கொஞ்சம் பொறுமையிரு, இப்பிறவியில் வரும் நல்லது தீயது அனைத்தையும் சமமாகப் பார்க்க பழகிக்கணும், உன்கிட்ட அந்த பக்குவமில்லை, எந்த ஒரு பக்தனும் அறிவாளியா..? இல்லையா என்று பார்த்து பெருமாள் அருள் பாலிப்பதில்லை, மனதில் உள்ள பக்தியும் நம்பிக்கையும் தான் பெருமாளிடம் நம்மைக் கொண்டு செல்லும் சாதனங்கள், பக்தி இல்லாத அறிவும், நம்பிக்கையற்ற பக்தியும் வேஸ்ட், நீ சொல்லிண்டு இருந்தாயே, எல்லா கோயிலுக்கும் செஞ்சாச்சு, குலதெய்வத்துக்கும் செஞ்சாச்சு, ஆனாலும் பலன் இல்லைன்னு எல்லார்கிட்டயும் புலம்பினே, அப்போதெல்லாம் பகவானிடம் சரண் அடைந்து பிரார்த்திப்பதை விட்டு, ஏதோ கடமைக்குச் செஞ்சோம், ஏதோ பரிகாரம் செஞ்சோம், பலன் கிடைக்கவில்லை என்பதுதான் உன் நிலை, ஸ்ரீராமானுஜர் தன்னைக் கொல்ல முயற்சித்த குருநாதர் யாதவ பிரகாசரிடமிருந்து தப்பித்து விந்தியமலைப் பிரதேசத்திலிருந்து தேவப்

பெருமானின் கருணையால் மறுநாள் காலை காஞ்சிபுரத்தில் இருந்ததை நினைத்துப் பார், இவையெல்லாம் பகவானின் எல்லையற்ற கருணையை வெளிப்படுத்துகிறதல்லவா..? இதையெல்லாம் எடுத்துச் சொன்னா நீ புரிஞ்சுக்க மாட்டாய், ஏதோ ஆத்துக்கு வந்த மாட்டுப் பெண்கிட்டதான் கோளாறுன்னு நினைச்சிண்டு எவ்வளவு தடவை வத்சலாவை டார்ச்சர் பண்ணி இருக்கே, ஆனா அந்த பொண்ணு நம்ம ஸ்ரீராம்கிட்ட இருக்கிற குறையை தன் மேல் போட்டுண்டு , நீ திட்டும் போதெல்லாம் மௌனமா இருந்தா, இப்ப நிஜம் நிறம் மாறும்போது எவ்வளவு ரணமாய் இருக்கு பாத்தியா! இப்பவும் சொல்றேன் நம்பிக்கையோடு ஸ்ரீ ராஜகோபாலன்கிட்ட ஸ்ரீராமையும் வத்சலாவையும் அழைச்சிண்டு போய் சந்தான கோபாலனை எழுந்தருளப் பண்ணு, நிச்சயம் பலன் கிடைக்கும்.”

இந்தச் சம்பவம் நடந்து இரண்டு மாதமாகி இருக்கும், வத்சலா கருவுற்றிருந்தாள். காலண்டரில் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டு தங்க சூரியப் பறவை வாகனத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீராஜ கோபாலனைப் பார்த்து மானசீகமாக தெண்டனிட்டாள் வத்சலா.

**- பாஞ்சஜன்யம் ஜூன் 2006**

# 15. தெய்வமும் மனிதன் ஆகலாம்

வெள்ளிக்கிழமை இரவு எட்டுமணி.சாப்பிடஉக்கார்ந்த நேரம் .

செல்.அடிக்கவே, பார்த்த போது கிராமத்திலுருந்து அக்கா .

“என்ன. விஷயம் அக்கா?”

ஸ்பிக்கரில் போட்டு கேட்டதால், வித்யா புரிந்து கொண்டாள்.

“சரி சரி சீக்கிரமா கிளம்புங்க.”

”ஏடி எம் கார்டு எடுத்துட்டு போறேன்’ .

“போற இடத்திலே ஏ டி எம் ஒர்க் பண்ணலை? என்ன செய்வீங்க?”

“அதுவும் கரெக்ட் தான்”

பக்கத்தில் தான் ஏ டி எம். செலவுக்கு பணத்தை எடுத்து கொண்டேன்.

மலைமேல் இருந்த முருகனை, வீட்டிலருந்தபடியே கும்பிட்டேன்.

“ஜாக்கிரதை”“பஸ்லே தூங்காதீங்க”

பழனியில், பஸ் ஏறியவன் மன்னார்குடி வரை, பையை தொட்டு பார்த்து கொண்டே வந்தேன்.

பஸ்சை விட்டு இறங்கிய போதுஅதிகாலை3.30 மணி. முருகவிலாஸ் கிளம்ப ரெடியா இருந்தது.

அந்த நேரத்தில் பஸ்சில், மொத்தம் 12 பேர் மட்டுமே இருந்தார்கள். எப்போதும் கூட்டம் கொஞ்சமாக தான் இருக்கும் .

பஸ் கிளம்பி பஸ்ஸ்டாண்ட் தாண்டி, தேரடி, ருக்மணிப்பாளயம் குளம்,கான்வென்ட், முனிசிபல் ஆஃபீஸ், மூணாம் தெரு, புது தெரு வரைக்கும் யாரும் ஏற வில்லை.

கீழப்பாலம் முருகன் கோயில் ஸ்டாப் வந்ததும் ,12 அல்லது 14 வயது பையன் ஏறி, என் பக்கத்தில் அமர்ந்தான்.

எனக்கு தூக்கம் கண்ணை சுழட்டியது .இன்னும் கொஞ்ச தூரம் தான் ஊர் வந்துவிடும்.தூங்ககூடாது.நிறம் மாறும் நிஜம்

கையிலிருந்த வாட்டர் பாட்டிலிருந்து, கொஞ்சம் தண்ணீரை, கர்ச்சிப்பில் தெளித்து கண்களை துடைத்துகொண்டேன்..

அவனிடம் பேச்சுகொடுத்தேன்.

“நீ எங்கே தம்பி இறங்கனும்?” உன் பேரு என்ன?”

“பேரு தண்டபாணி.சார் !காந்தி சத்திரம் ஸ்டாப்க்கு அடுத்த, ரைஸ் மில் ஸ்டாப்பில் இறங்குவேன் சார்” என்றான்.

.“நீங்க எங்கே இறங்க போறீங்க?”

நானும் போகிற இடத்தை சொன்னேன்.

“என்ன சார்! அடிக்கடி பையை தொட்டு பார்த்துட்டு. வரிங்கே?”

அவன் கேள்வி கேட்டது சுறுகென்றது.என்னை இன்னும் பை மேல் கவனம் கொள்ள செய்தது.

“ஒண்ணுமில்ல”?

கடிகாரத்தை பார்த்தபோது மணி அதிகாலை 0410 காட்டியது.

இதோ போலீஸ் ஸ்டேசன் ஸ்டாப் வந்து விட்டது.

அடுத்த ஸ்டாப்ல தான் , நான் இறங்கனும் . .

“காந்தி சத்திரம் ஸ்டாப் இறங்குங்க” கண்டக்டர் குரல் கொடுத்தார்.

திடீரென என்னோடு அவனும் இறங்கினான்.

”ஏம்பா நீ அடுத்த ஸ்டாப் தானே இறங்கனும் ?

ஏன் இங்கு இறங்கினான் ”?என் மனதில் ஆயிரம் கேள்வி ஓடியது

”இல்லை சார் !ஒங்க தெரு ஒட்டி, முள்ளியாரு போறபக்கத்தில்

வாய்க்கால் ஓடுதுல்ல.அந்த வழியா போன ஷார்ட் கட் சார்.”

அவன் சொன்னது சரிதான் . இந்த ஊரில் பிறந்து வளர்ந்தவன். என்றாலும் எனக்குள் பயம் அதிகமானது .

அக்கா வீடு அஞ்சாறு வயல் வரப்பை தாண்டி தான் போகணும்..

மழையாக இருந்தாலும் சரி, வெயில் காலமாக இருந்தாலும் சரி, எப்போதும் அப்படித்தான் போகும் பழக்கம்.

ஊரை சுற்றி ரோடு வழியாக போனால், 2 கி. மீ. சைக்கிள் அல்லது டூ வீலர் மூலம் போகலாம்..

அவன் பையிலுருந்து பள பளப்பாய் எதையோ எடுத்தான் .

கத்தி வைத்துருப்போனோ? நான் நினைத்தது சரிதானா?பயம் தொற்றி கொள்ள, சே,சே !அது டார்ச்லட் .

லைட்டை அடித்து வரப்பை பார்த்தான்.

“சார் வரப்பு பயங்கர சேறு.” இரவு மழை பெயத தினால் வரப்பு சேறும் சகதியமாக இருக்கு சார்.” என்னாலேயே இந்த வரப்பிலே நடக்க முடியாது வழுக்கி விழந்துடுவேன்.. ஒங்களுக்கும் முடியாது சார்.”

அதிகாலை இருட்டு சேற்றில் ,காலை வைத்து வழுக்கி விழுந்து, இல்லாட்டி

அவன் என்னை தள்ளி விட்டு , தாக்கிட்டு பையை பிடிங்கிக்கிட்டு போனால்?

ஆள் நடமாட்டம் வேறு இல்லை. கத்தியால் குத்தி வாய்க்காலில் புதைத்து விட்டு போனால்?.

இந்த காலத்தில் பெரிய கொள்ளைக்காரங்களை விட, சின்ன பசங்க காரியத்தை கச்சிதமான முறையில் முடிச்சுட்டு, சிட்டா பறந்துடுவாங்க.

சார்!சார்!ஹெட்மாஸ்டர் வீட்டுக்கு தானே போறீங்க”

எப்படி கண்டு பிடிச்ச?

அவர் முக ஜாடை இருக்கவே சொன்னேன் சார்.

“ஆமாம்.”.என் தாய் மாமன் தான் அவர்.

இவன் சொல்லும் பாதை எனக்கும் தெரியும்... 2 கி. மீ சுத்தி வேறு போகணும். கரடு முரடான பாதை வேறு .அடப்பாறு தாண்டி தெருவில் நுழையும் முன்பு, தெரு நாய்கள் ஒன்று சேர்ந்து குறைக்கும்;சமயத்தில் கடித்து விடும்.

அவைகளை சமாளித்து, கொஞ்ச தூரம் போனால், அடர்ந்த இலுப்பை மரங்கள் காடு .ஜன நடமாட்டம் இல்லாத பகுதி .நரிகள் ஊளையிடும் ஆந்தை அலறும். கோட்டான்கள் கத்தும் . மரங்களின் கிளைகள் காற்றில் அசையும் போது, ஏதோஒரு அமானுஷ்ய சத்தம் கேக்கும். பேயும் பிசாசும் அதிகாலை நேரம் வரை உலாவும் என்று அக்கா அடிக்கடி சொன்னது ஞாபகத்துக்கு வந்தது .

நான் தயங்கினேன் ஏற்கனவே கை கால் சோர்வு. தூங்கமா இரவு முழுவதும் பஸ் பிரயாணம்; அசதி அதிகமாக தெரிந்தது.

நான் தயங்கியதையும் யோசித்ததையும் தெரிந்து கொண்டு,

“சார் என்ன யோசிக்கிறீங்க? வாங்க போகலாம்”.

வேறு வழியில்லை; அந்த பாதையில் தான் ஊர் போய் சேரவேண்டும் .

திரும்பவும் ரிவர்ஸல போய், அடப்பாறு தாண்டி தெருவில் நடந்த போது, நாய்கள் குறைத்து கொண்டு என் அருகில் வந்தன. நல்ல வேளை தண்டபாணி விரட்டியதும் எனக்கு நிம்மதி.

அக்கா சொன்ன இலுப்பை காட்டை தாண்டும் போது , ஒரு வித சப்தம்.எங்கோ நரிகள் ஊளை யிட்டுக் கொண்டுருந்ததை கேட்க நேர்ந்தது.என்னை அறியாமல் அக்கா எப்போவோ

சொன்னது திரும்ப திரும்ப ஞாபகத்துக்கு வந்தது. அமானுஷ்ய சத்தம் பயத்தை கூட்டியது.

அதேசமயம், நான் சற்றும் எதிர்பார்க்காத அந்த சூழலில், இவன் தன் பையிலிருந்து பளபளபானஒன்றை எடுத்தான்.

கர்ச்சிப்பில் அந்த பொருளை, கொஞ்ச கொஞ்சமாக கொட்டினான், கையால் நசுக்கினான், கர்சிப்பை இரண்டாக மடித்தான் .

தன் முகம் அருகே கொண்டு போய் பிறகு அனிச்சையா உடனே எடுத்தான் .

மயக்க மருந்து வைத்திருப்பானோ? .என் முகத்தில் காட்டி மயக்கமாக்கி ,இலுப்பை காட்டிலே தூரத்தில் விட்டு விட்டு என் பையில் உள்ள பணம் , மோதிரம் கழுத்தில் உள்ள சங்கிலி வாட்ச் எல்லாவற்றையும் எடுத்து கொண்டு ஓட திட்டம் வைச்சுருப்பானோ?

அவன் 14 வயசு. திமிர் கொண்ட காளை மாதிரி உடம்பு . வயசு பையன்.அவனால் எதுவும் முடியும் ;சாத்தியமும் கூட.

நான் 55 வயசு அவனை தாக்கி விட்டு ஓடலாம், ஆனா முதலில் இருட்டில் இந்த பாதை தெரியாது.இரண்டாவது, 55 வயது ஆன நான் ஓடி போனாலும், சிறுத்தை வேகத்தில் என்னை பிடித்து விடுவானே?

ஆபத்து சமயத்தில் காயத்ரி மந்திரத்தை உச்சரிப்பது தான் உசிதம். “ஓம் !ஓம் பூ பூர்சவ!” மனதுக்குள் உச்சரித்தேன்.

தண்டபாணி உன்னை நம்பி வந்துருக்கேன் காப்பாத்து!நான் பழனி தண்டபணியை கூப்பிட, வேகமாக என் குரல் அவனுக்கு கேட்டிருக்க வேண்டும்.

அவனை கூப்பிட்டதாக நினைத்து என் பக்கம்.பளபளப்பான அந்த வெள்ளை பேப்பரைஎன் அருகே . கொண்டு வந்தான். என் உடல் நடுங்க ஆரம்பித்தது.

“ஐயோ அக்கா என்னை மன்னித்து விடு”உன்னை பார்க்காமலே என் உயிர் போயிடும்ன்னு தோணுது..

பின் என்ன நினைத் தானோ கொஞ்சம் 10 அடி தள்ளி வேகமாக ரிவர்ஸ் போய்.

அங்கிருந்தே “,ஒரு நிமிஷம் சார் !”

எதுக்கு இவன் ஒரு நிமிஷம் பெர்மிஷன் கேட்கிறான்? மயக்க மருந்தை சரியான விகிதத்தில் கலக்க நேரம் கேட்பது போல் தோன்றியது.

அவன் மயக்க மருந்தை சரியான விகிதத்தில் கலக்ககுவதற்கு முன் ?.

நாம் முழு பலம் கொண்டு ஓடலாமா?ஓட முயற்சிக்க செய்தேன்.

“சார் இருங்க சார் எங்க கிளம்பிட்டங்க?”ஒண்ணுக்கு போயிட்டு வந்துடறேன்.சிறுநீர் கழித்து எழுந்த பின் ,கர்ச்சிப்பில் இருந்ததை, வாயில் போட்டு கொண்டான் .

“சாரி சார் .இந்த பாழாபோனா பான் பாரக் பழக்கம் தொத்திகிச்சு சார்”.

“ராத்திரி வெல்டிங் கடையில வேலை பார்க்கும் போது பழக்கமாயிடுச்சு சார்.”

“ஒங்க முன்னாடி போட சங்கடமா இருந்துச்சு சார்.!” அதான் ஒதுங்கினேன். மன்னிச்சுடுங்க சார்”.

என்னை நானே என் கையில் கிள்ளிக்கொண்டேன்.

அப்பாடி! ஒரு பெருமூச்சு விட்டேன் நான் நினைச்சது எதுவும் நடக்கலை.

பேசி கொண்டே வந்தான் “அப்பா செத் துட்டாரு சார்!அம்மாவும் நானும்தான் .வாரம் இரண்டு வாட்டி அம்மாவை பார்ப்பேன் சார்”.

அவன் சொன்னவை எதுவும் என் காதில் விழவில்லை. என் சிந்தனை இவனை எப்படி நம்புவது?.எவ்வளவு சீக்கிரம் இவனிடமருந்து தப்பி வீடு போய் சேருவது?.

என்கிற நினைப்பில் இருந்ததுஅதற்குள் முள்ளியாரு வந்தது .இனிமே பயம் இல்லை ” நான் போய் கொள்கிறேன் .நீ இடது பக்கம் போ.ரொம்ப நன்றி”

”நான் சொன்னதை எதுவும் கேக்கமால் என் பதிலுக்கு காத்திராமல், கூடவே என்னுடன் வந்தான்.

இன்னும் இருட்டு விலகல சார்.“ஒங்க தெரு முனயில நாய்கள் தொல்லை அதிகம் சார். பழக்கப்படாதவங்க, புதுசா யாரும் வந்தா, கடிச்சு கொதறும்.”

“நம்ம ஹெட்மாஸ்டர் வீடு தானே !வீடு வரைக்கும் வரேன் சார். பேசாமா வாங்க!”

இவ்வளவு பேசினாலும் ஆற்றை தாண்டுவதற்கு முன் , கடைசி வாய்ப்பாக என்னை தாக்கி பை சங்கிலி பிடுங்கி கிட்டு ஆத்துலே தள்ளிட்டு அவன் வீட்டுக்கு சிட்டா பறக்கலாம் என்னுள் அந்த சந்தேகம் வந்தது.

என் சந்தேகத்துக்கு உயிர் கொடுத்த மாதிரி, நான் நினைத்த மாதிரி பாலம் நடுவில் வந்து என் அருகில் நின்றான். ஆற்றில் தண்ணீர் கரை புரண்டு சென்றதை தன் டார்ச் மூலம் பார்த்தான்.

வேக வேகமாக பையிலுருந்து கத்தியை எடுத்தான். ”ஐயோ! தேன் ஒழுக நல்லவன் மாதிரி பேசி..... பேசி, கடைசியில் என்னை கொன்று விட்டு ஆற்றில் போட்டு விட்டால்?

“திருப்பத்தூர் சட்ரஸ் கிட்டேதானே பிணம் ஒதுங்கும்”. அய்யோ தண்டபாணி காபாத்து”

“சார் என்ன ஆச்சு?”

ஒன்னுமில்ல. இரண்டாம் முறையாக காயத்ரி யை ஜபித்தேன் மனசுக்குள்.

“அம்மாவுக்கு பழங்கள் வாங்கினேன் .எனக்கு பாடம் சொல்லிக் கொடுத்த வாத்தியார். அவருக்கு இந்த பழங்களை கொடுங்க சார்”

மாதா பிதா குரு தெய்வம் சார்.

குருவுக்கு காணிக்கையா ஆப்பிள் இரண்டு, மாதுளம் இரண்டு ,கமலா ஆரஞ்சுஇரண்டு எடுத்து என்னிடம் கொடுத்து,

“சார்கிட்ட கொடுத் துடங்கடுங்க சார்”

பின் கத்தியை உள்ளே போட்டான் .

ஒரு வழியா வீடு வரைக்கும் வந்ததும், கதவை தட்டினேன்.அக்கா திறந்தாள்.

“அக்கா ஒரு பாய் தலயனை போர்வை கொடு”“தண்டபாணி இனிமே நீ வீட்டுக்கு போய் என்ன செய்ய போறே.?”இங்கே திண்ணையில் படு. மணி 5 ஆயிடுச்சு. காலையில காபி சாப்பிட்டு கிளம்பலாம் சரியா?”

.“சரி சார்”என்றான்

” எங்கே அந்த பையன்நீகொல்லை புறம் பாத்ரூம் போயிட்டு வரத்துக்குள்ளே, நான் பாய் தலையணை கொண்டு வந்து அவனை பார்த்தேன் வாசு.

அவனை காணும்.?

நானும் நடு தெருவில் வந்து இரண்டு பக்கமும் பார்த்தேன் ”

அக்கா வீடு அக்ரஹாரத்தின் நடுவில்.மேற்கே பெருமாள் கோயில் கிழக்கே முருகன் கோயில். அவ்வளவு சீககிரத்தில் மறைய முடியாது .

ஒரு நிமிடம் கூட ஆகி இருக்காது.

அதற்குள் எப்படி காணாமல் போயிருக்க கூடும் ?

கண் எட்டிய தூரம் வரை தண்டபாணி தென்படவில்லை! கூப்பிட்டு பார்த்தேன்.

”ம்ம் பிரயோசனமில்லை.

திடீரென மாமாவுக்கு, ஹார்ட் அட்டாக் வைத்திய செலவுக்கு , கொண்டு வந்த ஒரு லட்சம் பணம். ,

பத்திரமாக அக்காவிடம் கொடுக்க வந்தவனுக்கு . துணைக்கு வந்தது ,அந்த பழனி தண்டபாணி தானோ?

“விடை தெரியாத வினா?”மானசீகமாக முருகனுக்கு நன்றி கூறிவிட்டு, வித்யாவுக்கு, நடந்த விஷயத்தை சொல்ல போனை எடுத்தேன் .

- ஆரண்ய நிவாஸ் ஜனவரி 2024

# கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

- **கணியம் மின்னிதழ்** kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- **கட்டற்ற தமிழ் நூல்கள்** FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.
- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

**நன்கொடை**

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

**Account Type : Current Account**